உ

# கந்தபுராணம்

## சூரபன்மன் வதைப் படலம்

(பொழிப்புரை)



அச்சுப் பதிப்பு

ஸ்ரீ சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம்.

உ

# கந்தபுராணம்

## சூரபன்மன் வதைப் படலம்

(பொழிப்புரை)



அச்சுப் பதிப்பு :

ஸ்ரீ சண்முகநாத அச்சகம், யாழ்ப்பாணம்.

முதற் பதிப்பு 1965.
விசுவாவசு ஐப்பசி.



விலை ரூபா 5/-

உ

ஓம் முருகா

# முன்னுரை

அரியானை அந்தணர்தம் சிந்தையானை அருமறையின்
அகத்தானை அணுவை யார்க்கும்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத் திகழ் ஒளியைத்
தேவர்கள் தம் கோனை மற்றக்
கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக் கனைகடலைக்
குலவரையைக் கலந்து நின்ற
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத
நாள் எல்லாம் பிறவா நாளே.

சைவ நன்னெறியின் வழிகாட்டிகளாய் விளங்கிய நால்வர் பெருமக்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனார் சிவபெருமானுடைய பெரும் புகழைப் பேசாதநாட்கள் எல்லாம் பிறவாத நாள் என்று சொல்லுகின்றார். சிவநெறியாகிய செந்நெறியில் வாழும் மாதவம் செய்த மக்களாகிய நாம், ஒவ்வொருநாளும் இறைவன் புகழைப் பேசவேண்டும் என்பது அவனுடைய ஆணை.

சிவநெறிச் செல்வர்களாகிய நாம் தினந்தோறும் ஆலயங்களுக்குச் சென்று வழிபடவேண்டும். அவ்வழிபாட்டில் முக்கிய அம்சமாக இறைவன் புகழைப் பாடுதலும் பேசுதலும் அமையவேண்டும். நாம் எல்லோரும் தினந்தோறும் ஆலயங்களுக்குச் செல்ல அவகாசம் இல்லாதிருப்பின், சிவபுண்ணிய காலங்களில் தவறாமல் ஆலயங்களுக்குச் செல்லவேண்டும். சைவசமய சிவபுண்ணிய காலங்களில், ஐப்பசி மாதத்தில் வருகின்ற கந்த சஷ்டித் தினங்களும், மார்கழி மாதத்தில் வருகின்ற திருவெம்பாவைத் தினங்களும் மிகமிகச் சிறந்த சிவபுண்ணிய காலங்களாகும்.

கந்தசஷ்டித் தினங்களிலே கந்தசுவாமியாருக்கு விசேட அபிஷேகம், பூசை செய்து திருவிழா எடுப்பதுடன் அவருடைய பெரும்புகழ் பேசப் படுகின்றது. கந்தனுடைய பெரும் புகழைப் பேசும் நூல் கந்தபுராணமாகும் அப் புராணம் சித்தாந்தப் பொருள் நிறைந்த சிவபுராணமாகும் கந்த சஷ்டித்தினங்களாகிய ஆறு நாட்களிலும், சுப்பிரமணியப் பெருமான் சூரபன்மனாகிய ஆணவமலத்தின் வேகத்தைத் தடிந்து, அந்த ஆன்மாவுக்கு அருள் பாலித்தருளினார். அந்த அற்புதமான கதை கந்த புராணத்திலே சூரபன்மன் வதைப்படலத்தில் அழகாகக் கூறப்படுகின்றது. கந்தசஷ்டித்தினங்களில் சூரபன்மன் வதைப்படலம் வாசிக்கப்பெற்றுப், பொருள் கூறும் வழக்கம் பண்டுதொட்டு முன்னோரால் போற்றப்பெற்று

வ
ஒந்தது. இக்காலத்திலே அதன் அருமை பெருமைகளை உணராது,
எருசிலர் மாத்திரம் படிப்பதும் கேட்பதுமாயிருக்கின்றனர். ஆதலினாலே
வில்லோரும் படித்துப் பயன்பெறும் முறையில் அந் நூலைப் பொருள்
எளங்கப் பதிப்பதுடன், அதற்கு ஒரு பொழிப்புரையும் எழுதவேண்டும்
இன்ற நல்லெண்ணம் இறைவன் திருவருளால் எங்களுக்குத் தோன்றியது.
வந் நூலில், செய்யுள்களை இலக்கண விதிப்படி புணர்த்திப் பதிப்பதனால்
புாசிப்பதில் மக்களுக்கு ஏற்படும் இடரை நீக்க விரும்பி, கூடிய வரையில்
தணர்ச்சி பிரித்து விளங்கக் கூடியதாகப் பதிப்பித்தோம். பெருங்கருணைத்
டெங்கடலாகிய ஆறுமுகப் பெருமானின் திருவடிகளைத் துணையாகக்
றுகாண்டு, இவ்வரும் பணியைச் செய்தோம். சைவ உலகம் இதனை ஏற்
ப், போற்றிப் பெருவாழ்வடைவதாகுக.

சி. மருதபிள்ளை (ஆசிரியர்)
தா. சிவகுருநாதன்

வட்டுக்கோட்டை.
1-10-65.

---

உ

# கதைச் சுருக்கம்

அசுரர்களுக்கு அரசனாகிய அசுரேந்திரனுடைய மகள் சுரசை என்பவளுக்குக் குலகுருவாகிய சுக்கிரபகவான் மாயவித்தைகள் கற்பித்து வல்லவளாக்கினார். அதனால் அவளுக்கு மாயை எனப் பெயரிட்டார். அவர் மாயைக்குக் கூறிய அறிவுரைப்படி, அவள் காசிபமுனிவருடைய தவச்சாலையை அடைந்து தனது மாயையினால் அவரைத் தன்மேல் மோகம் கொள்ளச் செய்தாள். அதனால் அவள் சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் என்ற மூன்று புதல்வர்களையும் அசமுகி என்னும் புதல்வியையும் பெற்றாள். சூரபன்மனும் தம்பிமாரும் பெருஞ் செல்வத்தையும், உலக இன்ப வாழ்க்கையையும், அழிவில்லாத ஆயுளையும் விரும்பிப் பரமசிவனைக் குறித்து வீரயாகம் செய்து பெருந்தவம் புரிந்து அப்பேறுகளைப் பெற்றார்கள்.

சூரபன்மன் தேவர்களை இடர்ப்படுத்தி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஆண்டுகொண்டிருந்தான். சூரபன்மனால் வருந்திய தேவர்கள் கைலாசபதியிடம் சென்று வணங்கி முறையிட்டார்கள். அவர் இரங்கி ஆறுமுகம் கொண்டு வீற்றிருந்து ஆறுநெற்றிக் கண்களினின்றும் ஆறு தீப்பொறிகளை உண்டாக்கினார். ஆறு பொறிகளையும் வாயுவிடம் கொடுத்தருளினார். அவன் தாங்கமாட்டாது அக்கினி தேவனிடம் தந்தான். அக்கினியும் தாங்காது கங்கையில் விடுத்தான். கங்கையின் அருகில் உள்ள சரணப்பொய்கையில் முருகப் பெருமான் ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு தோள்களும் பதினெட்டுத் திருக்கண்களுமாகி உலகம் உய்ய அவதரித்தார்.

கார்த்திகை மாதர்கள் அறுவரும் எடுக்க ஆறு குழந்தைகளானார். அவர்கள் பால்கொடுத்து வளர்த்தார்கள். சிவபிரான் உமையுடன் சரவணப் பொய்கைக்குச் சென்றார். அம்பிகை ஆறு குழந்தைகளையும் எடுத்து அணைக்க, ஆறு திருமேனியும் ஒன்றாகப் பொருந்தப் பெற்றதனால் கந்தன் என்ற பெயர் உண்டாயிற்று. முருகன், கார்த்திகேயன், காங்கேயன், சரவணபவன் என்ற பெயர்களும் அவருக்கு வழங்கலாயின.

அமரர்கள் அனைவரும் சிவபெருமானிடம் வந்து தங்கள் துன்பத்தை நீக்கும்படி வேண்டினார்கள். சிவமூர்த்தி பதினொரு உருத்திரர்களைப் பதினொரு ஆயுதங்களாக்கியும், ஞான சக்தியை வேற்படை யாக்கியும் திருமுருகனிடம் தந்து இலக்கந்தொன்பது வீரருடனும் இரண்டாயிரம் பூதசேனைகளுடனும் போருக்கு அனுப்பியருளினார்.

ஆறுமுகக் கடவுள் சூரபன்மனுடைய தம்பிமார்களோடும், புதல்வர்களோடும், சூரபன்மனோடும் போர்செய்து அவர்களை அழித்துத் தேவர்களுக்குப் பெருவாழ்வை அருளினார். பின்னர் இந்திரன், மகளாக வளர்த்த தெய்வயானை யம்மையாரையும், வேடர்ராசன் வளர்த்த வள்ளியம்மையாரையும் அவர்களின் முன்னைத் தவம் காரணமாகத் திருமணம் செய்துகொண்டு கந்தகிரியில் எழுந்தருளியிருந்து எல்லா உயிர்கட்கும் இன்னருள் பாலித்தருள்வாராயினர்.

# அணிந்துரை

கொள்கை, சாதனம், அநுபவம் என்று மூன்று முக்கிய பிரிவுகள் எல்லாச் சமயங்களுக்கும் உண்டு.

ஒவ்வொரு பிரிவுக்கும் சிறப்பு நூல்களும் உண்டு.

எங்கள் சைவசமயத்தின் கொள்கைகளை வேதங்களும் ஆகமங்களும் கூறுகின்றன. எனினும் அவற்றைத் தர்க்கரீதியாக நிரல்பட வகுத்தும் தொகுத்தும் தெளிவுபட விரித்துக் கூறும் சிறப்பு நூல்கள் மெய்கண்ட சாத்திரங்களேயாகும்.

சாதனப்பகுதிக்குரிய ஆலய அமைப்பு, வழிபாட்டு முறைகள், விரதங்கள், சடங்குகள் முதலியவற்றைக் கூறுவன சைவ ஆகமங்கள்.

'நாயகன் சேவடி எய்தப்பெற்று, இன்பவெள்ளத்திடை மூழ்கி நின்றே, இன்னிசை வண்தமிழ் பாடிய' எங்கள் அநுபூதிச் செல்வர்கள் அளித்துள்ள அநுபவ அமுதத் திருமுறைகளே எங்கள் சமயத்தின் அநுபவப் பகுதியின் அணையாப் பேரொளி விளக்கு

வேதாகமங்களையும், மெய்கண்ட சாத்திரங்களையும், திருமுறைகளையும் கற்றுத் தெரிதலும் அவைவாயிலாகச் சைவ தத்துவாதி சீலங்களை உணர்தலும் சாதாரண மக்களுக்கு இயலாது.

தத்துவ ஆராய்ச்சி பாமரமக்களுடைய அறிவு நிலைக்கு அப்பாற்பட்டது.

ஞானத்தினை நேரே நுகரும் ஆற்றல் சாதாரண மக்களுக்கு இல்லை.

ஆகவே, தத்துவங்களைக் கதைகள் வாயிலாக உணர்த்தும் யுக்தியே சிறந்தது எனப் பண்டே உணர்ந்தனர் நம்முன்னோர்.

அந்த யுக்தியின் விளைவாக எழுந்த நூல்வகையே புராணம்.

தத்துவங்களை விளக்கம் செய்யும் புராணங்களுள் தலையாயது கந்தபுராணம்.



தத்துவங்களை உருவகப்படுத்திக் கேட்போர் சிந்திப்போர் சிந்தையில் தெய்வமாட்சியின் பெருமையையும் மனித ஆற்றலின் சிறுமையையும் ஆழமாகப் பதியவைக்கும் ஆற்றலில் கச்சியப்பர் தந்த கந்தபுராணத்திற்கு நிகராக வேறு எந்தப் புராணத்தையும் கூற இயலாது.

ஆங்காரமே ஆத்மீகத்தின் அழியா நெடும்பகை; நான் என்னும் முனைப்பு அழிந்த இடமே ஞான உதயம்; மனித நெஞ்சத்தில் இடையறுது ஊறிப்பெருகி நிற்கும் அல்லற் பெருநோயாம் அகந்தைக்கு ஆண்டவன் அருள் ஒன்றே மருந்து; தீராநோய் தீர்ப்பவன் அவனே; என்றெல்லாம் ஞான சாத்திர அநுபூதி நூல்கள் இயம்புகின்றன.

இந்த அடிப்படை ஞான உண்மையை ஒரு மாபெருங் கதையாக்கி - ஞான காவியமாக்கி - சுவை போர்த்த மருந்துக் குளிகையை நோயாளிக்கு ஊட்டி நோயைத் தீர்க்கும் முறையில் பாமரமக்கள் உள்ளங்களில் ஞானச் சுரப்பைக் கந்தபுராணம் நீண்டகாலம் நமது நாட்டில் உண்டாக்கி வந்திருக்கின்றது.

ஆங்காரம் தோன்றி வளர்ந்து மடிந்த வரலாறே சூரபன்மன் கதை.

உழுது பண்படுத்தப்பட்ட நிலத்தில் தூவிய விதைக்குத் தான் வாழ்வு உண்டு.

சூரபன்மன் கதையைப் பயின்று பக்குவப்பட்ட நெஞ்சிலே 'மதியால் இந்த அனைத்துலகும் ஆளலாம் என்று பேசும் ஆங்காரம் தவிர் நெஞ்சே' என்று எங்கள் ஞானகுரவர்கள் தூவும் ஞான விதைகள் கட்டாயம் முளைகொண்டே தீரும். இது வரலாறு கண்ட உண்மை.

எங்கள் நாட்டில் இந்தச் சந்ததிக்கு முந்திய பல சந்ததிகள் பக்திஞான வாழ்வில் ஆசையும் ஈடுபாடும் உடையனவாய் இருந்தமைக்குக் காரணம் கந்தபுராணத்தின் பரந்த பயிற்சியே என்பது மறுக்கமுடியாத சரித்திரச் செய்தி.

'நீளும் இத்தொண்டின் பெருமை நினைக்கின்யாரே அளக்க வல்லார்' என்று சொல்லும் அளவிற்குச் சில நூற்றாண்டுகளாகக் கந்தபுராணம் இந்த நாட்டில் சைவம் பெருக்கி எமது

மக்கள் இன்ப சாந்த வாழ்வில் திளைக்கும்படி நீண்ட தொண்டு செய்திருக்கின்றது.

இப்போது பலவகையிலும் வீழ்ந்து கிடக்கும் தமிழினம் மீண்டும் உயர்ந்து உய்யவேண்டுமெனில் கந்தபுராணத்தை யாண்டும் படிக்கவைத்தல் வேண்டும் என்று அண்மையில் எம்மைவிட்டுப் பிரிந்த ஞானச் செல்வராகிய யோக சுவாமிகள் சைவமக்களுக்கு விடுத்த அன்புக் கட்டளையையும் நினைவு கொள்ளல் நல்லது.

ஜீவசக்தி வாய்ந்த ஞான காவியமாகிய கந்தபுராணத்தைப் பயின்று பயன்பெறும் ஊக்கம் இப்போது நாட்டில் முகிழ்த்திருப்பது கண்டு மகிழ்ச்சி.

இந்தக் காவியமோ நீண்டது. இதற்கு உரைவிளக்கம் கிடைப்பதும் அரிது.

இந்த நிலையில் இந்தப் புராணத்தின் அதிமுக்கியப்பகுதியாகிய சூரபன்மன் வதைப் படலமாகுதல் யாவர் கையிலும் கிடைக்கும் வகை செய்தல் காலத்துக்கேற்ற ஒரு சிறந்த தொண்டு என உணர்ந்தனர், அன்பர்கள் திரு. தா. சிவகுருநாதன் அவர்களும் திரு. சி. மருதபிள்ளை ஆசிரியர் அவர்களும்.

இந்நூலுக்கு ஒரு சிறந்த பொழிப்புரையையும் அரும்பத விளக்கத்தையும் அரிதின் முயன்று ஆக்கித்தந்த இவர்களுடைய தொண்டிற்குச் சைவ உலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது.

திருமுறைப் பற்றிலும் ஏனைய செந்தமிழ்க் காவியப் பற்றிலும் சிறந்து விளங்கும் நண்பர் சிவகுருநாதன் அவர்கள் சைவ புராணங்களில் புலமையும் பெரும்பற்றுமுடையவராய ஆசிரியர் மருதபிள்ளை அவர்களோடு இணைந்து நின்று செய்யும் சைவப் பிரசாரத் தொண்டு தொடர்ந்து நடைபெறுக என்று முருகப் பெருமான் திருவடிகளை வழுத்துகின்றேன்.

முதலியார் செ. சின்னத்தம்பி.

# பொருள் அடக்கம்

வாசிப்போர் பொருள் விளக்கம் தெளிவு கொள்ளும்படி பதங்களைப் பிரித்துச் செய்யுட்கள் அமைந்திருப்பினும், சந்தம் கெடாமல் கூட்டி வாசித்தலே கேட்போர்க்கு இனிமை கொடுக்கும்.

உ
கணபதி துணை

# சூரபன்மன் வதைப் படலம்

திருச்சிற்றம்பலம்

## விநாயகர் வணக்கம்

திகழ் தசக்கரச் செம்முகம் ஐந்து உளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாஉறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியில் மகுடம் மின்ன ஒளிர்தர நுதலின் ஓடை
வச்சிர மருப்பின் ஒற்றை மணிகொள் கிம்புரி வயங்க,
மெய்ச் செவிக் கவரி தூங்க வேழமா முகம் கொண்டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக்கு அன்பு செய்வாம்.

## சுப்பிரமணியக் கடவுள் வணக்கம்

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற ஈராறு தோள் போற்றி காஞ்சி
மாவடி வைகும் செவ்வேள் மலர் அடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி, திருக்கைவேல் போற்றி போற்றி.

## நூற்பயன்

இந்திரர் ஆகிப் பார்மேல் இன்பம் உற்று இனிது மேவிச்
சிந்தையில் நினைந்தமுற்றிச் சிவகதி அதனில் சேர்வர்
அந்தம்இல் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த செவ்வேள்
கந்தவேள் புராணம் தன்னைக் காதலித்து ஓதுவோரே.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நல்தவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்.

## நூல்

### சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் உள்ள சேனைகளைச் சேர்த்தல்.

கொற்ற வேற்படை பரித்திடும் ஆயிர கோடி
ஒற்றர் தங்களை நோக்கியே, சூரன் ஆம் உரவோன்
மற்று என் ஆட்சியாம் அண்டங்கள் எங்கணும் வைகிச்
சுற்று தானையைத் தம்மினே கடிதெனச் சொன்னான். (1)

சொன்ன காலையில் நன்று எனவணங்கியே தூதர்
பன்னரும் கதிகொண்டனர் விண்டனர் படர்ந்து
பொன்னின் மேதகும் அண்டங்கள் இடைதொறும் புகுந்து
மன்னர் மன்னவன் தன்பணி முறையினை வகுத்தார். (2)

வகுத்த காலையில் ஆண்டுறை அவுண மன்னவர்கள்
தொகுத்த நால்பெரும் தானையம் கடல்ஒடும் துவன்றி
மிகுத்த அண்டத்தின் புடைதொறும் புடைதொறும் மேல்நாள்
பகுத்து வைத்திடும் வாயிலின் நெறிகளால் படர்ந்தார். (3)

முந்தை அண்டத்தின் நெறிதனில் முழங்கு இரும் சேனை
வந்துவந்து இவண் செறிவன விதியொடு மாறுய்ச்
சுந்தரம் கெழு மாயன் இவ்வுலகு உயிர் துய்ப்ப
உந்தியின் வழிஅங்கு அவை தோன்றும் ஆறு ஒப்ப. (4)

பூதம் யாவையும் உயிர்களும் புவனம் உள்ளனவும்
பேதம் நீங்கிய சுருதி ஆகமங்களும் பிறவும்
ஆதி காலத்தில் அநாதிஆம் எம்பிரான் அளப்பில்
பாத பங்கயத்து உதிப்பவும் போன்றன பகரின் (5)



சூரபன்மன் வெற்றியைத் தரும் வேற்படைகளையுடைய கோடிக் கணக்கான ஏவலாளர்களைப் பார்த்து எனது ஆட்சியையுடைய ஏனைய அண்டங்களில் வாழும் சேனைகள் முழுவதையும் விரைவில் அழைத்து வரக் கடவீர் என்று பணித்தான். (1)

கொற்றம் = வெற்றி, பரித்திடும் = தாங்கிய, ஒற்றர் = ஏவலாளர், தானை = சேனை.

ஏவலாளர் அவனை வணங்கி ஏனைய அண்டங்கள் தோறும் சென்று அரசர்க்கும் அரசனாகிய சூரபன்மனது கட்டளையை அசுரத் தலைவர்களுக்குக் கூறினார்கள். (2)

விண்டனர் = சென்றனர், வகுத்தார் = கூறினார்.

அதனைக் கேட்ட அசுரத் தலைவர்கள் தாம் திரட்டிய நால் வகைச் சேனைகளுடன் அண்டங்களின் மேற் பக்கங்கள் தோறும் பகுத்து வைக்கப்பட்ட வாயில்களின் வழிகளால் சென்றார்கள். (3)

துவன்றி = நெருங்கி, நெறி = வழி, படர்ந்தார் = சென்றார்.

ஆரவாரிக்கின்ற அசுர சேனைகள் வந்து வந்து இவ் வண்டத்தில் சேர்ந்த செயல், அழகிய திருமாலானவர் பிரமதேவருடன் மாறு கொண்டு இப் பூவுலகத்தையும் இதன்கண் அமைந்த உயிர்களையும் விழுங்க, அத் திருமாலின் உதரத்தில் அடங்கியிருந்த உயிர்கள் உந்திக் கமலத்தின் வழியாகத் தோன்றிக்கொண்டிருந்த செயலை நிகர்த்தது. (4)

முந்தை = பழைய, விதி = பிரமா, துய்ப்ப = உண்ண.

சேனைகள் இவ்வண்டத்தினுள் புகுந்தமை ஐம் பூதங்களும், மூவகை ஆன்மாக்களும் அவ்வான்மாக்கள் வசிக்கும் புவனங்களும் வேதங்களும் சிவாகமங்களும் பிறவும் சிருட்டி ஆரம்பகாலத்தில் எமது இறைவராம் சிவபிரானது திருவடித் தாமரையினின்றும் தோன்றிக் கொண்டிருந்தலையும் நிகர்த்தன. (5)

புவனம் = உலகம், சுருதி = வேதம், பங்கயம் = தாமரை.

இனைய தன்மையால் அண்டத்தின் நெறிதனில் ஏகும்
வனை கரும்கழல் அவுணர்தம் படைஇவண் வரலும்
கனலி தனசுடர் மறைந்தன நடுங்கினன் கனலும்
அனிலன் தானும் மெய்வியர்த்தனன் நெருக்கமுற்று
அயர்வான். (6)

ஆர்த்த ஓசையால் அகிலமும் துளங்கிய அவுணர்
கார்த்த மெய்யொளி கதுவலால் இருண்டன ககனம்
தூர்த்த பூழியால் ஆழிகள் வறந்தன தூணைத்தாள்
பேர்த்து வைத்திடு தன்மையால் அண்டமும் பிளந்த (7)

கூடும் இப்பெரும் தானையை நோக்கி மெய்குலை வுற்று
ஓடுதற்கு இடமின்றி நின்று இரங்கினர் உம்பர்
வீடினான்என வாசவன் மருண்டனன் விதியும்
நீடு மாயனும் முடிவது என்னோஎன நினைந்தார். (8)

பூதலம்தனில் அம்பரநெறிதனில் புடைசூழ்
மாதிரங்களில் அளக்கரில் வரைகளின் வழியில்
பாதலங்களில் பிறவினில் அவுணர்தம் படைகள்
ஏதும் வெள்ளிடை இன்றியே சென்றன ஈண்டி. (9)

மலர் அயன்பதம் மால்பதம் முனிவர்கள் வைகும்
உலகம் வாசவன் தொல்நகர் ஏனையோர் உறையுள்
அலரி ஆதியர் செல்கதி நிலங்களில் அனிகம்
பலவு நின்றன செல்இடம் பெறாத பான்மையினால் (10)



அசுரசேனைகள் இவ் வண்டத்தில் சேர்ந்ததனால் சூரியனுடைய கதிர்கள் மறைந்தன. அதனால் அக்கினி தேவனும் குளிரினால் நடுங்கினான். வாயு தேவனும் நெருக்க முற்றுச் சோர்வனாய்த் தேகம் வியர்த்தான். (6)

கனலி = சூரியன், கனல் = அக்கினிதேவன், அனிலன் = வாயு தேவன்.

அசுர சேனைகள் ஆரவாரித்த சத்தத்தினால் பூமியில் உள்ள எல்லாப் பொருள்களும் நடுங்கின. அவர்களுடைய கரிய தேகங்களின் ஒளி பரந்து பற்றியதனால் ஆகாயத்தின் இடங்கள் இருண்டன. அவர்கள் சென்றபோ தெழுந்த பாத தூளிகளால் சமுத்திரங்கள் நீர் வற்றின. நடந்த தன்மையால் பூமியினிடங்களும் பிளவுற்றன. (7)

துளங்கிய = நடுங்கிய, ககனம் = ஆகாயம், ஆழி = சமுத்திரம்.

இப் பெரிய சேனைகளைப் பார்த்துத் தேவர்கள் உடல் பதறி ஓடுதற்கு இடமில்லாது நின்று மனம் வருந்தினார்கள். இந்திரன் இறந்தவன்போல மதி மயங்கினான். பிரமதேவரும் விஷ்ணு மூர்த்தியும் முடிவது யாதுதானோ என்று எண்ணினார்கள். (8)

குலைவு = பதறல், உம்பர் — தேவர், வீடினான் = இறந்தான், வாசவன் = இந்திரன், விதி = பிரமன்.

பூமியிலும் ஆகாய வெளியிலும் திக்குகளிலும் சமுத்திரங்களிலும் மலைகளிலும் பாதல உலகங்களிலும் அசுர சேனைகள் வெளியிடம் சிறிதுமில்லா வண்ணம் நெருங்கிச் சென்றன. (9)

அம்பரம் = ஆகாயம், மாதிரம் = திக்கு, அளக்கர் = சமுத்திரம், வரை = மலை.

பிரமதேவரது சத்திய உலகத்திலும் விஷ்ணு மூர்த்தியின் வைகுந்த உலகத்திலும் முனிவர்கள் வாழும் மகலோக தபலோகங்களிலும் இந்திரன் வாழும் சுவர்க்க உலகத்திலும் பிறவிடங்களிலும் சேனைகள் இடமில்லாமல் நின்றன. (10)

அலரி = சூரியன், அனிகம் = சேனை.

மாறிலாதன தொல்லை அண்டங்களின் வந்த
ஈறிலாததோர் தூசிகள் படர்ந்திடும் எல்லை
நூறுகோடி யோசனைகள் என்று அறிஞர்கள் நுவன்றார்
வேறுபின் வரும் தானையின் பெருமை யார் விதிப்பார். (11)

குறுமைஆம் உயிர் வாழ்க்கையர் கொண்ட தொல்வளம் போல்
சிறுமையோ இது விரித்திட அவுணர் கோன் சேனை
அறிஞர் கூறிய பெருந்தொகை தன்னினும் அடங்கா
பிறிது மற்றிதற்கு உவமையும் ஒன்றில்லை பேசின். (12)

அஞ்சு பட்டிடு பூதங்கள் பல்உரு அமைந்து
நெஞ்சு பட்டிடும் உயிர் கொடு நேருமேல் நிகரும்
மஞ்சு பட்டிடு பொருப்பெலாம் சூறைமுன் மயங்கும்
பஞ்சு பட்டிட நடந்திடு தூசிமுன் படையே. (13)

அந்தம் இன்றியே அகன்புவி கொண்ட அண்டத்தில்
வந்திடும் திறல் படைகளின் பெருமை யார் வகுப்பார்
முந்து தூசிகள் மகேந்திரப் பெருநகர் மூடி
இந்த அண்டத்தின் இடம் எலாம் நிறைந்தன இமைப்பில். (14)

ஆன காலையில் ஒற்றர் போய்ச் சூரனை அடைந்து
பானல் மேல் அடி கை தொழுது ஐய நீ படைத்த
சேனை வந்து அயல் நின்றன தூசிமுன் சென்று
வான் உலாவு பேர் அண்டத்தை நெருக்கின மன்னே.



சூரபன்மன் பெற்ற அண்டங்களினின்றும் வந்துகொண்டிருந்த அளவில்லாத கொடிப்படைகள் சென்றுகொண்டிருந்த நிலஅளவினை கணித நூல் அறிஞர்கள் நூறு யோசனை தூரமென்று சொன்னார்கள். அங்ஙனமானால் பின்னணிச் சேனைகளின் அளவைக் கணித்துக் கூறவல்லவர் யாவர். (11)

தூசிகள் = கொடிப் படைகள்.

சூரபன்மன் பெற்றுக்கொண்ட சேனைச் செல்வத்தின் அளவு சில் வாழ் நாளை யுடைய அரசர் பெற்றுக் கொண்ட சிறிய அளவினை யுடைய தாமோ. அது கணித விற்பன்னர் கூறியிருக்கும் பேரெண்ணிலும் அடங்காது. இதற்குப் பிறிதாக வேறோர் உவமையும் இல்லை. (12

குறுமை = குறுகிய.

மேகங்கள் படிகின்ற மலைகளெல்லாம் சுழல் காற்றின் முன் அகப்பட்ட பஞ்சு போலப் பறக்கச் செய்யும் அசுர சேனைகள், ஐம்பூதங்கள் பற்பல அசுர வடிவங்களைக் கொண்டு மனங்களையும் உயிர்களையும் பெற்று வருமாயின் ஒப்பனவாம். (13)

அஞ்சு = ஐந்து, மஞ்சு = மேகம், பொருப்பு = மலை, சூறை = சுழல் காற்று, தூசி = முன்னணிச் சேனை.

முன்னணிச் சேனைகள் வீரமாமகேந்திர புரத்தை நொடி நேரத்துள் மறைத்து இவ்வண்டத்தின் ஏனைய இடங்களிலெல்லாம் நிறைந்துகொண்டன. வந்துகொண்டிருந்த பின்னணிச் சேனைகளின் அளவைக் கணித்துக் கூறவல்லவர் யாவர்? (14)

சேனைகள் வந்த சமயத்தில் ஏவலாளர்கள் சூரபன்மனிடம் வந்து வணங்கி அரசே! தேவரீர் பெற்றுக்கொண்ட சேனைகளெல்லாம் வந்து இங்கு இடம் பெறாமையின் இவ் வண்டத்தினைப் புறத்தில் தங்கி நிற்கின்றன. கொடிப் படைகள் முன்னர் வந்து இவ் வண்டத்தில் நெருங்கி நிற்கின்றன. (15)

பானல் = கருங்குவளை.

## சூரன் போர்க்கோலம் கொள்ளுதல்

என்னும் எல்லையில் நன்றென அவுணர்கோன் எழுந்து
தன்னதாகிய உறையுள் போய்த் தடம்புனல் ஆடித்
துன்னும் ஐவகை உணவுடன் அறுசுவை தொடர்ந்த
அன்னம் உண்டனன் நஞ்சுகொல் மருந்துகொல் அதுவே.

நீறு அணிந்தனன் நெற்றி மெய் நிறை விரை களபச்
சேறு அணிந்தனன் பூந்தொடை பங்கியில் செறித்தான்
மாறில் பொன்சுடர்க் கலையுடன் அணிகலன் மாற்றி
வேறு வேறு நன்கு இனியன புனைந்தனன் விரைவில். (17)

ஈசன் மாப்படை ஏனையோர் பெரும்படை யாவும்
ஆசில் ஆயிர கோடி தேர் செலுத்தியே அவையும்
கேசரித்திறல் யானமும் கேடில் பொற்றேரும்
பாசனத்திறல் அவுணர் கொண்டு ஏகுவான் பணித்தான்.

ஆங்கு அவ்வெல்லையில் சூரபன்மா எனும் அவுணன்
பாங்கர் வந்திடு வலவர் தம் தொகையினைப் பாரா
ஓங்கும் ஓர் தடம் தேரினைக் கொணர்திர் என்று உரைப்பப்
பூங்கழல் துணை வணங்கியே நன்றெனப் போனார். (19)

வாட்டு கேசரி எழுபதினாயிரம் வயமாக்
கூட்டம் அங்கண் ஓர் எழுபதினாயிரம் கூளி
ஈட்டம் ஆகியது எழுபதினாயிரம் ஈர்ப்பப்
பூட்டி நன்குறப் பண்ணினார் ஆங்கு ஒரு பொலன் தேர்.



*சூரபன்மன் உடனே ஆசனத்தை விட்டெழுந்து தனது மாளிகையிற் சென்று நீரில் ஸ்நானஞ் செய்து அறு சுவை யுடைய கறிகள் நிறைந்த ஐவகை யுணவாகிய அன்னத்தை அருந்தினான். அவ் வுணவு அவனுக்கு நஞ்சோ அல்லது அமிர்தமோ.* (16)

**உறையுள் = மாளிகை.**

*உணவு உண்டவனாகிய சூரபன்மன் நெற்றியில் திருவெண்ணீற்றைத் தரித்தான். உடம்பில் பரிமளம் மிகுந்த கலவைச் சாந்தைப் பூசினான். தலையின்மீது தும்பை மலர்மாலையைத் தரித்தான். மனத்துக்குவந்த ஆடை யாபரணங்களை அழகுற அணிந்தான்.* (17)

**விரை = வாசனை, களபச் சேறு = கலவைச் சாந்து, பங்கி = ஆண்மயிர், கலை = ஆடை.**

*சூரபன்மன் சிவப் படைக்கலங்களும் தேவப் படைக்கலங்களும் முதலாகிய சேமப் படைக்கலங்களையும் கொண்டு, ஆயிர கோடி சேமத் தேர்களையும், வலிமை யமைந்த சிங்க வூர்தியையும் அழகிய இந்திர ஞாலத் தேரையும், அசுரர்கள் கொண்டு வருமாறு கட்டளை செய்தான்.* (18)

**ஆசு = குற்றம், கேசரி = சிங்கம், யானம் = ஊர்தி, பாசனம் = சுற்றம்.**

*சூரபன்மன் தனது பக்கத்தில் வந்து நின்ற தேர்ப் பாகரைப் பார்த்து உயர்ந்த பெரிய தேரைக் கொண்டு வரக் கடவீர் என்று சொல்ல, அவர்கள் அவ்வாறே என்று கூறி வணங்கிச் சென்றார்கள்.* (19)

**பாங்கர் = பக்கம், வலவர் = தேர்ப் பாகர்.**

*அவர்கள் பொன்னால் செய்யப்பட்ட ஓர் தேரை இழுத்துச் செல்லும்படி எழுபதினாயிரம் சிங்கங்களையும், எழுபதினாயிரம் குதிரைகளையும், எழுபதினாயிரம் பூதங்களையும் பூட்டினார்கள்.* (20)

**வாட்டு = துன்புறுத்தும், வயம் = வெற்றி, கூளி = பூதம், ஈட்டம் = தொகுதி, ஈர்ப்ப = இழுத்துச் செல்ல, பொலன் = பொன்.**

மண்டலத்தினும் ஆன்ற பேர் இடத்தது மருங்கில்
தெண் திரைக் கடலாம் என ஆர்ப்பது செறிந்த
அண்டம் ஆயிர கோடியும் தன் இடத்து ஆற்றிக்
கொண்டு நின்றிடும் வலியது மடங்கல் அம் கொடித் தேர்.

முடியும் எல்லையில் எழுதரு மருத்தினும் முந்திக்
கடிது செல்வது சென்றிடு விசையினுல் ககுபத்
தடநெடும் கிரி அலமரத் தபனரும் குளிர
வடவை அங்கிகள் விளிந்திடப் புரிவது அம் மான் தேர்.

ஏழு நேமியும் இடைப்படு தீபமும் யாவும்
சூழுகின்ற பேர் அடுக்கலும் ஒன்றிய தொடர்பின்
கேழ் இல் பன்மணி ஓவியப் பத்திகள் கெழுவும்
ஆழி தாங்கிய அண்டம் ஒத்திலங்கியது அகன் தேர்.(23)

தொழுதகும் திறல் அவுணர் கோன் வேள்வியில் துஞ்சி
எழுவதாகிய எல்லையில் தோன்றியது எதிர்ந்தார்
குழு இரிந்திடத் துரப்பது நான்முகக் குரிசில்
அழியும் நாளினும் அழிந்திடா திருப்பது அவ் அகன்தேர்.

கண் அகன்படை அளப்பில பரித்தது காமர்
விண்ணவர்க்குள் வலிஎலாம் கொண்டது மேல்நாள்
அண்ணல் நல்கிய இந்திர ஞாலமும் அனையது
எண்ணில் மேற்படு யாணர் பெற்றுடையது அவ் இரதம்.



அத்தேரானது பூமண்டலத்திலும் பார்க்கப் பரந்த இடத்தை யுடையது. திரைகளையுடைய சமுத்திரம் போல ஆரவாரத்தை உடையது. ஆயிரகோடி யண்டங்களையும் தாங்கிக்கொண்டு நிற்கத் தக்க வலிமையை உடையது. (21)

மடங்கல்=சிங்கம், மருங்கு=பக்கம்.

அந்தத் தேர் ஊழிக் காற்றினும் பார்க்க வேகமாகச் செல்லும் இயல்புடையது. செல்லுகின்ற விசையினாலே திக்குகளில் உள்ள உயர்ந்த மலைகளைச் சுழலச் செய்வது. சூரியர்களையும் குளிரச் செய்வது. வடவாமுகாக்கினிகளை அழியச் செய்வது. (22)

மருத்து=ஊழிக் காற்று, ககுபம்=திக்கு, அலமர=சுழல, தபனர்=சூரியர், விளிந்திட=அழிய.

ஏழு சமுத்திரங்களும் ஏழு தீவுகளும் இவற்றைச் சூழ்ந்த சக்கரவாள கிரியும் பூமியும் அதன் மேலும் கீழும் உள்ள உலகங்களும் பொருள்களும் எல்லாம் பொருந்தியிருக்கும், ஒழுங்கைப் போல ஒப்பில்லாத இரத்தினங்களால் இயற்றப்பட்ட அந்த அகன்ற தேர் உருள்களை உடைய ஒரு பிருதுவி அண்டத்தைப் போல விளங்கியது. (23)

நேமி=சமுத்திரம், தீபம்=தீவு, அடுக்கல்=மலை, கேழ்=ஒப்பு, கெழுவும்=பொருந்திய.

அந்தத் தேரானது சூரபன்மன் தான் இயற்றிய யாகத் தீயில் வீழ்ந்திறந்து, பின்னர் உயிர் பெற்றெழுந்த காலத்தில் அத்தீயினின்றும் தோன்றப் பெற்றது. எதிர்த்த பகைவர் கூட்டம் ஓடும்படி துரத்துவது. பிரமதேவர் இறக்கின்ற பிரம கற்ப கால முடிவிலும் அழியாதிருப்பது. (24)

நான்முகக் குரிசில்=பிரமதேவர்.

அத்தேரானது அளவற்ற படைக்கலங்களைத் தாங்கி இருப்பது. தேவர்களுக்குள்ள வலிமையை உடையது. சிவபெருமான் சூரபன்மனுக்குக் கொடுக்கருளிய இந்திர ஞாலத் தேரினைப்போன்றது. (25)

காமர்=அழகிய, யாணர்=அழகு.

அனையதாகிய தேரினை வலவர் கொண்டணைந்து
தினகரன் தனை வெருண்டவன் தாதை முன் செலுத்தத்
துனைய மற்றதில் இவர்ந்தனன் இவர்தலும் தொழுது
புனைதி வாகை என்று அவுணர்கள் பூ மழை பொழிந்தார்.

## சூரன் போருக்குப் புறப்படல்

பொழிந்த காலையில் வலவர்கள் அங்கதில் புக்கு
கழிந்த சீர்த்தியான் ஆணையால் தேரினைக் கடவ
தழீம் தழீம் எனப் பல்லியம் இயம்பின சகங்கள்
அழிந்த நாள் எழுகடல் என அவுணர்கள் ஆர்த்தார்.

அங்கி அன்ன பொற் படியகம் கோடிகம் அடைப்பை
திங்கள் வெண் குடை கவரிகொண்டு ஒழுகினர் சிலதர்
துங்கம் மிக்கவன் சீர்த்தியும் ஆணையும் தொடர்ந்து
மங்கலம் திகழ் உருக்கொடு சூழ்ந்திடும் வகைபோல். (28)

அண்ணல் மேவரு கோநகர் எல்லையுள் அடைந்த
எண்ணில் மாப்பெரும் சிகரியின் வாயில்கள் இகந்தே
கண்ணகல் ஞெள்ளல் ஆயிர கோடியும் கடந்து
வண்ண மாமணிக் கோபுர முதற்கடை வந்தான். (29)

### வேறு

தானவர் கோமகன் தடம்பொற் தேரொடு
மா நகர் முதல் கடைவாயில் போதலும்
ஆனது நோக்கியே அங்கண் சூழ்தரு
சேனைகள் ஆர்த்தன உடுக்கள் சிந்தவே. (30)



அத்தேரைப் பாகர்கள் கொண்டு வந்து சூரபன்மனது முன்னிலையில் நிறுத்தினர். அவன் விரைவாக அதில் ஏறினன். அப்போது அசுரர்கள் அவனை வணங்கி, நீ வெற்றி யடைகுதி என்று வாழ்த்தி மலர் மாரி சொரிந்தார்கள். (26)

வலவர் = பாகர், தினகரன் = சூரியன், துனைய = விரைவாக.

அசுரர் பூமழை பொழிந்த பொழுது சாரதிகள் அவ் விரதத்தில் ஏறி, சூரபன்மனது அனுமதியுடன் அவ் விரதத்தைச் செலுத்தப் பலவகை வாத்தியங்கள், தழீம் தழீம் என முழங்கின. அசுரர்கள் சமுத்திரங்கள் ஆரவாரிப்பது போல ஆரவாரஞ் செய்தார்கள். (27)

சீர்த்தி = கீர்த்தி, பல் இயம் = பலவாத்தியம், சகம் = உலகம்.

சூரபன்மனது கீர்த்தியும் ஆஞ்ஞையும் அவனைத் தொடர்ந்து மங்களகரமான வடிவங்களைக் கொண்டு வந்த தன்மையைப் போல, ஏவலாளர்கள் வெண் கொற்றக் குடைகளையும் வெள்ளிய சாமரைகளையும், பொன்னாலியன்ற படிகங்களையும், பூந் தட்டங்களையும் தாங்கிக் கொண்டு சென்றார்கள். (28)

அங்கி = அக்கினி, படியகம் = துப்பற் படிக்கம், கோடிகம் = பூந்தட்டு, அடைப்பை = வெற்றிலைப்பை, துங்கம் = உயர்ச்சி.

சூரபன்மன் இராசதானியின் கோபுரங்களையுடைய வாயில்களை நீங்கி, ஆயிரகோடி இராச வீதிகளையும் கடந்து சென்று மாணிக்கங்கள் அழுத்தப்பட்ட கோபுரத்தை யுடைய ஆசார வாசலில் வந்தான். (29)

சிகரி = கோபுரம், ஞெள்ளல் = வீதி.

சூரபன்மன் பெருமையாகிய பொற்றேர்மீது ஆசார வாசலில் வந்த அளவில், அங்கே நின்ற சேனைகள் அவனைக் கண்டு நட்சத்திரங்களும் உதிரும்படி ஆரவாரித்தன. (30)

தானவர் = அசுரர் உடுக்கள் = நட்சத்திரங்கள்.

ஞெலித்திடு பரவையின் நீல வெவ்விடம்
ஒலித்து எழுந்தாலென உலப்பில் தானைகள்
கலித்தன படர்ந்தன கண் அகன் புவி
சலித்தது கொடியரைத் தரிக்க ஒண்ணாமையால். (31)

நேர் இயம்பரிய தோர் நிசாளம் சல்லிகை
பேர் இயம் பணை வயிர் பிறங்கு தண்ணுமை
தூரியம் காகளம் துடி முதல்படு
சீர் இயம் பல உடன் இயம்பிச் சென்றவே. (32)

சேயின குஞ்சிகள் செறிந்த தானவர்
பாயின தானையில் படர்ந்த பூழிகள்
வாயின பரவை மேல் வடவைத் தீ விராய்ப்
போயின நாள் எழு புகையைப் போன்றவே. (33)

வானினும் மண்ணினும் மாதிரத்தினும்
தான் நிறை கடலினும் தணப்பு இன்றாகியே
மேல் நிறை பூழிகள் மிடைய எங்கணும்
சோனை கொள் பின் பனித் தூவல் போன்றவே. (34)

சூர் அனிகத்து எழு தூளி அந் நகர்
ஆர் அகில் ஆவியும் யாரும் ஆடிய
பூரி கொள் சுண்ணமும் பொருந்திப் போவது
கார் இனம் மின்னொடு கடல் உண்டு ஏகல் போல். (35)



*மந்தர மலையாகிய மத்தினால் கடையப்பட்ட பாற்கடலிலிருந்து ஆலகால விடம் வீறிட்டுக் கொண்டு எழுந்தாற்போல கருநிறத்தையுடைய கொடிய அசுர சேனைகள் முழங்கிக்கொண்டு சென்றன. அவ்வசுரர்களின் பாரத்தைத் தாங்க முடியாமல் பூமி அசைவுற்றது.* (31)

ஞெலித்தல் = கடைதல், பரவை = சமுத்திரம் உலப்பு = குறைவு, கலித்தல் = ஒலித்தல்.

*நிசாளமும், சல்லிகையும், குடமுழாவும், முரசும், ஊது கொம்பும், எக்காளமும் முதலான பலவகை வாத்தியங்களும் அச் சேனைகளுடன் முழங்கிச் சென்றன.* (32)

இயம்ப = கூற, இயம் = வாத்தியம், பணை = முரசம், வயிர் = ஊது கொம்பு, பிறங்கு = ஒலி செய்யும், தண்ணுமை = உறுமி முரசம், தூரியம் = உவகைப்பறை, காகளம் = எக்காளம்.

*சிவந்த குடுமிகளையுடைய அசுர சேனைகள் சென்றதனால் எழுந்த புழுதிகள் சமுத்திரங்களின் மீதுள்ள வடவாமுகாக்கினி பரக்கும் காலத்தில் அதனினின்றும் எழுந்து பரவுகின்ற புகைப் படலங்களை நிகர்த்தன.* (33)

சேயின = சிவந்த, குஞ்சி = குடுமி, பாயின = பரந்த, வாய் = கரை, விராய் = விரவி.

*ஆகாயத்திலும், பூமியிலும், திக்குகளிலும், கடல்களிலும், நீக்கமில்லாதனவாகி நிறைந்த பூ தூளிகள், எவ்விடங்களிலும் செறியும்படி பெய்கின்ற பின் பனியை நிகர்த்தன.* (34)

மாதிரம் = திக்கு, தணப்பு = நீக்கம், சோனை = பெய்தல், தூவல் = துளி.

*சூரபன்மனுடைய சேனைகள் சென்றதனால் எழுந்த பூ தூளிகள் மகேந்திர புரியில் உள்ள மகளிர் தம் கூந்தலுக்குக் கூட்டிய அகிற் புகையையும் ஆடவர் மகளிர் எறிந்து விளையாடிய பொற் சுண்ணத்தையும் அளாவிக் கொண்டு செல்லுதல், முகிற் கூட்டம் கடல் நீரை உண்டு மின்னலுடன் செல்லுதலை நிகர்க்கும்.* (35)

அனிகம் = சேனை, பூரி = பொன், கார் இனம் = முகில்கூட்டம்.

திண் திறல் கரிகளில் தேரில் வெண் கொடி
மண் துறு பூழி தோய் வானில் செல்வன
கொண்டலின் இருதுவில் கொக்கின் மாலைகள்
தண் துளி உறைப்புழிப் படரும் தன்மை போல். (36)

படைவகை திசை எலாம் படரப் பாய் இருள்
அடை வது சூர் அறிந்து அண்டம் யாவினும்
மிடை தரு கதிர்களை விளிக்க வந்தெனக்
குடை நிரை எங்கணும் குழுமு கின்றவே. (37)

வெம்பரி கரி உமிழ் விலாழி மாமதம்
இம்பரில் நகர் எலாம் யாற்றின் ஏகலால்
உம்பர் மற்று அல்லதை ஒருவன் தானைகள்
அம்புவி சென்றிடற்கு அரியது ஆனதே. (38)

இவ்வகை தானைகள் ஈண்டிச் சென்றிடத்
தெவ்வலி அவுணர் கோன் செம் பொற் தேரின் மேல்
மைவரை மேருவின் வருவதாம் எனக்
கவ்வையில் அமர்புரி களரி ஏகினன். (39)

பூசலின் எல்லையில் புரவலன் செலத்
தூசி அதாகியே தொடர்ந்த தானைகள்
ஈசனது அருள்மகன் இனிது வைகிய
பாசறை சூழ்ந்தன படியும் வானுமாய். (40)



திண்ணிய வலிமை யமைந்த யானைகளிலும் தேர்களிலும் கட்டப்பட்ட வெண்ணிறக் கொடி ஆடைகள் பூ தூளி பறந்த ஆகாயத்தில் அசைந்து கொண்டு செல்லுதல், மழைக் காலத்தில் கொக்கு வரிசைகள் மழை பெய்யும்போது ஆகாயத்தில் பறந்து செல்லும் தன்மையைப் போலும். (6)

கரி = யானை. துறு = நிறைந்த, கொண்டலின் இருது = கார்ப்பருவம், உறைப்புழி = பெய்யும்போது.

தனது சேனைகள் எல்லாத் திசைகளிலும் நெருங்கிச் சென்றதனால் இருள் செறிந்த தன்மையைச் சூரபன்மன் அறிந்து தனது அண்டங்கள் எல்லாவற்றிலும் உள்ள சூரிய சந்திரர்களை அவ்விருளை நீக்க வருமாறு அழைக்க அவைகள் வந்தாற்போல எவ்விடங்களிலும் குடைகள் பிடிக்கப்பட்டன. (37)

பாய்இருள் = படரும் இருள், மிடைதரு = பொருந்திய, குழுமுகின்ற = நிறைகின்ற.

குதிரைகள் சொரிந்த வாய் நுரையும், யானைகள் சொரிந்த மத சலமும் இப் பூமியினிடங்களில் எல்லாம் ஆறுபோல ஓடியதனால், சூரபன்மனுடைய சேனைகள் செல்லுதற்கு ஆகாயமே இடமாயிருந்தது. (38)

விலாழி = குதிரை வாய்நுரை, இம்பர் = புவி, பூமி.

மைநாக பர்வதம் பொன் மயமான மேருமலையின் மேலேறி வருவதுபோல, கரிய அசுராதிபனாகிய சூரபன்மன் செம்பொன் மயமாகிய தேரின் மேல் ஏறிக்கொண்டு யுத்த களத்திற்குச் சென்றான். (39)

தேவ் வலி = அடக்கும் வலி, வரை = மலை, கவ்வை = ஆரவாரம், களரி = போர்க்களம்.

சூரபன்மன் யுத்த களத்திற்குச் செல்ல கொடிப் படையாகி முன் சென்ற சேனைகள் சிவபிரானுடைய அருள் குமாரராகிய முருகக் கடவுள் இனிதாக வீற்றிருந்த பாசறையை முற்றுகையிட்டன. (40)

பூசல் = யுத்தம், புரவலன் = அரசன், காவலன். ஈசன் = ஆள்பவன், படி = பூமி.

உரற்றிய கணமழை உம்பர் சூழ்ந்தென
இரற்றொடு சூழ்படை ஈட்டம் நோக்கியே
மரற்றுறு பலங்களில் வாரிகண் வர
அரற்றினர் வெருவினர் அமரர் யாவரும். (41)

அழுங்கினன் புரந்தரன் அகிலம் யாவையும்
விழுங்குறும் இருவரும் விம்மினர் உளம்
புழுங்கினர் வீரர்கள் பூதர் ஏங்கினர்
கொழும் கனல் இடைப்படு விலங்கின் கொள்கைபோல்.

ஆவது ஓர் காலையில் அரியும் நான்முகத்
தேவனும் ஏனைய திசையினோர்களும்
மூவிரு முகமுடை முதல்வன் தன் இரு
பூ அடி பணிந்து இவை புகறல் மேயினர். (43)

வேறு

## பிரமாவும் திருமாலும் முருகப் பெருமானுக்குக் கூறுதல்

அந்தம் இலாத அண்டம் ஆயிரத் தெட்டுத் தன்னில்
வந்திடு தானையோடு மா பெரும் சூரபன்மன்
உந்திய தேரின் மேலான் உறுசமர் புரிவான் போந்தான்
முந்திய தூசி நம்தம் பாசறை மொய்த்தது என்றார். (41)

## முருகப் பெருமானின் போர்க்கோலம்

என்னலும் முறுவல் செய்து ஆங்கு இலங்கு எழில் தவிசில் வைகும்
பன்னிரு கரத்து வள்ளல் பவனனைக் குறிப்பின் நோக்க
முன்னம் அது உணர்ந்து வல்லே முள்வுகோல் கயிறுபற்றிப்
பொன் அவிர் பனை வேகப் பேர்ப் புரவிமான் தேர் முன் உய்த்தான். (45)



முழக்கத்தோடு கூடிய மேகங்கள் ஆகாயத்தில் சூழ்ந்தாற் போல ஆரவாரத்துடன் சூழ்ந்த சேனைகளைப் பார்த்து தேவர்கள் மரற் செடியின் பழங்களைப் போல கண்களிலிருந்து நீர்த்துளிகள் சிந்த அஞ்சி அழுதார்கள். (41)

உரற்றல் = முழக்கம், இரற்றல் = ஆரவாரித்தல், மரல் = மரல்செடி, துறு = நெருங்கிய, வாரி = நீர்.

இந்திரன் மனம் வருந்தினான், பிரம விஷ்ணுக்களாகிய இருவரும் மனம் பொருமினார்கள், இலக்கத்தொன்பது வீரர்களும் உள்ளம் புழுங்கினார்கள், அக்கினி சூழ்ந்திருக்கும் இடத்தின் நடுவில் அகப்பட்ட மிருகங்கள் போலப் பூதர்கள் நிற்கவும் ஓடவும் முடியாது உள்ளம் பதைத்தார்கள். (42)

புரந்தரன் = இந்திரன், அழுங்கல் = மனம் வருந்துதல், அகிலம் = பூமி, விழுங்குறும் = விழுங்கிய.

அச்சமயத்தில் விஷ்ணு மூர்த்தியும், பிரமதேவரும், இந்திரன் முதலானோர்களும் ஆறு திருவதனங்களையுடைய தலைவராகிய சுப்பிரமணியப் பெருமானது செந்தாமரை மலர் போலும் பாதங்களை வணங்கி விண்ணப்பிப்பாராயினர். (43)

புகறல் = விண்ணப்பித்தல்.

பெருமானே! சூரபன்மன் தேவரீருடன் போர் செய்யும்படி தேரின் மேலேறி அளவற்ற சேனைகளுடன் வந்திருக்கின்றான். முன்னணிச் சேனை நமது பாடி வீட்டைச் சூழ்ந்து கொண்டது என்று கூறினார்கள். (44)

தேவர்களின் விண்ணப்பத்தைக் கேட்ட அழகிய சிங்காசனத்தில் வீற்றிருந்த, பன்னிரு திருக்கரங்களையுடைய முருகக் கடவுள் புன்னகை செய்து சாரதியாகிய வாயு தேவனை குறிப்பாற் பார்த்தருள, அவன் அக்குறிப்பினை அறிந்து, பொன்னொளி விளங்குகின்ற தேரைச் செலுத்திக் கொண்டு வந்து முன்னிலையில் விட்டான். (45)

தவிசு = ஆசனம், பவனன் = வாயு, முன்னம் = கருத்து, முள்வுகோல் = முட்கோல், கயிறு = குதிரை வாய்க்கயிறு, அவிர் = விளங்குகின்ற.

உய்த்திடுகின்ற காலத்து ஒய்யென எழுந்து காமர்
புத்தலர் நீபத்தாரான் புகர் மழுக் குலிசம் சூலம்
சத்திவாள் பலகை நேமி தண்டு எழுசிலை கோல் கைவேல்
கைத்தலம் கொண்டான் என்னின் அவன் தவம்
கணிக்கல் பாற்றே. (46)

மாறிலா அருக்கன் நாப்பண் வைகிய பரமனே போல்
ஆறுமா முகத்து வள்ளல் அலங்கு உளைப் புரவி மான தேர்
ஏறினான் வீரவாகு இலக்கரோடு எண்மர் ஆகும்
பாறு உலாம் குருதி வேலார் பாங்கராய்ப் பரசி வந்தார்.

இராயிரம் வெள்ளம் ஆகும் எண் தொகைப் பூதர் யாரும்
மராமரம் பிறங்கல் ஈட்டம் வரம்பறு படைகள் பற்றி
விராவினர் சூழ்ந்து சென்றார் விரிஞ்சனே முதலோர் யாரும்
பராவொடு புடையில் நின்று பனிமலர் மாரி தூர்த்தார். 48

தூர்த்திடுகின்ற காலைச் சுருதியின் தொகைக்கும் எட்டாத்
தீர்த்தன் மான் தேர் மேலாகித் திண் புவி
அண்டம் தன்னில்
பேர்த்திடும் உயிர்கள் மாற்றப் பின்னுறும்
முன்னோன் போல
ஆர்த்திடு தானை வெள்ளத்து அவுணர்கள் மீது போனான்.

ஆங்கது காலை தன்னில் ஆறிரு தடம் தோள் ஐயன்
பாங்குறு பூதர் யாரும் பாரொடு திசையும் வானும்
நீங்குதல் இன்றிச் சூழும் நேரலன் படையை நோக்கி
ஏங்கினர் தொல்லை வன்மை இழந்தனர்
இனைய சொற்றார். (50)



கடப்பினது அழகிய அன்றலர்ந்த மலரால் தொடுக்கப்பட்ட மாலையைத் தரித்த முருகக் கடவுள் ஆசனத்தை விட்டு எழுந்து தமது பன்னிரு திருக்கரங்களிலும் முறையே, வச்சிரமும், சூலமும், வேலும், வாளும், பரிசையும், சக்கரமும், தண்டமும் தாங்கியருளினர். (46)

நீபம் = கடம்பு, புகர் = கருமை.

பரம்பொருளாகிய சிவபெருமான் ஆதித்தன் மத்தியில் வீற்றிருந்தது போல, மகத்தாகிய ஆறு திருவதனங்களையுடைய சுப்பிரமணியப் பெருமான், அசைகின்ற பிடர்மயிரையுடைய குதிரைகள் பூட்டப்பட்ட, மனோவேகப் பொற்றேர் மீது வீற்றிருந்தருளினர். அப்பொழுது வேற்படைகளை ஏந்தியவர்களாகிய வீரவாகு தேவரும் இலக்கத்தெட்டு வீரர்களும் பக்கங்களில் துதித்துக் கொண்டு நின்றார்கள். (47)

அருக்கன் = ஆதித்தன், நாப்பண் = மத்தியில், அலங்குதல் = அசைதல், உளை = பிடர்மயிர், பாறு = பருந்து, பரசி = துதித்து.

இரண்டாயிரம் வெள்ளம் என்னும் தொகையைக் கொண்ட பூதர்கள் எல்லோரும் ஆச்சாமரக் கொம்புகளையும், மலைக்கூட்டங்களையும், அளவற்ற படைக்கலங்களையும் தாங்கிக் கொண்டு முருகப் பெருமானைச் சூழ்ந்து சென்றார்கள். பிரமா முதலான தேவர்கள் அனைவரும் தோத்திரம் செய்து கொண்டும் பூமழை பொழிந்து கொண்டும் இருமருங்கிலும் வந்தார்கள். (48)

மராமரம் = ஆச்சாமரம், பிறங்கல் = மலை, விராவி = நெருங்கி, விரிஞ்சன் = பிரமா, பராவுதல் = தொழுதல்.

குதிரைகள் பூட்டிய தேரின் மீதாரோகணித்த முருகக் கடவுள் இப்பூமண்டலத்தில் பிறப்பிறப்புற்றுழலும் சீவான்மாக்களை அழிக்கச் சர்வசங்கார காலமாகிய இறுதிக் காலத்தில் வரும் மகாவுருத்திர மூர்த்தியைப் போல ஆரவாரித்த அசுரர்கள் மேற்சென்றருளினர்.(49)

சுருதி = வேதம், தீர்த்தன் = பரிசுத்தன், பேர்த்திடும் = அழித்திடும்.

சுப்பிரமணியப் பெருமானுக்குப் பக்கத்தில் நின்ற பூதர்கள் எல்லோரும் பூமியிலும், திசைகளிலும், ஆகாயத்திலும், நீக்கமின்றிச் சூழ்ந்து நின்ற சூரபன்மனுடைய சேனைகளைப் பார்த்து ஏக்கமுற்றுத் தமது வலிமைகளை இழந்து பின்வருமாறு கூறுவாராயினர்.(50)

நேரலன் = பகைவன்.

## சூரனின் சேனையைக் கண்டு பூதர்கள் கூறுதல்

தீயன புரியும் சூரன் செய்திடு தவத்தால் பெற்ற
ஆயிர இருநான்கு அண்டத்து அவுணரும்
போந்தார் அன்றே
ஏயதோர் அண்டம் ஒன்றில் இருந்தனர் இவர் மற்றன்றால்
மாயிரும் திசையும் விண்ணும் வையமும் செறிந்து
நின்றார். (51)

வரத்தினில் பெரியர் மாய வன்மையிற் பெரியர் மொய்ம்பின்
உரத்தினில் பெரியர் வெம்போர் ஊக்கத்தில் பெரியர்
எண்ணில்
சிரத்தினில் பெரியர் சீற்றச் செய்கையிற் பெரியர் தாங்கும்
கரத்தினில் பெரியர் யாரும் காலனில் பெரியர் அம்மா. (52)

மாகத்தின் வதிந்த வானோர் வன்மையும் வளனும் வவ்விச்
சோகத்தை விளைத்து வெம்போர் தொடங்கியே
தொலைவு செய்தோர்
மோகத்தின் வரம்பாய் நின்றோர் முழுதுயிர்க்கடல் உண்
வேட்கை
மேகத்தின் வலிந்த தீயோர் விரிஞ்சன் ஏற்றிடினும்
வெல்வோர். (53)

கூற்றெனும் நாமத்தண்ணல் கொண்டிடும் அரசும்
செர்கேழ்
நூற்றிதழ்க் கமல மேலோன் நுனித்தனன் விதிக்குமாறும்
மாற்றிடும் செய்கை வல்லோர் மாநிலம் முழுதுண்டாலும்
ஆற்றரும் பசிநோய் மிக்கோர் அண்டங்கள் அலைக்கும்
கையோர். (54)

வெம் கனல் சொரியும் கண்ணர் விரிகடல் புரை பேழ்
வாயார்
பங்கம் இல் வயம் மேல் கொண்டோர் பவத்தினுக்கு
உறையுள் ஆனோர்
செம் கதிர் மதியம் தோயும் சென்னியர் செயிர்தீர் ஆற்றல்
அங்கத இறையும் பேரஅடி பெயர்த்து உலவும்
வெயயோர். (55)



அசுரர்கள் பூமியிலும், திக்குகளிலும், ஆகாயத்திலும் நிறைந்து நின்றார்கள். இவர்கள் இவ்வோரண்டத்தில் மாத்திரம் இருந்தவரல்லர். சூரபன்மன் முன்னர்ச் செய்த தவத்தினால் பெற்ற ஆயிரத்தெட்டு அண்டங்களிலுமுள்ள எல்லா அசுரருமாய்ச் சேர்ந்து வந்தவராவர். (51)

அன்றால் = அல்லர், மா இரும் = பெருமையாகிய, திசை = திக்கு, விண் = ஆகாயம், வையம் = பூமி.

இவ்வசுரர்கள் கடவுளிடத்துப் பெற்றுக் கொண்ட வரங்களிலும் சிறந்தவர்கள், மாயா சாமர்த்தியங்களிலும் மிக்கவர், புயவலிமைகளிலும் சிறந்தவர், போர் செய்யும் ஆர்வத்திலும் மேம்பட்டவர், அளவற்ற தலைத்தொகுதிகளிலும் மிக்கவர், கோபத் தன்மைகளிலும் பெரியர், கொலைத் தொழிலில் யமனையும் வென்றவர். (52)

மொய்ம்பு = புயம், காலன் = யமன்.

இவர்கள் வானுலகில் வசித்த தேவர்களுடைய வலிமைகளையும் செல்வங்களையும் கவர்ந்து கொண்டு துன்பத்தைச் செய்தவர்கள். சீவர்களாகிய கடல் முழுவதையும் பருகும் மேகத்தையொத்த வலிமையுடையவர்கள். பிரமதேவர் எதிர்த்தாலும் அவரையும் வெல்ல வல்லவர்கள். (53)

மாகம் = வான் உலகு, வளன் = வளம், வவ்வி = கவர்ந்து. மேகத்தின் = மேகத்தை ஒத்த.

இவர்கள் கூற்றுவன் செய்யும் அழித்தற் றொழிலையும் பிரமதேவர் ஆராய்ந்து செய்யும் படைத்தற் றொழிலையும், அழிக்கும் செயலிலும் வல்லவர்கள். பூமி முழுவதையும் உணவாக உண்டாலும் தணித்தற்கரிய பசியையுடையவர்கள். அண்டங்களையும் அலைக்க வல்ல கைகளையுடையவர்கள். (54)

கேழ் = நிறம், நுனித்தல் = ஆராய்தல், விதித்தல் = படைத்தல், மாற்றிடும் = அழிக்கும்.

இவர்கள் கோபாக்கினி சிந்தும் கண்களையுடையவர்கள், பெரிய வாய்களையுடையவர்கள், பாவத்திற்கு இருப்பிடமாயுள்ளவர்கள், சூரிய மண்டலத்தையும் சந்திர மண்டலத்தையும் தீண்டத்தக்க சிரசுகளையுடையவர்கள். ஆதிசேடனும் நிலைபெயருமபடி அதிர நடக்கும் கொடியவர்கள். (55)

பேழ் = பெரிய, பங்கம் = குற்றம், வயம் = வெற்றி, செயிர் = குற்றம், அங்கதம் = பாம்பு.

அங்கி மா முகத்தினன் போல் அடைந்தனர் பல்லோர் யாளித்
துங்க மா முகத்தினன் போல் தோன்றினர் பல்லோர் சூழி
வெம்கை மா முகத்தினன் போல் மேயினர் பல்லோர் மேலாம்
சிங்க மா முகத்தினன் போல் திகழ்ந்தனர் பல்லோர் அன்றே. (56)

மதுவொடு கைடபன் போல் வந்தனர் பல்லோர் யாரும்
துதி உறு புகழ்ச் சுந்தோப சுந்தரில் செறிந்தோர் பல்லோர்
அதிர் கழல் சலந்தரன் போல் ஆர்த்தனர் பல்லோர் ஆற்ற
முதிர்சின மகிடன் போல மொய்த்தனர் பல்லோர் அம்மா.

அரன் படை பரித்தோர் பல்லோர் அம்புயத் தவிசின் மேவும்
வரன் படை பரித்தோர் பல்லோர் மழுவொடு தண்டம் தாங்கும்
கரன் படை பரித்தோர் பல்லோர் கால்படை பரித்தோர் பல்லோர்
முரன் படை படுத்த கொண்டல் முதுபடை பரித்தோர் பல்லோர். (58)

ஆனதோர் அவுண வெள்ளம் அனந்த கோடியதாம் என்றே
தான் உரை செய்வதல்லால் சாற்ற ஓர் அளவும் உண்டோ
வானமும் நிலனும ஏனை மாதிர வரைப்பும் எங்கும்
சேனைகளாகிச் சூழின் யாம் என்கொல் செய்வதம்மா. (59)

ஓர் அண்டத் தவுணர் போரால் உலைந்த யாம் ஒருங்கே எல்லாப்
பேர் அண்டத் தோரும் தாக்கில் பிழைப்புறு பரிசும் உண்டோ
கார் அண்ட அளக்கர் சாடிக் கனவரை எறியும் கால்கள்
ஏரண்டச் சூழல் புக்கால் அவை பின்னும் இருக்கவற்றோ.



இவர்களுட் பலர் அக்கினி முகாசுரனைப் போல வந்திருக்கின்றார்கள், பலர் யாளி முகனைப்போல விளங்குகின்றார்கள், பலர் யானை முகத்தினையுடைய தாரகாசுரனைப் போல நிற்கின்றார்கள், பலர் சிங்க முகாசுரனைப் போலத் திகழ்கின்றார்கள். (56)

மேயினர் = திகழ்ந்தார்.

பல வசுரர் மதுவும், கைடபனுமாகிய, அசுரர்களைப் போல வந்திருக்கின்றார்கள். பலர் சுந்தன், உபசுந்தன் ஆகிய அசுரர்களைப் போல வந்திருக்கின்றார்கள். பலர் சலந்தராசுரனைப் போல நின்று ஆரவாரிக்கின்றார்கள். சிலர் மகிடாசுரனைப் போல நிற்கின்றார்கள். (57)

பல வசுரர் சிவப்படைக்கலங்களைத் தாங்கி நிற்கின்றார்கள், பலர் பிரம தேவரது படைக்கலங்களைத் தாங்கி நிற்கின்றார்கள், பலர் யமனது படைக்கலங்களைத் தாங்கி நிற்கின்றார்கள், பலர் வாயுப் படைக்கலங்களைத் தாங்கி நிற்கின்றார்கள். பலர் விஷ்ணு மூர்த்தியின் படைக்கலங்களைத் தாங்கி நிற்கின்றார்கள். (58)

அரன் = சிவன், அம்புயம் = தாமரை, தவிசு = ஆசனம், கரன் = கரம், கால் = வாயு, முரன் = ஓர் அசுரன், கொண்டல் = மேகம்.

அசுர சேனை வெள்ளம் அனந்த கோடியென்னும் அளவினையுடையதென்று பொது வகையில் கூறமுடியுமேயன்றிச் சிறப்புவகையில் வரையறுத்துக் கூறுவதற்கு எண்ணுள் அடங்காது. ஆகாயமும் பூமியின் எவ்விடங்களிலும் சேனைகளேயாகிச் சூழ்ந்து கொள்ளுமானால் நாம் செய்யத்தக்கது யாது.

மாதிரம் = திக்கு, வரைப்பு = எல்லை.

பாரமான மலைகளைப் பெயர்த்தெறிய வல்ல சண்டமாருதங்கள் அற்ப ஆமணக்கஞ் சோலையுட் புகுந்து தாக்குமானால் அவை இலகுவில் அழிவதுபோல, ஒரு அண்டத்தசுரர்களால் வருந்திய நாங்கள் ஏனைய அண்டங்களிலுமுள்ள அசுரரனைவரும் ஒரு சேரத்தாக்கினால் உயிர் பிழைத்திருக்கவும் முடியாது.

பரிசு = தன்மை, பேர் = பெரிய, கார் = மேகம், அளக்கர் = சமுத்திரங்கள், கனவரை = பாரமான மலை, கால் = மாருதம் ஏரண்டம் = ஆமணக்கு.

ஒருவரே எம்மை எல்லாம் உரப்பியே துரப்பர் பின்னை
இருவரே சென்று தாக்கின் யார் இவண் உய்ய வல்லார்
துருவரே அனைய துப்பின் சூழுறும் அவுணர் யாரும்
பொருவரே என்னின் நேர் போய் பூசல் ஆர்
தொடங்கற்பாலார். (61)

எல்லையில் ஆற்றல் கொண்ட எம்முடைத் தலைவர் யாரும்
அல்லன வீரர் தாமும் அவுணரை எதிர்க்கல் ஆற்றார்
கல்லொடு மரத்தால் யாமோ அவர் திறல் கடக்க வல்லேம்
ஒல்லை நம் உயிரும் இன்றே ஒழிந்தன போலும் அன்றே.

நாற் படை அவுணர் தாக்கின் நாம் எலாம் விளிதும் வீரர்
கால் படு பூளையே போல் கதுமென இரிவர் வாகைப்
பாற் படு திறலோன் நிற்கில் பழிபடும் இனைய ரோடும்
வேற் படை ஒருவன் அன்றி வேறு யார் எதிர்க்க வல்லார்.

நீடுறு திசையும் வானும் நிலனும் வெள்ளிடையதின்றிப்
பாடுற வளைந்து கொண்டார் பற்றலர் அதனால் யாமும்
ஓடியும் உய்யல் ஆகா ஒல்லுமாறு அவரைத் தாக்கி
வீடுதல் உறுதி என்றே விளம்பி மேல் சேறல் உற்றார்.

மற்றது காலை தன்னில் மாபெரும் பூதசேனைக்
கொற்றவர் பலரும் ஏனைவீரர் தம் குழுவி னோரும்
வெற்றிகொள் மொய்ம்பன் தானும் மிடைந்து
சூழ்படையை நோக்கி
இற்றன கொல்லோ நம்தம் வன்மை என்று எண்ணம்
உற்றார். (65)



இவ்வசுரருள் ஒருவனே எங்களை எல்லாம் உரப்பித் துரத்தி விடவல்லான். இரு அசுரர் வந்து பொருவாரானால் எங்களுள் உயிர் பிழைத்திருக்க வல்லவர் ஒருவருமிலர். துருவனைப் போன்ற வலிமையுடன் நிற்கின்ற அசுரர்கள் எல்லாருடனும் போர் செய்ய எங்களுள் ஒருவருமில்லை. (61)

துருவன் = ஓர் அசுரன், துப்பு = வலிமை, பூசல் = போர்.

அளவற்ற வலிமையையுடைய எங்கள் தலைவர்களாகிய பூதாதிபர்களும், இலக்கத் தொன்பது வீரர்களும் இவ்வசுரர்களை எதிர்த்துப் போர் புரிய வல்லவராகார். மலைகளையும் மரங்களையும் கொண்டு இவர்களின் வலிமையை நாங்களோ அழிக்கவல்லோம். நம்முடைய உயிர்களும் இன்றே நீங்கிவிடும் போலும். (62)

நால்வகைச் சேனைகளையுடைய இவ்வசுரப் படைத்தலைவர்கள் பொருதலால் நாமனைவரும் இறந்து போவோம். இலக்கத்தெட்டு வீரர்களும் காற்றின் முற்பட்ட பஞ்சுபோல நீங்குவர். வெற்றியுடைய வீரவாகு தேவர் நின்று எதிர்ப்பாராயின் இழிவை அடைவர். இவ்வசுரர்களுக்கு எதிர் நின்று பொரவல்லவர் வேற்படையையுடைய ஏகநாயகராகிய சுப்பிரமணியப் பெருமான் ஒருவரே யன்றி வேறு யாவருளார். (63)

விளிதும் = இறப்போம், பூளை = பஞ்சு, பழி = இழிவு.

பகைவர்களாகிய அசுரர்கள் பூமியிலும் திக்குகளிலும் ஆகாயத்திலும் சிறிதும் வெளியிடமில்லாது சூழ்ந்து கொண்டார்கள். பூதர்களாகிய நாங்கள் ஓடிச் சென்றாலும் உயிர் பிழைத்தல் முடியாது. ஆதலால் இயைந்தவாற்றால் அவருடன் பொருது இறந்துவிடுதலே தக்கது என்று கருதி அவ்வசுரர் மேற் சென்றார்கள். (64)

நிலன் = நிலம், பாடுற = எப்பக்கத்திலும், பற்றலர் = பகைவர், ஒல்லுமாறு = முடிந்தளவு, சேறல் = செல்லுதல்.

பூதப் படைத் தலைவர்களும் இலக்கத்தெட்டு வீரர்களும் வீரவாகு தேவரும் தம்மைச் சூழ்ந்துள்ள அசுர சேனைகளைப் பார்த்து எங்கள் வன்மைகள் அழிந்துவிடும் போலுமென்று வருந்தினார்கள். (65)

அண்டர்கள் முதல்வன் தானும் அமரரும் அகிலம் எங்கும்
தண்டுதல் இன்றிச் சூழும் தானவர் அனிகம் எல்லாம்
கண்டனர் துளங்கி அஞ்சிக் கவன்றனர் அவருள் காரி
வண் துளவு அலங்கல் சென்னி வானவற்கு இனைய
சொல்வான். (66)

## இந்திரன் திருமாலுக்கு விண்ணப்பஞ் செய்தல்

ஆண்தகை முருகன் தன்மேல் ஆயிர இருநால் அண்டத்து
ஈண்டிய தானை எல்லாம் இறுத்தன இவற்றினோடும்
மூண்டமர் இயற்றி வெல்ல ஊழிநாள் முடியும் என்றால்
மாண்டிடுகின்றது எங்ஙன் அவுணர்கள் மன்னன் மன்னோ.

அடுதிறல் வலிபெற்றுள்ள அவுணராம் பானாட் கங்குல்
விடிவதும் அமரர்தங்கள் வெம்சிறை வீடுமாறும்
நெடிய தொல் வெறுக்கை தன்னை நீங்கிய நமது துன்பம்
முடிவதும் இல்லை கொல்லோ மொழிந்தருள் முதல்வ
என்றான். (68)

இந்திரன் இனையதன்மை இசைத்தலும் இலங்கை காத்த
ஐந்திரு சென்னியானை அடுதிறல் கொண்டு நின்ற
செம்திரு மருமத்தண்ணல் தேவரை அளிக்கும்
தொல்லோன்
புந்தி கொள் கவலை நாடி இனையன புகலா நின்றான். (69)

## முருகன் பெருமை திருமால் பேசுதல்

காலமாய் காலம் இன்றி கருமமாய் கருமம் இன்றி
கோலமாய் கோலம் இன்றி குணங்களாய்க் குணங்கள்
இன்றி
ஞாலமாய் ஞாலம் இன்றி அனாதியாய் நங்கட்கெல்லாம்
மூலமாய் இருந்த வள்ளல் மூவிருமுகம் கொண்டுற்றான்.



தேவர்கட்கிறைவனாகிய இந்திரனும் தேவர்களும் அசுர சேனை களனைத்தும் பார்த்துப் பயந்து நடுங்கிக் கவலை கொண்டார்கள். இந்திரனானவன் விஷ்ணு மூர்த்திக்குப் பின்வரும் வாசகங்களைக் கூறு வானாயினர். (66)

அகிலம்=எல்லா உலகமும், தண்டுதல்=குறைதல், துளங்கி=நடுங்கி, கவலுதல்=கவலை கொள்ளுதல், காரி=இந்திரன், துளவு=துளவமலர், அலங்கல்=மாலை.

தலைவரே! ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் உள்ள சேனைகள் அனைத்தும் போர்புரியும்படி வந்து சேர்ந்தன. பெருந்தன்மையை யுடைய முருகக்கடவுள் இச்சேனைகளுடன் போரினைச் செய்து வெல்லு தற்கு ஓர் ஊழிக்காலம் செல்லும் என்றால் சூரபன்மன் அழிவது எவ்வாறாகும்! (67)

இறுத்தல்=சேர்தல்.

அசுரர்கள் எனப்படும் பாதி நாளாகிய இராக்காலம் விடிவதும், தேவர்களுடைய சிறை நீங்குதலாகிய சூரியோதயம் உண்டாவதும், எங்கள் சுவர்க்க லோக இன்பத்தை இழந்ததினால் உண்டாகிய துன் பம் நீங்குவதும் இல்லையோ? சொல்லுக என்றான். (68)

பானாள்=பாதிநாள், கங்குல்=இரவு, வீடும்=நீங்குதல், வெறுக்கை=செல்வம்.

இலங்காபுரியை அரசுசெய்த இராவணனைக் கொன்ற வலிமையை யுடையவரும், இலக்குமியைத் தரித்த திருமார்பை யுடையவருமாகிய விஷ்ணு தேவர், இந்திரன் மனதிற் கொண்ட கவலையின் காரணத்தை அறிந்து கூறுவாராயினர். (69)

மருமம்=மார்பு, அளிக்கும்=காக்கும், புந்தி=மனம்.

இந்திரனே! ஆதி அந்தம் உள்ள பொருளாகியும், அவையின்றி யும்; தொழில்களாகியும், அவையின்றியும்; உருவமாயும், குணங் களாயும், உலகமாயும், அவைகளைக் கடந்து அப்பாலாகி நின்றும்; அநாதி மூலமாய் நமக்கெல்லாம் தலைவராகிய சிவபெருமானே ஆறு முகங்களைக் கொண்டு வந்தருளினர். (70)

கோலம்=உருவம்.

குன்று தொறுடல் செய்யும் குமரவேள் மேரு என்னும்
பொன்திகழ் வெற்பில் வந்து புவனங்கள் முழுதும்
அங்கண்
சென்றுறை உயிர்கள் முற்றும் தேவரும் தன்பால் காட்டி
அன்றொரு வடிவம் கொண்டது அயர்த்தியோ அறிந்த
நீதான். (71)

பொன் உரு அமைந்த கஞ்சப் புங்கவனாகி நல்கும்
என் உரு ஆகிக் காக்கும் ஈசன்போல் இறுதி செய்யும்
மின் உரு என்ன யார்க்கும் வெளிப்படை போலும்
அன்னான்
தன் உரு மறைகளாலும் சாற்றுதற்கரியது அன்றே. (72)

பாய் இருங் கடலிற் சூழ்ந்த பற்றலர் படையை எல்லாம்
ஏ எனும் முன்னம் வீட்டும் சிறுவன் என்று எண்ணல்
ஐய
ஆயிர கோடி கொண்ட அண்டத்தின் உயிர்கட் கெல்லாம்
நாயகன் அவன் காண் நாம் செய் நல்வினைப் பயனால்
வந்தான். (73)

சூரனை முதலோர் தம்மை இமைப்பினில் தொலைக்க
உன்னின்
மூரலால் அடுவன் கொண்ட முனிவினால் அடுவன்
வாய்மைச்
சீரினால் அடுவன் நாட்டச் செய்கையால் அடுவன் என்றால்
நேர் இலா முதல்வன் வன்மை யாவரே நிகழ்த்தற் பாலார்.

பாரிடர் சேனையோடு படர்ந்ததும் இலக்கத் தொன்பான்
வீரர்கள் புடையில் போற்ற மேயதும் படைகள் பற்றிச்
சூரனை அடுவான் வந்த சூழ்ச்சியும் தூக்கின் மாதோ
ஆரண முதலாம் மேலோர்க்கு அனைத்தும் ஓர் ஆடலே
காண். (75)



மலைகள் தோறும் திருவிளையாடல்களைச் செய்தருளும் முருகப் பெருமான், ஒருதினம், பொன்மயமாய் விளங்கும் மேருமலையின் கண் வந்து எல்லாப் புவனங்களும், எல்லா உயிர்களும், தம்மிடத்திற் பொருந்திய ஒரு பரமேசுவர வடிவத்தைக் காட்டி நின்றதனைக் கண்டு, இவரே பரம்பொருள் என்று உணர்ந்தவனாகிய நீயா இப்பொழுது அதனை மறந்து ஐயுற்றுக் கவலையுறுகின்றாய். (71)

குன்று=மலை, வெற்பு=மலை.

முருகக் கடவுள் பிரமதேவராகிப் படைத்தல் தொழிலைப் புரிவர். என்னுருவமாகிக் காப்பாற்றுவார். ஈசனாகி அழித்தற்றொழிலைச் செய்தருளுவர். அவர் திருவுருவம் மின்னுருவம் போல் யார்க்கும் வெளிப்படையாகத் தோன்றுமா ? அது வேதங்களாலும் சொல்லுதற்கரியது. (72)

கஞ்சம்=தாமரை.

முருகப் பெருமானார் பரந்த கடலைப் போற் சூழ்ந்த இச் சேனைகள் முழுவதையும் ஏ என்று சொல்லும் கால அளவினுள் அழித்தருளுவர். இவரை ஒரு சிறு பாலன் என்று நினையாதே. அவர் ஆயிர கோடி அண்டங்களில் வாழும் உயிர்களுக்கெல்லாம் இறைவர் ஆவர். நாம் செய்த தவப்பயனால் ஆறுமுகக் குழந்தையாக வந்தருளினார். (73)

பற்றலர்=பகைவர், வீட்டும்=அழிப்பன்.

அறுமுகப் பெருமான் சூரபன்மனை முதலாகவுடைய அசுரர்களையெல்லாம் ஒரு நொடி நேரத்துள் அழிக்க நினைத்தால் தனது புன்னகையால் அழிப்பர். கோபத்தினால் அழிப்பர். திருவாக்கினால் அழிப்பர். திருக்கண் நோகத்தினால் அழிப்பர். ஒப்புயர்வற்ற இறைவராகிய இக் குமாரக் கடவுளின் ஆற்றலின் அளவை இவ்வளவினதென்று கூற வல்லார் யாவர். (74)

மூரல்=முறுவல், முனிவு=கோபம், நாட்டம்=பார்வை.

(பேராற்றலையுடைய இக் குமாரக் கடவுள் அங்ஙனஞ் செய்யாது சூரபன்மனை அழிக்கும் பொருட்டு) பூதர்களைப் படைத்துணையாகவும் இலக்கத்தொன்பதின்மரைப் படை வீரராகவும் கொண்டு வந்ததையும், திருக்கரங்களில் போர்க்கருவிகளைத் தாங்கிக் கொண்டு நின்ற திருக் கோலத்தையும் ஆராய்ந்து பார்க்குமிடத்து இவையெல்லாம் வேதமுதல்வராம் இறைவரின் திருவிளையாடலாகும். (75)

பாரிடர்=பூதர், தூக்கின்=ஆராயின், ஆரணம்=வேதம்.

துய்யதோர் குமரனேபோல் தோன்றிய முதல்வன் சூழ்ந்த
வெய்ய தானவரை எல்லாம் விரைந்து உடன் அறுத்து
நீக்கிக்
கையில் வேல் அதனால் சூரன் ஆற்றலும் கடக்கும் யாதும்
ஐயுறேல் காண்டி என்றான் அறிதுயில் அமர்ந்த பெம்மான்.

மால் இவை பலவும் கூறி மகபதி உளத்தைத் தேற்றி
ஓலமொடு அவுண வெள்ளம் உம்பரும் செறிந்த
செவ்வேள்
பால் உற நின்று போரின் பரிசினைப் பார்த்தும் என்றே
வேல் உடை முதல்வன் பாங்கா விண்ணவரோடும்
போந்தான். (77)

## ஆறுமுகப் பெருமான் போர்க்கேகல்

### வேறு

அன்ன தன்மை கண்டு அறுமுகன் முறுவல் செய்து
அடுபோர்
உன்னி ஏகலும் வானமும் வையமும் ஒன்றாத்
துன்னு தானவப் பெருங்கடல் ஆர்த்து அமர் தொடங்க
முன்னம் ஏகிய பாரிடர் யாவரும் முரிந்தார். (78)

முரிந்த காலையில் பூதரின் முதல்வர்கள் முரண் போர்
புரிந்து சாய்ந்தனர் இலக்கரோடு எண்மரும் பொருதே
இரிந்து நீங்கினர் இன்னதோர் தன்மைகள் எல்லாம்
தெரிந்து திண்திறல் மொய்ம்பினேன் சிலை கொடு
சேர்ந்தான். (79)

சேர்பு தன்சிலை வாங்கியே சரமழை சிதறி
நேர் புகுந்திடும் அவுணர்கள் நெடுந்தலை புயங்கள்
மார்பு வெம்கரம் கழல் அடி வரைகளாய் வீழ
ஈர்பு நின்று அமர் இயற்றினன் சிறுவரை இகலி. (80)



(பரிசுத்தமாகிய) ஒரு குழந்தை வடிவாகத் தோன்றிய முருகப் பெருமான் தம்மைச் சூழ்ந்து நிற்கும் அசுரரை எல்லாம் அழித்து நீக்கி, சூரபன்மனுடைய வல்லபத்தையும் தமது வேற்படையினால் அழித்தருளுவர். நீ இதனை விரைவில் காண்பாய் என்று திருமாலானவர் இந்திரனுக்குக் கூறியருளினர். (76)

கடக்கும்=அழிக்கும், அறிதுயில்=ஞான நித்திரை.

திருமாலானவர் முருகன் பெருமையைக் கூறி இந்திரனுடைய மனத்தைத் தெளிவுறச் செய்து, முருகப் பெருமானின் பக்கத்தில் நின்று போரின் தன்மையைப் பார்ப்போம் என்று சொல்லி, வேற்படையையுடைய முருகக்கடவுளின் பக்கமாகத் தேவர்களுடன் சென்றார். (77)

மகபதி=இந்திரன், செவ்வேள்=முருகன்.

அறுமுகப் பெருமான், இந்திரன் முதலானவர்களின் வரவைக் கண்டு புன்முறுவல் செய்து போர்க்களத்துக்குச் செல்ல, பெரிய அசுர சேனை சமுத்திரம் ஆரவாரித்துப் போரினைத் தொடங்க, முன்னணியிற் சென்ற பூதர்களெல்லோரும் புறங்கொடுத்தார்கள். (78)

பாரிடர்=பூதர், முரிந்தார்=புறங் கோடுத்தார்.

பூதத் தலைவர்களும் போர் செய்து ஆற்றாது பின்வாங்கினர். இலக்கத்தெட்டு வீரர்களும் போருக்கு ஆற்றாது அகன்றார்கள். வீரவாகு தேவர் இத் தன்மைகளைக் கண்டு வில்லினைக் கொண்டு போருக்குச் சென்றார். (79)

இரிந்து=பின்வாங்கி.

அவர் தமது வில்லை வளைத்து பாணமழையைச் சொரிந்து அசுரர்களுடைய தலைகளும் புயங்களும் மார்புகளும் கைகளும் கால்களும் மலைகள் போல வீழ்ந்து குவியும்படி சிறிது நேரம் யுத்தம் செய்தார். (80)

சேர்பு=சென்று, வரை=மலை, ஈர்பு=அறுத்து, சிறுவரை=சிறிது நேரம், இகலி=பகைத்து.

மாகம் மேல் நிமிர் ஆயிரகோடி மா கடலுள்
நாகம் ஒன்று சென்று அலைத்தென நண்ணலர் எதிர் போய்
ஆகவம் புரிந்து உலப்புறுத் தன்மை கண்டு அழுங்கி
ஏக நாயகன் தனது பால் வந்தனன் இளவல். (81)

காலை அங்கதில் அவுணர்தம் தானையோர் கணத்தில்
சாலம் ஓடின பூதரில் தலைவரும் சாய்ந்தார்
கோல வெம்சிலை வீரரும் முரிந்தனர் குழவிப்
பாலனே இவண் வருமெனச் சூழ்ந்தனர் பலரும். (82)

தண்டு நேமியும் குலிசமும் சூலமும் தனுக்கள்
உண்டு மிழ்ந்திடு வாளியும் உடம்பிடித் தொகையும்
பிண்டி பாலமும் கணிச்சியும் பாசமும் பிறவும்
அண்டர் தந்திடு படைகளும் சொரிந்து நின்று ஆர்த்தார்.

பாரிடங்களின் படை எலாம் நெக்கதும் பாங்கர்
வீர மொய்ம்பனும் இளைஞரும் வருந்தி மீண்டதுவும்
கார் இனம் புரை அவுணர்தம் செய்கையும் காணா
மூரல் செய்தனன் எவ்வகைத் தேவர்க்கும் முதல்வன். (84)

நாட்டம் மூன்றுடைத் தாதைபோல் சிறிது இறை நகைத்து
நீட்டம் மிக்கதோர் சிலையினை நெடுங்கரம் பற்றிக்
சோட்டி நாண் ஒலி கொண்டிட அண்டரும் குலைந்தார்
ஈட்டம் மிக்க பல் உயிர்களும் துளக்கம் எய்தினவே. (85)



ஒரு மலையானது பெரிய ஆயிரகோடி கடல்களுட் புகுந்து கலக்கினாற் போல வீரவாகு தேவர் பகைவர்களாகிய அசுரர்களை அழிக்கும்படி போரினைச் செய்து அதனால் அழியாத் தன்மையைக் கண்டு மனம் வருந்தி முழுமுதற் கடவுளாம் முருகக் கடவுளின் பக்கத்தில் திரும்பி வந்தனர். (81)

மாகம்=ஆகாயம், நாகம்=மலை, ஆகவம்=யுத்தம், உலப்புறல்=குறைவுபடல்.

பூதர் கூட்டங்களும், பூதப்படைத் தலைவர்களும் பின்வாங்கி விட்டார்கள். வில்வீரனாகிய வீரவாகு தேவரும் இளைத்துப் போயினர். ஆதலின் இளம் பாலகனாகிய கந்தனே போர் செய்ய இனி வருவானென்று தம்முட் பேசிக்கொண்டு அசுர சேனாவீரர் வளைத்து நின்றார்கள். (82)

அசுரர் தண்டாயுதங்களையும், சக்கரப்படைகளையும், வச்சிராயுதங்களையும், சூலப்படைகளையும், வேற்படைகளையும், பிண்டி பாலங்களையும், மழுப்படைகளையும் பிரயோகித்து நின்று ஆரவாரித்தார்கள். (83)

அண்டர் தந்திடு படைகள்=தெய்வப்படைகள்.

சுப்பிரமணியப் பெருமான் பூதசேனைகள் உடைந்து போயதையும், வீரவாகு தேவரும் தம்பிமார்களும் வருத்தமுற்றுத் தமது பக்கத்தில் மீண்டு வந்ததனையும், அசுரர்களின் போர்ச் செயலையும் பார்த்துப் புன்னகை செய்தருளினார். (84)

கார்=மேகம், மூரல்=சிரிப்பு.

சிவபெருமான் திரிபுரங்களைத் தகனஞ் செய்த பொழுது முறுவல் செய்தது போல, முருகக் கடவுள் சிறிது புன்முறுவல் செய்து ஒரு விற்படையை எடுத்து வளைத்து நாணோசை செய்ய அதனைக் கேட்டுத் தேவர்களும் பதறினார்கள். பலவகை உயிர்களும் நடுக்கம் கொண்டார்கள். (85)

நாட்டம்=கண், நீட்டம்=உயர்ச்சி, ஈட்டம்=கூட்டம், துளக்கம்=நடுக்கம்.

## வேறு

முக்கணான் உதவிய திருமுகன் முரணுறு வரிசிலை முதிர்
ஒலி போய்த்
தொக்கன செவி தொறும் நுழைதலுமே தொலைவறும்
அவுணர்கள் தொகை முழுதும்
நெக்கன பகிர்வன இரதமெலாம் நிரைபட வருபரி
புரள்வனவே
மைக்கரி தரைமிசை விழுவனவால் மதிதொடு நெடுவரை
மறிவன போல். (86)

மாசறு மறைகளின் மறை அதனை மலைமுனி உணர்வகை
அருள்புரியும்
தேசிக முதலவன் வரிசிலையில் செறிமுகில் உறைவகை
சிதறுவபோல்
ஆசுகம் அளவில கடவினனால் அடல்கெழும் அவுணர்கள்
புடை வளையும்
காசினி அகலமும் விரிகடலும் ககனமும் மிடைவன கணை
யெனவே. (87)

கொடிகளை அடுவன அளவிலவே குடைகளை அடுவன
அளவிலவே
படைகளை அடுவன அளவிலவே பரிகளை அடுவன
அளவிலவே
கடகரி அடுவன அளவிலவே கனைஒலி இரதமொடு
அவுணர்கள் தம்
முடிகளை அடுவன அளவிலவே முழுதுலகு உடையவன்
விடுசரமே. (88)

பரவிய தரு இனம் என அவுணப்படை நிரை விழுவன
தொடு கடலில்
திரை என விழுவன புரவி இனம் திருநெடு வரைகளின்
விழுவன தேர்
கருமை கொள் மணி முகில் இனம் எனவே கடகரி
விழுவன கனவரைசூழ்
இரவியும் மதியமும் விழுவனபோல் எழுவன கவிகையும்
விழுவனவே. (89)



மூன்று கண்களையுடைய சிவபிரான் தந்தருளிய அழகிய முருகக் கடவுளுடைய வில் நாணின் பேரோசை சென்று செவித்துவாரங்கள் தோறும் புகுந்த அளவில் அசுர கூட்டம் முழுவதும் ஏங்கி மனவலி குன்றின. குதிரைகள் எல்லாம் வீழ்ந்து புரண்டன. மலைகள் விழுந்த தன்மையைப் போல யானைகள் பூமியில் விழுந்தன. தேர்கள் எல்லாம் உடைந்து போயின. (86)

பகிர்வன = உடைவன.

வேதங்களின் இரகசியப் பொருளாய் அமைந்த பிரணவப் பொருளைப் பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவர் உணரும்படி உணர்த்திய பரமாசாரியராம் முருகக் கடவுள், மேகம் மழைத்துளிகளைச் சொரியும் தன்மையைப்போல தமது வில்லினின்றும் அளவற்ற பாணங்களை அசுரர்களின்மேற் செலுத்தியருளினர். அதனால் இறைவனைச் சூழ்ந்த பூமியும் கடல்களும் ஆகாயமும் அஸ்திரங்களால் நிறைந்தன. (87)

ஆசுகம் = அம்பு, காசினி = பூமி, ககனம் = ஆகாயம்.

எல்லா உலகங்களையும் தமது வியாபகத்துட் கொண்ட சுப்பிரமணியப் பெருமான் பிரயோகித்த பாணங்கள் அசுரர்களின் கொடிகளை அறுத்தன, குடைகளை வெட்டின, ஆயுதங்களை அழித்தன, குதிரைகளைத் துணித்தன, யானைகளை வெட்டின, அசுரர்களின் தலைகளை அறுத்தன. (88)

அசுரசேனைகள் மரங்கள் வெட்டப்பட்டு விழுவன போல் விழுகின்றன. குதிரைக் கூட்டங்கள் கடலில் எழுந்த திரைகள் விழுவன போல் விழுகின்றன. தேர்கள் மலைகள் விழுவன போல் விழுகின்றன. மதயானைகள் மேகங்கள் விழுவன போல் விழுகின்றன. உயர்த்தப்பட்ட குடைகளும் பொன்மயமாகிய மேருமலையை வலஞ்சூழும் சூரிய சந்திரர்கள் விழுவனபோல் விழுகின்றன. (89)

தரு = மரம், புரவி = குதிரை, கனகம் = பொன், கவிகை = குடை.

செல்லுறு தாள்களும் அடுபடைகள் சிந்திய
செம்கைகளும் திறலே
சொல்லிய வாய்களும் விம்மலுறுந் தோள்களும்
நோக்குறு துணைவிழியும்
கல்லென ஆர்த்திடு கந்தரமும் கவசமும் வீரர்கள்
துவசமுடன்
எல்லையிலாது அமர் தனிமுதல்வன் எய்திடும் வாளிகள்
கொய்திடுமே. (90)

## வேறு

வட்டணை கொண்டிடும் மால்வரையும்
எட்டெனும் ஓங்கலும் யானைகளும்
பட்டுருவிக் கணை பாறினவால்
ஒட்டலர் எங்ஙனம் உய்குவதே. (91)

பொன்னுலகு எல்லை புகுந்து உலவும்
அன்னம் உயர்த்திடும் அண்ணல் பதம்
துன்னுறும் அச்சுதர் தொல் உலகில்
மின் எனவே செலும் வேள் கணையே. (92)

மேதினி கீண்டு விரைந்து புகும்
பாதலம் ஊடு பரந்து செலும்
மூதகும் அண்ட முகட்டு உருவும்
மாதிரம் ஏகுறும் வள்ளல் சரம். (93)

மூவிரு செய்ய முகத்தொருவன்
ஏவிய செம்சரம் எங்கும் உரு
மேவலர் தங்களை வீட்டிடும் வேறு
ஏவர்கள் கண்ணும் இறுத்திலவே. (94)

ஆனனம் ஆறுள அண்ணல் சரம்
தானவர் சென்னிகள் தள்ளுதலும்
வான் இடை போயின மாண் கதிர்கள்
மேனி மறைப்புறும் வெய்யவர் போல். (95)



முதல்வராம் குமாரக் கடவுள் பிரயோகித்த பாணங்கள் அசுர வீரர்களுடைய கால்களையும், வலிய கைகளையும், வீர வார்த்தைகளைக் கூறுகின்ற வாய்களையும், பரந்த தோள்களையும், கண்களையும், கழுத்துக்களையும், அணிந்த சட்டைகளையும், பிடித்திருந்த கொடிகளை யும் அறுத்து விடுகின்றன. (90)

கந்தரம் = கழுத்து, கவசம் = சட்டை, துவசம் = கோடி.

முருகக்கடவுள் பிரயோகித்த அம்புகள் உலகத்தைச் சூழ்ந்து நிற்கும் பெரிய சக்கர வாளகிரியிலும், திக்குகளில் உள்ள அட்ட கிரிகளிலும் அட்ட யானைகளிலும் தைத்து அவற்றை ஊடுருவி அப் பால் சென்றன. ஆதலால் அசுரர்கள் உயிர் பிழைத்தல் எவ்வாறு முடியும். (91)

ஓங்கல் = மலை, ஒட்டலர் = பகைவர்.

முருகக்கடவுள் ஏவிய பாணங்கள் மின்னலைப்போல் விரைந்து சென்று சுவர்க்க உலகத்தில் உலாவும், அன்னக் கொடியையுடைய பிரம தேவரது சத்திய உலகத்திற்கும் செல்லும், விஷ்ணு மூர்த்தி யின் வைகுந்த உலகத்திலும் செல்லும். (92)

அச்சுதர் = விஷ்ணு.

சுப்பிரமணியப் பெருமானுடைய அம்புகள் பூமியையும் கிழித் துக் கொண்டு கீழே செல்லும், பாதள உலகங்களிலும் பரந்து செல்லும். பெருமைமிக்க அண்ட முகட்டையும் ஊடறுத்துச் செல்லும். திக்குகளிலும் போகும். (93)

மேதினி = பூமி.

ஆறு திருவதனங்களையுடைய ஏக நாயகனாகிய முருகக் கடவுள் தூண்டிய பாணங்கள் எவ்விடங்களிலும் சென்று பகைவர்களாகிய அசுரர்களையே அழிக்கும். வேறு எவர்களுக்கும் துன்பம் செய் தில. (94)

மேவலர் = பகைவர், ஏவர்கள் = எவர்கள்.

ஆறு திருமுகங்களைக் கொண்ட பெருமையிற் சிறந்த முருகக் கடவுளுடைய பாணங்கள் அசுரர்களுடைய தலைகளை அறுத்து விட, அவை சூரிய சந்திரர்களுடைய வடிவங்களை மறைக்கின்ற இராகு கேதுக்களாகிய கொடியோர் ஆகாயத்தில் உலாவுதல் போலச் சென்றன. (95)

ஆனனம் = திருமுகம், வெய்யவர் = கோடியோர்.

வாள் எழு வேல் பிற வாங்கினர் தம்
தோள்களை வாளி துணித்தெறிய
நீள் இடை சென்று நிரந்திடு தம்
கேளிரை அட்டன கீழ்மையர் போல். (96)

மாசு அகல் வான் அகம் மாதிரவாய்
காசினி வேலை களத்தின் அகம்
பாசறை சுற்றிய பாடி எலாம்
ஆசு அற அட்டனன் அற்புதனே. (97)

அட்டிடு கின்றுழி அம்புயன் மால்
ஒட்டுறு வாசவன் உள் மகிழாக்
கெட்டனர் தானவர் கேடில் துயர்
விட்டனம் என்று விளம்பினரே. (98)

அடைந்தனர் விம்மிதம் ஆங்கு அவுணர்
மிடைந்தது நோக்கினர் வேற்படையோன்
தடிந்தது காண்கிலர் தாரணி மேல்
கிடந்தது கண்டனர் கேசரரே. (99)

அலமரு பாரிடர் அவ்வவர் தம்
தலைவர்கள் ஏனையர் தானவர் தம்
மலிபடை சாய்த்து வயம்புனை விற்
புலவனை ஆர்ப்பொடு போற்றினரே. (100)



முருகக் கடவுளின் அம்புகள் படைகளைத் தாங்கிய அசுரர்களுடைய கரங்களை வெட்டிவிட, படைகளுடன் அக்கரங்கள் சென்று, தீயோர் தம் உறவினரைத் துன்புறுத்துதல் போல அங்கு நின்ற தம் சுற்றத்தவராகிய அசுரர்களை அப்படைகளால் வெட்டின. (96)

நிரந்திடு=நிறைந்த, கேளிர்=சுற்றத்தவர்.

ஞானமே திருமேனியாய் அமைந்த முருகக் கடவுள் ஆகாயத்திலும் திக்குகளிலும் பூமியிலும் சமுத்திரத்திலும் யுத்த களத்திலும் பாசறையிலுமாகச் சூழ்ந்து நின்ற சேனைகளை எல்லாம் சிறிதுமில்லையாம்படி அழித்தருளினர். (97)

பாசறை=சேனை தங்கும் இடம், பாடி=சேனை.

முருகக் கடவுள் அங்கு நின்ற அசுரர்களை அழித்த பொழுதில், பிரமதேவரும் விஷ்ணு மூர்த்தியும் இந்திரனும் மனம் மகிழ்ந்து, அசுரர்கள் மாண்டார்கள், ஆதலால் நமது துன்பம் நீங்கப் பெற்றோம் என்று சொல்லி மகிழ்ந்தார்கள். (98)

அம்புயன்=பிரமா. ஒட்டுறு=சார்ந்த.

விஞ்சையர்கள் அசுரர்கள் வந்து நெருங்கி நின்றதை முன்னர்க் கண்டார்கள். உடனே அவர்கள் இறந்து பூமியின்மேற் கிடப்பதைப் பின்னர்க் கண்டார்கள். வேற்பெருமான் அவர்களை அழித்த செயலைக் கண்டிலர். அதனால் அதிசயம் அடைந்தார்கள். (99)

விம்மிதம்=அதிசயம், கேசரர்=விஞ்சையர்.

பூதர்களும், தலைவர்களும், இலக்கத்தொன்பது வீரர்களும், அசுர சைனியங்களை எல்லாம் அழித்து வெற்றி பெற்ற விற் சாதுரியராகிய சுப்பிரமணியப் பெருமானை மகிழ்ச்சியுடன் தோத்திரம் செய்தார்கள். (100)

வயம்=வெற்றி.

வள்ளல் சரம்பட வான் முகடு
கொள்ளுறு தானை குழாம் தொலைய
வெள் இடை ஆயின விண்ணவர் தம்
உள் அகம் ஆற்ற உவப்புறவே. (101)

அண்ட கடாகம் அது அப்புறமாய்க்
கொண்டிடு தானவர் கொள்கை இது
கண்டு இறைவன் கழல் காண நெறி
உண்டு இனி என்றனர் உள் மகிழ்வார். (102)

காற்றென அண்ட கடாக நெறி
தோற்றிய வாயில் தொடர்ந்து புகா
மேல் திகழ் தேர் கரி வெம்பரியின்
ஏற்றமொடு ஒல்லென ஏகினரால். (103)

அந்நெறி ஏகி இவ்வண்டம் எலாம்
துன்னினர் வான் புவி சூழ்ந்து வெளி
என்னதும் இல்லென ஈண்டினரால்
முன்னுற வந்து முடிந்தவர் போல். (104)

சூரன் எனப்படு தொல் இறைவன்
பேர் அமர் ஆற்றிடு பெற்றியினால்
தேர் இடை வந்துறு செய்கை தெரீஇ
ஆர்வமொடே நெடிது ஆர்த்தனரே. (105)



அருள் வள்ளலாகிய முருகக் கடவுளின் பாணங்கள் வெட்டியதனால் அண்டமுகட்டினளவும் பொருந்தி நின்ற அசுரசேனைகள் அழிந்து வெளியிடங்களாயின. அதனால் தேவர்கள் மனமகிழ்ச்சி அடைந்தார்கள். (101)

இவ்வண்டத்திற்கு அப்பால் தங்கி நின்ற அசுரர்கள், முன் வந்தவர் அழிந்து வெளி உண்டானதைக் கண்டு, நமது அரசனாகிய சூரபன்மனுடைய பாதங்களைத் தரிசிக்க வழியுண்டாமென்று சொல்லி மனம் மகிழ்ந்தார்கள். (102)

அவர்கள் தேர், யானை, குதிரைகளில் ஏறிக்கொண்டு அண்ட கடாகத்தின் வாயில் வழியாகக் காற்றைப் போல விரைந்து புகுந்து ஒல்லென்று ஆரவாரித்துக் கொண்டு வந்தார்கள். (103)

ஏற்றம் = மிகுதி.

வாயில் வழியாய் வந்து இவ்வண்டத்தில் நிறைந்த அசுரர்கள், முன்னர் வந்து முருகக் கடவுளால் அழிந்த அசுரர்களைப் போல ஆகாயத்திலும் பூமியிலும் சிறிதும் வெளியிடமில்லாமல் நெருங்கிச் சூழ்ந்தார்கள். (104)

துன்னினர் = நிறைந்தனர், ஈண்டி = நெருங்கி.

அவர்கள், தமது அரசனாகிய சூரபன்மன் பெரிய யுத்தத்தைச் செய்யும் நோக்கத்துடன் தேரின் மீது ஏறிவந்த செயலைக் கண்டு, மகிழ்ச்சியால் பெரிதும் ஆரவாரித்தார்கள். (105)

ஆர்த்தனர் தம்முன் அடைந்துளர் தாம்
பேர்த்திடுகின்ற பிணக்கிரியாய்
ஈர்த்திடு சோரி இடைப்படுதல்
பார்த்தனர் சிந்தை பரிந்தனரே. (106)

பரிந்தனர் நம்படை பட்டிடவே
புரிந்திடுவானொடு போர் புரியா
விரைந்து வயம் கொடு மீடும் எனுத்
தெரிந்தனர் சிந்தனை தேற்றினரே. (107)

தேற்றிடு கின்றுழி தேவரெலாம்
போற்றிட வீரர் புடைக்கணுற
ஆற்றல் கொள் பூதர்கள் ஆர்த்திடவே
தோற்றினன் ஈறொடு தோற்றமிலான். (108)

சேய் உருவாகிய சீர் முதல்வன்
மேயது கண்டு மிகச் சிறியன்
பாய்பரி யானை படைத்தும் இலான்
ஏ இவனே நமது எண்ணலனே. (109)

ஆண் தகை மைந்தன் இவ் அண்டமெலாம்
ஈண்டிய தானை இமைப் பொழுதின்
மாண்டிட அட்டனன் மற்றிது தான்
நீண்டிடும் அற்புத நீர்மையதே. (110)



அவ் வசுரர்கள் முன்னர் இங்கு வந்து போராடிய அசுரர்கள் இறந்து பிணமலையாகி, அப்பிணங்களின்றும் வடிந்த இரத்த ஆற்றினுள் கிடத்தலைக்கண்டு மனம் வருந்தினர்கள். (106)

**சோரி = இரத்தம், பரிந்தனர் = வருந்தினர்.**

மனம் வருந்திய அசுரர் நமது அசுரசேனைகளை மாளும்படி அழியச் செய்த இச்சிறுவனுடன் நாம் யுத்தத்தைச் செய்து வெற்றி பெற்றுத் திரும்புவோம் என்று நிர்சயித்த மனங்களைத் தேற்றினர்கள். (107)

**மீடும் = திரும்பும்.**

அப்பொழுது, முடிவும் முதலும் இல்லாதவராகிய சுப்பிரமணியப் பெருமான், தேவர்களனைவரும் தோத்திரம் செய்து வரவும், இலக்கத்தொன்பது வீரர்களும் பக்கங்களில் பொருந்தி வரவும், பூதர்கள் ஆரவாரஞ் செய்து கொண்டு வரவும், வந்தருளினர். (108)

**ஈறு = அந்தம், தோற்றம் = ஆதி.**

பரம் பொருளின் வடிவாயமைந்த முருகக்கடவுள் எழுந்தருளியதைப் பார்த்து, அவ்வசுரர்கள், இவன் மிகவும் குழந்தையாயிருக்கின்றான். அன்றியும் இவனிடம் பாயும் குதிரைச் சேனைகளும் யானைச் சேனைகளும் இல்லை. இவன் தானே எங்கள் பகைவன். (109)

**எண்ணலன் = பகைவன்.**

இச்சிறுவன் இவ்வண்டமெங்கும் நிறைந்த அசுர சேனைகளை எல்லாம் ஒரு நொடி நேரத்துள் மாண்டு போகும்படி அழித்துவிட்டான். இச் செயல் ஒன்றே பெரியதோர் அதிசயம் உடையதாய் இருக்கின்றது. (110)

அன்னது நின்றிட அங்கவன் மேல்
மன்னவர் மன்னவன் வந்து பொரு
முன் அமர் ஆற்றி முடிக்குதும் யாம்
என்ன இயம்பினர் யாவருமே. (111)

தற்பமொடு இன்னன சாற்றி அவண்
முற்படு தானவர் முக்கண் உடைத்
தற்பரன் நல்கிய சண்முகனை
வற்புடன் ஆர்த்து வளைந்தனரால். (112)

வளைந்திடு காலையில் வானவர்கள்
உளைந்தனர் பூதர்கள் உட்கி மனம்
தளர்ந்தனர் வீரர் சலித்தனரால்
விளைந்தது பேர் அமர் மீட்டுமெனா. (113)

வேறு

ஐயன் மருத்தினை அத்துணை நோக்கிக்
கையணி நெற்றி கடைக் குழையாகி
வெய்யவர் தானைகள் மேவுழி எல்லாம்
வையம் விடுக்குதி வல்லையில் என்றான். (114)

அட்டுறு நீப அலங்கல் புனைந்தோன்
கட்டுரை கொண்டு கரம் தொழு காலோன்
ஒட்டுறு நண்ணலர் உற்றுழி காண
விட்டனன் அம்ம விறற்பரி மான் தேர். (115)



அது நிற்க, அரசர்க்கும் அரசனாகிய சூரபன்மன், இச்சிறுவனிடத்து வந்து போராடி இவனை முடித்தற்கு முன்னரே நாம் சென்று போர் புரிந்து இவனை முடித்து விடுவோம் என்று அவ்வசுரர்கள் தம்முட் பேசிக்கொண்டார்கள். (111)

இறுமாப்புடன் இவ்வார்த்தைகளைப் பேசிக்கொண்டு வந்த அசுரர்கள், மூன்று கண்களையுடைய சிவபிரான் பெற்ற அறுமுகப் பிரானை, ஆரவாரித்துக் கொண்டு வலிமையுடன் சூழ்ந்தார்கள். (112)

தற்பம் = இறுமாப்பு, தற்பரன் = ஆன்மாவுக்குப் பரன், வற்பு = வீரம்.

அசுரர் சூழ்ந்த பொழுது பெரிய யுத்தம் பின்னரும் உண்டாயதே என நினைந்து தேவர்கள் மனம் வருந்தினார்கள். பூதர்கள் அஞ்சி மனஞ் சலித்தார்கள். வீரவாகு முதலிய வீரர்கள் மனம் சோர்ந்தார்கள். (113)

உளைத்தனர் = வருந்தினர், உட்கி = அஞ்சி.

அச்சமயத்தில் சுப்பிரமணியப் பெருமான் சாரதியாகிய வாயு தேவனைப் பார்த்து கொடிய அசுர சைனியங்கள் நிற்கும் இடங்களில் எல்லாம் விரைவில் நமது தேரைச் செலுத்துதி என்று பணித்தருளினார். (114)

கையணி = பக்க அணி, நெற்றி அணி = முன்னணி, கடைக் குழை = பின் அணி, வையம் = தேர்.

முருகப் பெருமானின் கட்டளையை கை தொழுது கேட்ட வாயு தேவன், படைவகுப்பாய் அமைந்த பகைவர்களாகிய அசுரர்கள் நின்ற இடங்கள் எல்லாம் வலிய குதிரைகள் பூட்டப்பட்ட மனவேகப் பொற்றேரைச் செலுத்தினான். (115)

நீபம் = கடப்பமலர், அலங்கல் = மாலை, காலோன் = வாயுதேவன், நண்ணலர் = பகைவர், ஒட்டு = படை வகுப்பு.

மண்ணிடை சென்றிடும் மாதிரம் நீந்தும்
விண்ணிடை சூழ்தரும் வேலையின் மீதாம்
கண்ணுறும் எப்படி கைதொழும் வானோர்
எண்ணினும் நாடரிது எந்தை பிரான் தேர். (116)

சேய் அதுகாலை திறம் திறம் ஆகி
மூயின தானவர் மொய்ம்புறு தானை
சாய்வுற ஓர்தொடை தன்னில் அநந்தம்
ஆயிர கோடிகளாக் கணை தொட்டான். (117)

பரிந்தன சூழ்ந்தவர் பாணிகள் மொய்ம்பு
சிரம் துணிவுற்றன செம்புனல் ஆழி
சொரிந்த பிணக்கிரி துற்றிய அற்றால்
நெரிந்தது வையம் நெளிந்தது நாகம். (118)

பொய் கொலை ஆற்றிய பூரியருக்கு ஆர்
செய்குவர் நன்மை செறிந்துளர் ஏனும்
கை கெழு ஞாளிகளே கறித்துண்ட
மை கெழு தானவர் மாண்டிடும் யாக்கை. (119)

ஒன்னலர் மீது இன் உயிர்க்கு உயிரானோன்
மின் என வீசிய வெம்சர மாரி
பின்னுற முந்து பெயர்ந்திடும் என்றால்
அன்னவன் தேர் விரைவு ஆர் கணிக்கின்றார். (120)



எமது பரம பிதாவாகிய முருகக் கடவுளின் தேரானது பூமியினிடங்களிலும் செல்லும், திக்குகளிலும் தாவிச் செல்லும், ஆகாயத்திலும் போகும், சமுத்திரங்களின் மேலும் செல்லும், தேவர்களும் தம் மனங்களாலும் அறிய முடியாதிருந்தது. (116)

அத்தருணத்தில் சுப்பிரமணியப் பெருமான் வகை வகை அணிகளாய் மொய்த்த வலிய அசுர சேனைகள் இறந்துபடும்படி ஒரு தொடையில் ஆயிர கோடி அம்புகளைச் செலுத்தியருளினார். (117)

மூயின = நெருங்கிய, மொய்ம்பு = வலிமை.

அப்பாணங்களால் சூழ்ந்து நின்ற அசுரர்களுடைய தலைகளும் கைகளும் புயங்களும் வெட்டுண்டன. இரத்தக் கடல்கள் சூழ்ந்தன. பிணமலைகள் குவிந்தன. அதனால் பூமி நசிந்தது. அப் பூமியைத் தாங்கும் ஆதிசேடன் பாரம் பொறாது நெளிந்தான். (118)

பரிந்தன = வெட்டுண்டன, பாணி = கை, மொய்ம்பு = புயம், துற்றிய = நெருங்கின.

அசுரர்களின் இறந்த உடல்களை அவர்களால் வளர்க்கப்பட்ட நாய்களே கடித்துத் தின்றன. பொய் கூறுதலையும் கொலையையும் செய்து வரும் கீழோர்க்கு உறவினராயினும் தீமை செய்வதன்றி நன்மை செய்யார். (119)

பூரியர் = கீழ் மக்கள், செறிந்துளர் = உறவினர், ஞாளி = நாய், கறித்து = கடித்து.

எமது உயிருக்கு உறுதுணையாயிருக்கும் சுப்பிரமணியப் பெருமானது தேரானது அப்பெருமானார் பகைவர்களாகிய அசுரர் மேல் செலுத்திய பாணங்கள் பிற்படும்படி முற்பட்டுச் சென்றதாயின் அதன் விரைவைக் கணித்துக் கூற வல்லார் யாவர். (120)

ஒன்னலர் = பகைவர்.

பரத்தினும் மேதகு பண்ணவன் வார்வில்
கரத்தினையும் விரைவால் கரம் தூண்டும்
சரத்தினையும் தடந்தேரினையும் கால்
உரத்தினையும் புகழ்வார் புடையுள்ளார். (121)

வெவ் விசயப் படை வீட்டிடும் வாளிச்
செவ் விசை தேர்விசை நாடினர் செவ்வேள்
கை விசையோ நெடுங்கால் விசை தானோ
எவ் விசையோ விசை என்றனர் வானோர். (122)

துய்யவன் வாளி துணித்திட வீரர்
கையொடு வானிடை செல்வ கணிப்பில்
ஐயிரு வட்டம் அராப்புடை பற்ற
வெய்யவர் பற்பலர் விண் எழல் போலும். (123)

கால் ஒரு பாங்கர் கழுத்து ஒரு பாங்கர்
வால் ஒரு பாங்கர் மருப்பொடு எருத்தம்
மேல் ஒரு பாங்கர் வியன்கை ஓர் பாங்காத்
தோல் இனம் இவ்வகையே துணிகின்ற. (124)

பல்லணம் அற்றன பல் முழுதற்ற
செல்லுறு தாளொடு சென்னியும் அற்ற
ஒல் ஒலி அற்ற உரம் துணிவுற்ற
வல் அமர் நீந்துறு மாத் தொகை முற்றும். (125)



பக்கத்தில் நின்றவர்கள் மேம்பாடுற்ற சுப்பிரமணியப் பெருமானுடைய திருக்கரங்களின் வேகத்தையும், அத்திருக்கரங்கள் செலுத்திய பாணங்களின் வேகத்தையும், பெருமையாகிய அவரது தேரின் வேகத்தையும், அதைச் செலுத்திய வாயு தேவனுடைய வேகத்தையும் புகழ்ந்தார்கள். (121)

அங்கு நின்ற தேவர்கள் கொடிய அசுர சேனைகளை அழித்த அம்புகளின் வேகத்தைப் பார்த்து, இவற்றை இத்துணை வேகமாகச் செலுத்திய முருகக் கடவுளுடைய திருக்கரங்களின் வேகமோ, இத்தேரை இத்துணை வேகமாகச் செலுத்திய வாயு தேவனின் வேகமோ, எது சிறந்தது என்று அறிந்திலோம் எனக் கூறினார்கள். (122)

விசை = விரைவு.

பரிசுத்தராகிய முருகக்கடவுளின் பாணங்கள் வெட்டிவிடவெட்டுண்ட அசுரர்களின் கைகளுடன் பெரிய பரிசைகள் ஆகாயத்தில் சென்ற தன்மை, கேது இராகு என்னும் சர்ப்பங்கள் பற்றிக்கொள்ள அநேக சூரியர்கள் ஆகாயத்தில் சென்றதனை நிகர்த்தது. (123)

ஐயிரு வட்டம் = அழகிய பெரிய பரிசை, அரா = இராகு, கேது.

யானைக் கூட்டங்கள் கால்கள் ஒரு பக்கத்திலும், கழுத்துகள் ஒரு பக்கத்திலும், வால்கள் ஒருபக்கத்திலும், தந்தங்களுடன், பிடரின மேலுறுப்புக்கள் ஒரு பக்கத்திலும், பெரிய துதிக்கைகள் ஒரு பக்கத்திலுமாக விழும்படி முருகக்கடவுளின் அம்புகளால் வெட்டுண்டன. (124)

தோல் இனம் = யானைக் கூட்டம்.

குதிரைக் கூட்டங்கள் முழுவதும் முருகக் கடவுளின் பாணங்களால் தமது கலணைகள் அறுபட்டன, பற்கள் உதிரப் பெற்றன கால்களும் தலைகளும் வெட்டுண்டன, ஒலிசெய்தற்குக் கருவியாகிய மிடறுகள் வெட்டுண்டன, மார்புகள் வெட்டுண்டன. (125)

பல்லணம் = குதிரை மேல் ஆசனம்.

மாழை கொள் வையம் மடிந்திட நேமி
ஆழி கொள் சோரியின் ஆழ்வன மேருச்
சூழுறும் வெய்யவர் தொல் புவி கீண்டே
கீழுறும் எல்லை கெழீஇயின போலும். (126)

ஏறிய தேர்களும் யானைகள் யாவும்
சூறை கொள் வாசிகளும் துணிவுற்றே
வீறகல் வீரர்மிசைப் பட வீழ்ந்த
மாறவை ஆற்றிடும் வல்வினையே போல் (127)

ஞாலமும் வானமும் நண்ணலர் ஆவி
மாலொடு வாரி மடங்கல் உலைந்தான்
சாலும் இவற்கிது தாள் வலியால் கோல்
காலன் எனப் புகல் கட்டுரை பெற்றான். (128)

ஏறி படை யாவையும் ஏமம் அதாகச்
செறி படை யாவையும் சேயவன் ஏவால்
முறிபடுகின்ற முனிந்து உவணப்புள்
கறிபட மெய் துணி கட்செவியே போல் (129)

முன் உறுவார் கண் முரட்படை தூவிப்
பின் உறுவார் பெயராது புடைக் கண்
துன்னுறுவார்கள் எலாம் துணிவாக
மின் என எங்கணும் வேள் கணை தூர்த்தான் (130)



முருகக்கடவுளின் அம்புகளால் தேர்கள் அழிந்து போக, அவற்றின் உருள்கள் அத் தேர்களைச் சூழ்ந்து நின்ற இரத்த வெள்ளத்துள் அழ்ந்து போன தன்மை, மேரு மலையை வலம்வரும் சூரியர்கள் பூமியைச் சூழ்ந்த கடலைக் கிழித்துக்கொண்டு கீழிடத்திற்கு போகின்ற தன்மையை நிகர்த்தது. (126)

மாழை=பொன்நிறம், வையம்=தேர், நேமி=சில்லு.

அசுரர் ஏறிச் சென்ற தேர்களும், யானைகளும், குதிரைகளும், முருகக்கடவுளின் பாணங்களால் வெட்டுண்டன. அவைகள் தம்மீது ஏறித்துன்புறுத்திய அசுரர்க்குத் தாமும் பதில் செய்தது போல, அவ்வசுரர் தம்மைச் சுமந்து துன்புறும்படி அவர்கள் மேல் விழுந்தன. (127)

வாசி=குதிரை.

இயமனானவன் இறந்த பகைவர் உயிர்களை எடுத்து எடுத்துக் கொண்டு பூமியிலும் ஆகாயத்திலுமாக உலைந்து திரிந்தான். இவன் தனது கால் வல்லமையினாற் போலும் காலன் என்று சொல்லப்படுகின்ற பெயரைப் பெற்றுக் கொண்டான். இவனுக்கு இப்பெயர் இயைந்ததேயாம். (128)

கருடனாகிய பறவையின் அலகினால் பாம்புகளின் கடிக்கப்பட்ட உடலங்களைப் போல் சுப்பிரமணியப் பெருமானுடைய பாணங்களால் அசுரர்களுடைய எறிபடைகளும் சேமப்படைகளும் வெட்டுண்டன. (129)

ஏமம்=சேமம், உவணப்புள்=கருடன், கட்செவி=பாம்பு.

குமாரக் கடவுள் தமது முன்னிலையில் நிற்பவர்களும், பிற்புறத்தில் நிற்பவர்களும் இருபக்கங்களிலும் நிற்பவர்களுமாகிய அசுரர்கள் எல்லோரும் வெட்டுண்ணும்படி எப்பக்கங்களிலும் மின்னலைப்போல் பாணங்களைச் செலுத்தினார். (130)

முரட்படை=வலியபடை, தூவி=செலுத்தி, துணிபு=வெட்டுதல்.

சூலமதே கொல் கணிச்சி கொல் தொல்லை
மால் எறி நேமி கொல் வச்சிரமே கொல்
காலொடு சென்ற கனற்குழுவே கொல்
வேலது கொல் என வேள் கணை விட்டான் (131)

## வேறு

மழைத்திடு மெய் உடை மாற்றலர்கள்
இழைத்திடு மாய இயற்கைகளும்
விழுத்தக வீசும் விறற் படையும்
பிழைத்தன தாங்கள் பிழைத்திலரால் (132)

முக்கணன் மாமகன் மொய்கணைகள்
தொக்கவர் யாக்கை துணித்திடலும்
மெய்க்கிடு பல்கலன் மீன் விழல் போல்
திக்குலவிப் படி சிந்தின வே. (133)

அண்ணல் சரங்கள் அறுத்திடலும்
எண்ணலர் யாக்கைகள் இற்றவை தாம்
மண்ணை அளந்து அயில் மால் எனவே
விண்ணை அளந்து விழுங்கின வே. (134)

சூழுறு தானை துணிந்த உடல்
ஏழெனும் நேமியும் எண் தகு பேர்
ஆழியும் விண்ணும் அடைத்து இமையோர்
வாழ் உலகங்களை வளவிய வே. (135)



சிவபெருமான் எறிந்த சூலப்படையோ! மழுப்படையோ! திருமாலெறிந்த சக்கராயுதமோ! இந்திரனெறிந்த குலிசப் படையோ! வாயுவுடன் சேர்ந்து வந்த அக்கினியோ! தாம் எறிந்த வேற்படையோ என்று சொல்லும்படி முருகக் கடவுள் பாணங்களைப் பிரயோகித்தார். (131)

பகைவர்களாகிய அசுரர்கள் செய்த மாயத்தன்மைகளும், வெற்றி பெறும்படி எறிந்த வலிய படைக்கலங்களும் தவறுதல் அடைந்தன. அவற்றை உபயோகித்த அசுரர்களும் இறந்து போயினர். (132)

மழைத்திடு = மேகம் போன்ற, மாற்றலர் = பகைவர், விழுப்பம் = உயர்வு.

மூன்று கண்களையுடைய சிவபிரானுடைய திருக்குமாராகிய முருகக் கடவுளின் பாணங்கள் அசுரர்களின் உடல்களைத் துண்டாக்கிவிட, அவர்கள் அணிந்திருந்த பல ஆபரணங்களும் விண்மீன்கள் ஆகாயத்திலிருந்து தவறி விழுதல்போல பூமியில் விழுந்து கிடந்தன. (133)

தோக்கவர் = கூடினவர், மீன் = நட்சத்திரம், உலவி = செறிந்து, படி = பூமி.

கடவுள் தன்மையிற் சிறந்த முருகக் கடவுளின் பாணங்கள் அசுரர்களின் உடல்களை வெட்டிவிட, மண்ணுலகை ஓரடியினால் அளந்தும், உண்டும் மறைத்த திருமாலானவர் தமது நெடிய வடிவத்தால் விண்ணுலகையும் அளந்து மறைத்தது போல வெட்டுண்ட உடல்கள் மண்ணுலகையும் மறைத்து விண்ணுலகையும் மறைத்தன. (134)

அயில் மால் = உண்டமால்.

அசுர சேனைகளின் வெட்டுண்ட உடலங்கள் சப்த சமுத்திரங்களையும், பெரிய புறவாழிச் சமுத்திரத்தையும், ஆகாயத்தையும் மூடிப் பின்னர் தேவர்கள் வாழும் மேலுலகங்களையும் மறைத்தன. (135)

வளவிய = மறைத்தன.

காடி இழந்து கவந்தம் அதாய்
ஆடின வெள்ளமும் ஆயிர மா
கோடி அதுண்டு குகன் கணையால்
வீடின எல்லை விதிக்குநர் யார். (136)

வீழுறு மாற்றலர் மெய்க் குருதி
ஆழிகளாகி அகன் புவியில்
பூழைகளோடு புகுந்து பிலம்
ஏழுள எல்லையும் ஈண்டிய தே (137)

வேறு

பாதல எல்லை பரந்திடு சோரி
பூதலம் மீண்டு புகுந்து பராவி
ஓத நெடும் கடல் ஓங்கிய வாபோல்
மாதிரம் எங்கும் மறைத்தன அன்றே (138)

மீன் உடுவாக விளங்கிய திங்கள்
பானு மலர்ந்திடு பங்கய மாகச்
சோனை கொள் மா முகில் தோணியதாக
வான் நிமிர் செம்புனல் மாகடல் ஒக்கும். (139)

மாசறு கூற்றனும் மற்றுளர் தாமும்
கேசரர் ஆகிய கிங்கரர் யாரும்
பாசம் மலைந்திடு பல்பிணி பற்று
வீசினர் ஆருயிர் மீன்கள் கவர்ந்தார். (140)



தலைகளையிழந்து உடற் குறைகளாய் நின்று ஆடிய சேனை வெள்ளங்களும், ஆயிர மகாகோடி என்னும் அளவினதுண்டு. ஆதலினால், முருகக் கடவுளின் பாணங்களால் அழிந்துபோன சேனைகளின் அளவை அளவிட்டுக் கூற வல்லவர் யாவர்? (136)

காடி = தலை, கவந்தம் = உடற்குறை.

பகைவர்களாகிய அசுரர்களின் உடல்களினின்றும் சொரிந்த இரத்தம் கடல்கள் போலப் பரந்து பூமியினகட் பொருந்திய துவாரங்களால் கீழ்ச் சென்று ஏழாகிய பாதலங்களின் எல்லையளவும் நிறைந்தது. (137)

பூழை = துவாரம்.

பாதல எல்லையளவில் பரந்த இரத்தம் அங்கு நிறைந்தமையால், மீண்டு பூமியின்கண் வந்து திரைகளையுடைய நெடிய சமுத்திரம் பூமியில் பரந்து பொங்கி எழுந்தது போல எவ்விடங்களையும் மறைத்தது. (138)

ஓதம் = திரை.

நட்சத்திரங்கள் மீன்கள் போலாகவும், பூரண சந்திரனும் சூரியனும் வெண்டாமரை செந்தாமரை மலர்கள் போலாகவும், மழையைப் பெய்யும் கரிய மேகங்கள், மரக்கலங்கள் போலவும் பொருந்தும் இயல்பினால் ஆகாயத்தில் கிளர்ந்த இரத்த வெள்ளம் பெரிய சமுத்திரத்தை நிகர்த்திருந்தது. (139)

பானு = சூரியன், சோனை = விடாமழை.

இயமனும் அவனது தொழில் அதிகாரிகளும் வலைஞர்களாகிய பரதவர்களும் யமபாசங்களால் தொடுக்கப்பட்ட பல வலைகளை இரத்தமாகிய கடலுள் வீசி அசுரர்களின் உயிர்களாகிய மச்சங்களைக் கைப்பற்றினார்கள். (140)

பால் உறுகின்ற பணிக்கிறை நாப்பண்
மால் அருளில் துயில் மாட்சிமை என்ன
நீல் உறு திங்கள் நிணம் கெழு செந்நீர்
வேலையின் மீது விளங்கிய தம்மா. (141)

மட்டறு செம்புனல் வாரிதி நீந்தி
ஓட்டலர் யாக்கையின் ஓங்கல் அறுத்துத்
தட்டுறு செங்கதிர் சண்முக மேலோன்
விட்டிடு நேமியின் விண்மிசை செல்லும் (142)

சிறைப் புறவுக்கு அருள் செய்திட மெய் ஊன்
அறுப்பவன் என்ன அடைந்தனர் விண்ணினை
நெறிப்படு வானவர் நேரலர் யாக்கை
உறப்படு சோரி மெய் உற்றிடு நீரால் (143)

ஆனதோர் எல்லையில் அண்டம் நிறைந்த
சேனைகள் வீந்தன செம்மல் சரத்தால்
ஊன் உயிர் பூதம் ஒழிந்தன முக்கண்
வானவன் மூரலின் மாய்ந்திடுமா போல். (144)

## வேறு

அண்டம் ஈங்கிது முற்றொருங்கு ஈண்டிய அவுணர்
தண்டம் மாய்தலும் ஏனைய அண்டங்கள் தம்மில்
கொண்ட தானைகள் பின்னரும் வந்திடக் குமரன்
கண்டு மற்றவை தொலைத்தனன் செலுத்திடு கணையால்



பாற் சமுத்திரத்தில் பொருந்திய சர்ப்பங்கட்கரசனாகிய வெண்ணிறமுடைய அனந்தனென்னும் சர்ப்பாசனத்தின் நடுவில் திருமாலானவர் யோக நித்திரை செய்யும் காட்சியைப் போல, வெண்ணிறமாகிய கொழுப்பு மேல் நிறைந்த இரத்த சமுத்திரத்தின்மேல் நீலநிறத்தை நடுவில் கொண்ட சந்திரன் தோன்றியது. (141)

பணி = பாம்பு, நிணம் = கொழுப்பு, வேலை = சமுத்திரம்.

தேரின் மீதிவர்ந்து வரும் சூரியன் இரத்தமாகிய கடலினின்று எழுந்து, பகைவர்களின் பிணக்குவியலாகிய மலையைத்தாவி மேலெழுந்து ஆறுமுகப் பெருமான் செலுத்திய சக்கரப்படைபோல் ஆகாயத்தில் தோன்றினன். (142)

வாரிதி = சமுத்திரம், ஓங்கல் = மலை, தட்டு = தேர்.

ஆகாய வழியில் சென்று கொண்டிருந்த தேவர்களின் உடல்களில் அசுரர்களின் இரத்தம் திவளப்பெற்ற தன்மையினால், ஒரு வேடன் கைப்பட்ட ஒரு புறாவைக் காப்பதற்காகத் தன் உடம்பினின்றும் ஊனை அரிந்து கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியின் உடம்பு போல தேவர்களின் உடம்புகள் காட்சி கொடுத்தன. (143)

நெறி = வழி, நேரலர் = பகைவர், நீர்மை = தன்மை.

உருத்திர மூர்த்தியின் புன்னகையாகிய அக்கினியினால், உடம்புகளும் பஞ்சபூதங்களும் தத்துவங்களும் சர்வசங்காரகாலத்தில் அழியும் தன்மை போல, சுப்பிரமணியப் பெருமானுடைய அம்புகளால் இவ்வண்டமெங்கும் நிறைந்து நின்ற அசுரசேனைகள் அழிந்தன. (144)

வீந்தன = இறந்தன.

குமாரக்கடவுள் இவ்வண்டத்தில் நிறைந்து நின்ற அசுர சேனைகள் முழுவதையும் அழித்தபின் மற்றைய அண்டங்களில் அடங்கியிருந்த சேனைகள் பின்னரும் வந்து சேர அவைகளையும் முருகக் கடவுள் அழித்தருளினார். (145)

தண்டம் = சேனை.

அறுத்து வெம்முனைத் தானையை ஆண்டுசெல் அனிகம்
மறித்தும் வந்து வந்து அடைதரும் இவண் என மனத்துள்
குறித்து வெங்கணை மாரியால் அண்ட கோளகையின்
நெறித்தரும் பெருவாயிலை அடைத்தனன் நிமலன். (146)

ஆண்டு செல் நெறி மாற்றியே அண்ணல் வெம் கணையால்
மாண்ட தானைகள் சோரியும் களேவர மலிவும்
நீண்ட பாதலம் கடல் புவி கொண்டு வான் நிமிர்ந்தே
ஈண்டுகின்றது கண்டனன் வரை பக எறிந்தோன் (147)

நெற்றி நாட்டத்தின் உலகெலாம் அட்டிடு நிமலன்
பெற்ற மாமகன் பன்னிரு விழிகளும் பிறங்கு
கற்றை வெம் சுடர் வடவை போல் ஆக்கி அக்கணத்தில்
உற்று நோக்கினன் எரிந்தன களேவரத்தோங்கல் (148)

வெந்து நுண் துகள் பட்டன களேவரம் விசும்பில்
உந்து சோரி நீர் வறந்தன மூவகை உலகும்
முந்து போலவே அமைந்தன முளரியான் முகுந்தன்
இந்திரன் ஆதியர் ஆர்த்தனர் குமரனை ஏத்தி. (149)

பாறு உலாவரும் களேவரத்து அமலையும் படிமேல்
வீறு சோணித நீத்தமும் வேவுற விழித்து
நீறு அதாக்கினன் சூரனை அட்டிலன் நின்றான்
ஆறு மாமுகன் ஆடலை உன்னினனும் கொல் (150)



குமாரக்கடவுள் போர் முனையில் வந்த அசுர சேனைகளை எல்லாம் அழித்துப் பின்னரும் இவ்வண்டத்திற்கு ஒன்றன் பின் ஒன்றாய் சேனைகள் வந்து சேரும் என்பதனை (அவர்) நினைந்து, அவைகள் வராவண்ணம் அண்டத்தின்கண் அமைந்த பெருவாயிலை கொடிய அம்புகளால் அடைத்தருளினார். (146)

கிரவுஞ்சமலை பிளவுபடும்படி வேலைச் செலுத்திய குமாரக்கடவுள் அம்புகளால் பெருவாயிலை அடைத்த பின், இறந்த அசுர சேனைகளின் பிணக்குவியல்களும் இரத்தமும், பாதலங்களையும் சமுத்திரங்களையும் பூமியினிடங்களையும் நிரப்பிக்கொண்டு ஆகாயத்தில் உயர்ந்து நெருங்கி இருந்ததனைக் கண்டருளினார். (147)

களேவரம் = பிணம், பக = பிளக்கும்படி.

சர்வ சங்கார காலத்தில் தமது நெற்றிக்கண்ணக்கினியால் சர்வ உலகங்களையும் அழித்தருளுக்கின்ற சிவபிரான் பெற்ற குமாரராம் சுப்பிரமணியக்கடவுள், தமது பன்னிரண்டு திருக்கண்களையும் திரண்ட வடவாமுகாக்கினி போலச் சுவாலிக்க அப்பிணக் குவியலைப் பார்த்தருளினார். உடனே அவைகள் எரிந்து சாம்பர் ஆயின.

ஓங்கல் = மலை. (148)

பிணங்கள் எரிந்து சப்பாராயின. இரத்தம் வற்றியது. மூவகை உலகங்களும் பண்டுபோலத் தம்மியல்பில் அமைந்தன. பிரமாவும் விஷ்ணுவும் இந்திரனும் தேவர்களும் சுப்பிரமணியப் பெருமானைத் தோத்திரம் செய்து கொண்டு ஆரவாரித்தார்கள். (149)

விசும்பு = ஆகாயம், முளரி = தாமரை, முகுந்தன் = விஷ்ணு.

ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள் பருந்துகள் உலாவுகின்ற பிணக்குவியல்களும் பூமியெங்கும் பெருகிய இரத்தவெள்ளமும் எரிந்து போம்படி திருநோக்கம் செய்து சாம்பராக்கினர். சூரபன்மனை மாத்திரம் எரிந்துவிடாது நின்றார். அவனுடன் போராடும் திருவிளையாடலை திருவுளத்துக் கொண்டார் போலும்.

பாறு = பருந்து, அமலை = குவியல், சோணிதம் = இரத்தம். (150)

ஆகும் எல்லையில் ஒல்லையில் அடுகளத் தடைந்த
சேகு நெஞ்சுடைச் சூரன் இத்திறம் எலாம் தெரிந்து
மாகம் நீடு நம் தானையை அலைத்த மாற்றலனை
நாகர் தம்மொடு முடிக்குவன் யான் என நவின்றான் (151)

மாற்றம் இத்திறம் இசைத்திடும் அவுணர் கோன் மனத்திற்
சீற்றம் மூண்டிட அமர் வினை குறித்தனன் திகிரிக்
காற்றின் ஒல்லை வந்தேற்றலும் மருத்துவன் கடவிப்
போற்று தேர் மிசை முருகனும் சென்று எதிர் புகுந்தான்.

புக்க காலையில் அறுமுகன் தோற்றமும் புடையில்
மிக்க பன்னிரு கரங்களும் வியன் படைக் கலனும்
தொக்க வீரமும் வன்மையும் நோக்கியே தொல்லைத்
தக்கனே என அவுணர் கோன் இன்னன சாற்றும். (153)

சிறந்த வான் மதி மிலைச்சினோன் அருள்புரி செயலால்
இறந்திடேன் யான் என்றும் இப்பெற்றியாய் இருப்பேன்
மறந்தும் என்னொடு பொருதிலர் தேவரும் மலைந்தே
இறந்துளார் பலர் உணர்ந்திலை போலும் நீ இதுவே.

உள்ளம் நொந்து நொந்து என் பணி ஆற்றியே உலைந்து
தள்ளுறுஞ் சூரர் மொழியினைச் சரதம் என்றுன்னிப்
பிள்ளை மென் மதியால் இவண் வந்தனை பெரிதும்
அள்ளல் உற்றுழிப் புகுந்திடும் கயமுனி அது போல்



அச்சமயத்தில் யுத்தகளத்தில் வந்து நின்ற கொடிய மனத்தையுடைய சூரபன்மன் நமது சேனையை அழிவு செய்த நம் பகைவனாகிய இக்கந்தனை தேவர்களுடன் விரைவில் அழிப்பேன் யான் என்று கூறினான். (151)

ஒல்லையில் = விரைவில், சேகு = வைரம், மாகம் = ஆகாயம், நாகர் = தேவர், நவின்றான் = கூறினான்.

வீரம் பேசிய அவுணராசனாகிய சூரபன்மன், மனத்தில் கோபம் மூளப் பெற்றுப் போர் செய்தலைக் கருதிச், சூழல் காற்றைப் போல விரைவாய் வந்து எதிர்த்தான். சுப்பிரமணியப் பெருமான், வாயுதேவன் துதித்துக் கொண்டு செலுத்திவரும் மனவேகப் பொற் றேரின் மேற் சென்று எதிர்த்தருளினார். (152)

மாற்றம் = வார்த்தை, திகிரிக் காற்று = சுழல் காற்று, மருத்துவன் = வாயு தேவன், கடவி = செலுத்தி.

முருகக் கடவுள் புகுந்த சமயத்தில் சூரபன்மன், அறுமுகப் பிரானுடைய குழந்தைத் தோற்றத்தையும் இருபக்கங்களிலும் பொருந்தியிருந்த பன்னிரு திருக்கரங்களையும், அவற்றில் உள்ள பன்னிரு படைகளையும், நிறைந்த பராக்கிரமத்தையும், வலிமையையும், பார்த்துப் பண்டைக் காலத்தில் தக்கன் என்பவன் சிவபிரானை நிந்தித்ததைப் போல பின்வருமாறு கூறுவானாயினான். (153)

புடை = பக்கம்.

பாலசந்திரனைத் தரித்த சிவபிரான் அளித்த அழியா வரத்தினால் யான் ஒரு காலத்திலும் இறந்துபடேன். எக்காலத்தும் இப்பொழுது இருத்தல் போலவே அழியா திருப்பேன். திருமால் முதலிய தேவர்களும் என்வரப்பேற்றை மறந்தேயாயினும் என்னுடன் போர் செய்ய வந்திலர். என்வரப்பேற்றை மறந்து வந்து என்னுடன் போராடி இறந்து போனவர் பலராவர். குழந்தை யாதலின் நீ இதனை அறியவில்லைப் போலும். (154)

மிலைச்சுதல் = சூடுதல், பெற்றி = தன்மை, மலைந்து = போராடி.

மனம் வருந்தி வருந்தி எனது குற்றேவல்களைச் செய்துகொண்டு உலைந்து திரிகின்ற தேவர்களுடைய வார்த்தைகளை உண்மையென மதித்து, ஒரு யானைக்கன்று சேறு மிகவும் பொருந்திய இடத்திற் சென்று புதைந்து நிற்றலும் போதலும் முடியாது தவிக்கும் தன்மை போல உனது சிறுபிள்ளைப் புத்தியினால் என்னிடத்து வந்து அகப்பட்டுக்கொண்டாய். (155)

பணி = ஏவல், சரதம் = உண்மை, அள்ளல் = சேறு, உழி = இடம், கயமுனி = யானைக்கன்று.

உடைப் பெரும் படை செறுத்தனை பாலன் என்றுன்னை
விடுப்பதில்லையால் வெரிந்து கொடுக்கினும் விரைவிற்
படுப்பன் வானவர் தொகையுடன் பாரிடர் தமையுங்
கெடுப்பன் என்றனன் தன் பெருங்கிளையுடன் கெடுவான்.

வெம்புரைத் தொழிற்கு ஒருவனும் கயவ நீ வெறிதே
வம்புரைத்தனை ஆவதொன்றில்லை நின் மார்பம்
செம் புரைப்பட யாம் விடுகின்றதோர் திறல்வாய்
அம்புரைத்திடும் மாறுனக்கு என்றனன் அமலன். (157)

ஆரும் நேர் இலாப் புங்கவன் சேய் இனது அறையச்
சூரனாகிய அவுணர் கோன் துண்ணெனச் செயிர்த்து
மேரு நேர்வதோர் வரிசிலை எடுத்து விண் இழியும்
வாரி போன்றிடு நாணினை ஏற்றியே வளைத்தான். (158)

வளைத் தடம் கிரி புரைவதோர் சிலையினை வயத்தால்
வளைத்த செய்கையைக் காண்டலும் பாரிடர் வானோர்
வளைத் தடம் கடல் வந்திடு நஞ்சொடு மலைவான்
வளைத்த தன்மை போல் அவுணர்தம் முதல்வனை வளைத்
தார். (159)

சிலையை வீசினர் கொடுமரம் வீசினர் செறிமூ
இலையை வீசினர் படை எலாம் வீசினர் எதிர்ந்தார்
உலைய வீசியே அடல் செயும் மும்மதத் துவாவை
வலையை வீசியே பிணித்திட மதித்துளார் என்ன. (160)



நீ எனது பெரிய சேனைகளை அழித்தாய். ஆதலால் குழந்தை என்று நினைந்து மன்னித்து விடமாட்டேன். நீ அஞ்சிப் புறங் கொடுத்து ஓடினும் விரைவில் அகப்படுத்துவேன். தேவர்களையும் பூதர்களையும் அழிப்பேன் என்று தன் பெரிய சுற்றத்தாருடன் அழியும் சூரபன்மன் கூறினான். (156)

செறுத்தனை = அழித்தனை, வெரிந் = முதுகு, கிளை = சுற்றம்.

முருகக் கடவுள் அவனை நோக்கிக் கொடிய இழி தொழில் செய்தலில் ஒப்பற்றவனாப் விளங்கும் கீழ்மகனே! நீ வீணில் வம்பு வார்த்தைகளைக் கூறினாய். ஆனால் உன்னால் முடிவது ஒன்றும் இல்லை. உனக்கு மறுமொழியை யாம் உன் நெஞ்சில் செந்நிறத் துவாரம் பொருந்தும்படி செலுத்துகின்ற வலிய நுதியினையுடைய ஓர் அம்பு சொல்லும் என்று கூறியருளினார். (157)

புரை = பழுது, குற்றம், கயவன் = கீழ்மகன், வெறிதே = வீணில், புரை = துவாரம், வாய் = நுதி, மாறு = மறுமொழி.

ஒப்பற்ற சிவபிரானுக்குத் திருக்குமாரராம் முருகக் கடவுள் இதனைக் கூறியருள, சூரபன்மன் விரைவில் சீற்றங் கொண்டு மேரு மலையை யொத்த பெரிய வரிந்த வில்லினை எடுத்து வளைத்து மேகத்தினின்றும் சொரியும் மழைத்துளி போன்ற நெடிய நாணினை ஏற்றினான். (158)

நேர் = ஒப்பு, அறைய = கூற, வாரி = மழைத்துளி.

சூரபன்மன், பெருமையாகிய முழஞ்சுகளையுடைய மலைபோலும் ஒரு வில்லினை வலிமையினால் வளைத்த செயலைப் பூதர்கள் கண்டு, தேவர்கள் சங்குகளமைந்த விசாலமாகிய பாற்கடலில் தோன்றிய ஆலகாலத்துடன் போர்புரியும்படி வளைத்த தன்மையைப் போலச் சூரபன்மனைச் சூழ்ந்தார்கள். (159)

(1) வளை = முழஞ்சு, (2) வளை = சங்கு.

எதிர் வந்தவர்களை மனம் கலங்கும்படி அடித்துக் கொல்லும் ஒரு களிற்று யானையை வலையை வீசி அகப்படுத்திக் கட்ட நினைத்த வேடர்களைப் போலப் பூதர்கள் அவன் மேல் மலைகளை எறிந்தார்கள், வளை தடிகளை எறிந்தார்கள், முக்கிளைகளையுடைய இலைபோலும் சூலப்படைகளை எறிந்தார்கள். மற்றைப் படைகளெல்லாவற்றையும் எறிந்தார்கள். (160)

சிலை = மலை, உவா = யானை,

கண்டு மற்றதை அவுணர் கோன் வில் உமிழ் கணையாம்
கொண்டல் நுண் துளி சிதறியே கணங்கள் கூட்டறுத்து
விண்டுலாவர அரக்கினுல் குயின்றதோர் வெற்பை
சண்ட வெம்கனல் உடைப்பது போலவே தடிந்தான்.(161)

வீடினர்களும் புயம் கரம் துணிந்திட மெலிந்து
வாடினர்களும் மயங்கி வீழ்ந்தார்களும் வல்லே
ஓடினர்களும் ஓடவும் வெருவி வேற்றுருவம்
கூடினர்களும் ஆயினர் பாரிடர் குழாத்தோர். (162)

பூதர் சாய்ந்துழி இலக்கரோடு எண்மரும் பொருவில்
வேதநாயகன் தூதனுஞ் சூழ்ந்து உடன் மேவிக்
கோதை தூங்கிய கொடுமரமாயின குனித்துச்
சோதி வான் கணை மாரிகள் அவுணன் மேற் சொரிந்தார்.

சொரிந்த வெம்கணை எங்கணும் வருதலும் சூரன்
தெரிந்து வாளி தொட்டறுக்கலன் நின்றதோர் செவ்வி
விரைந்து வந்தவை ஆங்கவன் மெய்ப்பட விளிந்து
பரிந்து போயின செய்ததொன்றில்லை அப்பகழி. (164)

பரப்பின் ஈண்டிய வீரர்தம் சூழ்ச்சியைப் பாரா
உரப்பி ஆவலங் கொட்டியே வெகுளி கொண்டு ஒரு தன்
பொருப்பு நேர் சிலை குனித்து வெம் சிலீமுகம் பொழிந்து
திருப்பெரும் தடந் தேரொடுஞ் சாரிகை திரிந்தான். (165)



சூரபன்மன் அதனைக் கண்டு தனது வில்லாகிய மேகத்தினின்றும் சொரிகின்ற பாணங்களாகிய மழைத்துளிகளைச் சிதறிக் கொடிய வெப்பமான அக்கினியானது ஆகாயம் வரை உயர்ந்த அரக்கினுல் இயற்றப்பட்ட மலையை அழிப்பது போலப் பூதர்களை அழித்தான். (161)

விண்டு = ஆகாயம், குயின்ற = செய்யப்பட்ட, சண்டம் = வேகம், தடிதல் = அழித்தல்.

பூதர் கூட்டத்தார் சூரபன்மனுடைய பாணங்களால் இறந்தவர்களும், புயங்களும் கரங்களும் இழந்து தளர்ந்தவர்களும், மயங்கி வீழ்ந்தவர்களும், விரைவில் தப்பி ஓடினவர்களும், ஓடுவதற்கும் அச்சம் கொண்டு வேறுவடிவங்களைக் கொண்டு நின்றவர்களும் ஆனுர்கள். (162)

வல்லே = விரைவில், வெருவி = அஞ்சி.

பூதர்கள் அழிந்த பொழுது இலக்கத்தெட்டு வீரரும் சுப்பிரமணியப் பெருமானுடைய தூதுவராகிய வீரவாகு தேவரும் ஒருங்கு சேர்ந்து வளைத்து, மாலைகள் தூங்கிய விற்படைகளை வளைத்துச் சூரபன்மன் மீது ஒளிபொருந்திய அம்புமழைகளைப் பொழிந்தார்கள். (163)

பொருவு = ஒப்பு, கோதை = மலர் மாலை, கொடுமரம் = வில்.

பொழிந்த பாணங்கள் எப்பக்கங்களிலும் வரச் சூரபன்மன் கண்டும் எதிர்ப் பாணங்களைச் செலுத்தி அவற்றை அழியாது நின்ற தருணத்தில், அப்பாணங்கள் சூரபன்மனுடைய உடம்பிற் பட்டு முரிந்து அழிந்துபோயின. அவனுக்கோர்ஊறும் செய்ததில்லை. (164)

செவ்வி = தருணம், விளிந்து = அழிந்து, பரிந்த = முரிந்து, பகழி = பாணம்.

சூரபன்மன், தன்னைச் சூழ்ந்து நின்ற வீரவாகு முதலிய வீரர்களின் உபாயத்தைப் பார்த்துச் சீற்றம் கொண்டு, வாயால் உரப்பித் தனது மலைபோன்ற வில்லை வளைத்துக் கொடிய பாணங்களைச் சொரிந்து கொண்டு தேருடன் வலமிடமாகச் சுற்றித் திரிந்தான். (165)

பரப்பின் = பரவுதலாகி, ஈண்டிய = நிறைந்த, பாரா = பார்த்து, ஆவலங் கொட்டி = ஆர்ப்பரித்து ஆடி, சிலீமுகம் = அம்பு, சாரிகை = இடம் வலமாய்.

நூறு கோடி வெம்சரம் ஒரு தொடையுற நூக்கிச்
சூறையாம் என வட்டணை திரிந்துளான சூழ்வோர்
மாறு தூண்டிய சரங்களைத் துணித்து மற்றவர்கள்
ஏறு தேருடன் பிடித்திடு சிலைகளை இறுத்தான். (166)

வையம் வில்லுடன் இற்றபின் மற்றவர் மலைவு
செய்ய உன்னுமுன் மொய்ம்பினும் உரத்தினும் சிரத்தும்
கையினும் கணை ஆயிர மாயிரம் கடும் தீப்
பெய்யும் மாரி போல் செறித்தனன் செம்புனல் பெருக.

புரம்தனில் செறி கறையினர் புலம்பு கொள் மனத்தார்
உரம் தளர்ந்துளார் வில்வலி இழந்துளார் ஒருங்கே
இரிந்து நீங்கினர் இலக்கரோடு எண்மரும் இளவல்
திருந்தலன் தடந் தேர்மிசைப் பாய்ந்தனன் சினத்தால்.

பாய்ந்து திண்திறல் மொய்ம்பினான் பரமன் முன் அளித்த
நாந்தகம் தனை உரீஇக் கொடு நண்ணலர்க்கிறைவன்
ஏந்து வில்லினைத் துணித்தனன் துணித்தலும் எரிபோற்
காய்ந்து வெய்யவன் புடைத்தனன் உரத்தின் ஓர்
கரத்தால். (169)

அங்கை கொண்டு சூர் ஒருபுடை புடைத்தலும் அகலம்
பொங்கு சோணிதம் அலைத்திட வாகை அம் புயத்துச்
சிங்கம் வீழ்ந்தயர்வுற்றிடத் தூதனைச் செகுத்தல்
இங்கெனக்கு அடாதென்று எடுத்து உம்பரின் எறிந்தான்.



சுழல் காற்றுப் போலத்திரிந்த சூரபன்மன் ஒவ்வோர் தொடையிலும் நூறுகோடிக் கணக்கான பாணங்களைச் செலுத்தித் தன்னை சூழ்ந்த வீரர்கள் தூண்டிய அம்புகளை அறுத்து, அவர்கள் ஏறி நின்ற தேர்களையும், பிடித்திருந்த படைகளையும் அழித்தான். (166)

தொடை = தொடர்ச்சி, நூக்கி = செலுத்தி, சூறை = சுழல் காற்று, இறுத்தான் = அழித்தான்.

விற்படைகளும் தேர்களும் அழிந்த பின்னரும் வீரர் போரைத் தொடங்க முயலுமுன், சூரபன்மன் அவர்களின் புயங்களிலும், மார்புகளிலும், தலைகளிலும் ஆயிரமாயிரம் பாணங்களை அக்கினி மழை போலச் செலுத்தினான். (167)

வையம் = தேர், மலைவு = யுத்தம், மொய்ம்பு = புயம், உரம் = மார்பு, செறித்தனன் = செலுத்தினன்.

இலக்க வீரரும் ஏனைய எட்டு வீரரும் தங்கள் உடம்புகளில் இருந்து இரத்தம் வடிகின்றவராயும் மனவேதனை யுடையவராயும் தேகவலிமை இல்லாதவராயும் போர்முனையை விட்டு அகன்றார்கள். வீரவாகுதேவர் கோபத்தால் பகைவனாகிய சூரபன்மனது தேரின் மீது பாய்ந்தான். (168)

புரம் = உடல், கறை = இரத்தம், உரம் = வலி, இரிந்து = பின் வாங்கி, திருந்தலன் = பகைவன்.

கலங்கா நிலையையுடைய வீரவாகு தேவர் சிவபிரான் கொடுத்த தமது வாளாயுதத்தை எடுத்து சூரபன்மன் பிடித்திருந்த வில்லை வெட்டினார். கொடியவனாகிய சூரபன்மன் அக்கினி போல் சீற்றம் கொண்டு தனது ஒரு கையினால் வீரவாகு தேவருடைய மார்பில் அடித்தான். (169)

நாந்தகம் = வாள், நண்ணலன் = பகைவன்.

சூரபன்மன் அடித்தவுடன், வெற்றியையுடைய ஆண் சிங்கத்தை யொத்த வீரவாகு தேவர் இரத்தம் பாய்ந்த மார்பின் வேதனையால், அத்தேர் மேல் வீழ்ந்து மயங்கினார். சூரபன்மன் தூதுவனாகிய இவனைக் கொல்லுதல் தகாது என நினைந்து, அவரை எடுத்து ஆகாயத்தில் எறிந்தான். (170)

அம்கை = அகங்கை, அகலம் = மார்பு, சோணிதம் = இரத்தம், செகுத்தல் = கோல்லுதல், உம்பர் = ஆகாயம்.

எறிந்த காலையில் விண்ணிடைப் படர்ந்திடும் ஏந்தல்
அறிந்து மீண்டு சென்று ஆறு மாமுகன் புடை
அடைந்தான்
தறிந்து போகிய சிலையினைத் தரைமிசை இட்டுச்
சிறந்ததோர் தனு எடுத்தனன் தீயரில் தீயோன். (171)

அத்த மேல்கிரி உதயமால் வரைத்துணை ஆன்று
நித்தலும் பிறர்க்கிடர் செய்து மேருவின் நீண்டு
கொத்து நீடு பல் குவடு உடைத்தாகியே குமரன்
சத்தியால் அடநின்ற வெற்பனையது அத்தனுவே. (172)

வலை கரும் கழல் அவுணன் அக் கார்முகம் வளைத்துப்
புனலும் அங்கியும் காலுடன் ஒலிப்பது புரைய
எனைவரும் துளக்குறும் வகை நாண் ஒலி எடுத்தான்
அனைய பெற்றியை அறிந்தனன் அமரரை அளித்தோன்.

புயலின் மேனியன் புவிநுகர் காலையும் போதன்
துயிலும் மாலையும் துஞ்சிய வேலையும் தொலையாது
இயலும் அண்டத்தின் அடிமுடி உருவி நின்றிலங்கும்
கயிலை போல்வதோர் நெடும் சிலை எடுத்தனன் கந்தன்.

வாரியால் உலகழிந்திடும் எல்லையின் மருங்கின்
மேரு ஆதியாம் வரைகளும் கிரிகளும் விசும்பில்
காரும் மேலுள உலகமும அமரரும் கயிலைச்
சாரல் சூழ்தல் போல் விரவி ஆர்ப்புடையது அத்தனுவே.



சூரபன்மன் எறிந்தபொழுது ஆசாயத்தில் சென்ற வீரவாகு தேவர் அறிந்து திரும்பிவந்து ஆறுமாமுகப்பிரானது பக்கத்தில் சேர்ந்தார். சூரபன்மன் முரிந்துபோன வில்லை எறிந்துவிட்டு வேறோர் வில்லை எடுத்தான். (171)

ஏந்தல்=பெருமையிற் சிறந்தோன், புடை=பக்கம், தனு=வில்.

அவ்வில்லானது மேற்றிசையிலுள்ள அஸ்தமயன கிரிமுதல் கீழ்த்திசையிலுள்ள உதயகிரி அளவாக விசாலித்து மேருமலையின் உயர்ச்சி போல நீண்டு நெடிய பல சிகரங்களையுடையதாய் முருகக் கடவுள் தமது வேற் படையால் அழிக்கும்படி நின்ற கிரவுஞ்ச மலையைப் போன்றது. (172)

அத்தம்=அஸ்தமித்தல், துணை=அளவாக, ஆன்று=விசாலித்து, கோத்து=திரள், குவடு=சிகரம், சத்தி=வேல், வெற்பு=மலை.

சூரபன்மன் அவ்வில்லினை வளைத்து எவரும் நடுக்கமுறும் வண்ணமாக வாயுவும் நீரும் அக்கினியும் சேர்ந்து ஒலிப்பது போல, நாண் ஒலி செய்தான். தேவர்களை இரட்சித்தருளிய அறுமுகப் பெருமான் அத்தன்மையைக் கண்டருளினர். (173)

வலை=கட்டப்பட்ட, கார்முகம்=வில், கால்=வாயு, புரைய=நிகர்க்க, எனைவரும்=எவரும், துளக்குறும்=நடுக்கமுறும்.

முருகக்கடவுள், திருமாலானவர் பூமியையும் உயிர்களையும் விழுங்கிய பிரமாவின் பகற்காலமும், அப்பிரமதேவர் நித்திரை செய்கின்ற இராக்காலமும், ஆகிய தினப் பிரளயங்களிலும், அவர் இறக்கின்ற மகா பிரளயத்திலும், அழிவுறாமல் இவ்வண்டத்தின் அடியையும் முடியையும் ஊடுருவி நின்று விளங்குகின்ற கைலை மலையைப் போன்ற ஒரு நெடிய வில்லைக் கையில் கொண்டருளினர். (174)

புயல்=மேகம், நுகர்=விழுங்கிய, போதன்=பிரமன், துஞ்சிய=இறக்கின்ற, வேலையும்=பிரளயத்திலும், இயலும்=பொருந்திய.

அவ் வில்லானது, உலகம் சலப்பிரளயத்தால் அழிகின்ற யுகமுடிவில் கயிலையின் பக்கங்களிலுள்ள மகாமேரு முதலிய மலைகளும், ஆகாயத்திலுள்ள மேகங்களும், மேல் உலகங்களும், தேவர்களும், கயிலைச் சாரலை அடைதலால் உண்டாகும் பேரொலிபோல ஒலிப்பது. (175)

வாரி=நீர், விசும்பு=ஆகாயம், கார்=மேகம், சாரல்=மலைப் பக்கம், விரவி=கலந்து, ஆர்ப்பு=ஆரவாரம்.

நீட்டம் மிக்கதோர் அப் பெருஞ்சிலையினை நிமலன்
தோள் துணைக்கொடு வாங்கி ஏழ் வகையினில் தோன்றும்
ஈட்டம் மிக்க பல் உயிர்களும் வான் உரு மேற்றின்
கூட்டமாகியே ஆர்த்தெனக் குணத்தொலி கொண்டான்.

குணம் கொள் பேர் ஒலி கோடலும் இரலைஊர் கொற்றத்து
அணங்கு உலாவரு கார்முகம் குழைத்துளை அவதி
இணங்க வாங்கியே பத்து நூறாயிரத் திரட்டி
கணம் கொள் வெஞ்சரம் உகைத்தனன் கூற்றினும்
கடியோன். (177)

வான் மறைத்தன மாதிரம் மறைத்தன மதி தோய்
மீன் மறைத்தன கதிர் வெயில் மறைத்தன வேலை
தான் மறைத்தன வசுமதி மறைத்தன தரு ஆர்
கான் மறைத்தன வரைகளை மறைத்தன கணைகள். (178)

காற்றில் செல்வன அங்கியில் படர்வன கடுங்கண்
கூற்றில் கொல்வன வேலை வெவ்விடத்தினும் கொடிய
பாற்றுத் தொல்சிறை உள்ளன பல்தலை படைத்த
நால் திக்கும் புகழ் அவுணர் கோன் ஆணையில் நடப்ப.

பரு மிதத்தன மேருவைத் துளைப்பன பாங்கர்
வரை கிழிப்பன அண்டமும் பொதுப்பன வான்தோய்
உரும் இடிக்குலம் பொருவன விடத்தை உண்டு உமிழ்வ
கருமை பெற்றன சேயன தீயவன் கணைகள். (180)



முருகக் கடவுள் நெடிய பெரிய வில்லினைத் தமது இரு திருக் கரங்களால் வளைத்து, எழுவகைப் பிறப்பிலும் காணப்படும் கூட்டமாயுள்ள எல்லா ஆன்மாக்களும், மேகத்தில் தோன்றும் இடிக் கூட்டங்களாய் அமைந்து முழங்கினால் போல, நாண் ஒலி செய்தருளினார். (176)

ஈட்டம் = கூட்டம், உருமேறு = இடியேறு, குணம் = வில்லின் நாண்.

முருகக் கடவுளின் நாண் ஒலியைக் கேட்ட இயமனிலும் கொடியவனாகிய சூரபன்மன், வீரலக்குமி உலாவப் பெறுகின்ற தனது வில்லை வளைத்து, இருபது இலக்கமாகிய தொகையைக் கொண்ட கொடிய அம்புகளைச் செலுத்தினான். (177)

இரலை = மான், கொற்றத்து அணங்கு = வீரலக்குமி, அவதி = அளவு, உகைத்தல் = செலுத்தல்.

சூரபன்மன் செலுத்திய அம்புகள் ஆகாயத்தையும், திக்குகளையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும், சூரியனுடைய வெயிலையும், சமுத்திரங்களையும், பூமியையும், காடுகளையும், மலைகளையும் மறைத்தன. (178)

தோய் மீன் = ஓரினமாய்ச் சேரும் மீன், வசுமதி = பூமி.

அப் பாணங்கள் வாயு வேகத்தைப் போலச் செல்லும் இயல்புடையன. அக்கினியின் உக்கிரத்தைப் போல வேகமாய்ச் செல்லுந் தன்மையன. யமன் உயிர்களைக் கொல்லுதல் போலக் கொல்லும் இயல்பின. ஆலகாலத்திலும் பார்க்கக் கொடுமையைக் கொண்டன. பருந்தின் இறகு போன்ற இறகுகளை உடையன. சூரபன்மனது ஆணையின்படி செல்வன. (179)

கடுங்கண்மை = கோடுமை, பாறு = பருந்து.

சூரபன்மன் செலுத்திய அம்புகள் இறுமாப்புடையன. மேருமலையையும் துளைக்க வல்லன. ஏனைய மலைகளையும் பிளக்குந்தக்கன. அண்ட முகட்டினையும் துளைக்க வல்லன. இடியேறுகளொடு பொரும் இயல்பின. ஆலகாலத்தையும் உண்டு உமிழ வல்லன. கருநிறத்தையும் செந்நிறத்தையும் கொண்டன. (180)

பருமிதம் = இறுமாப்பு, பாங்கர் = பக்கம், பொதுப்பன = துளைப்பன, பொருவன = பொரும் இயல்பின, சேயன = செந்நிறத்தையுடையன.

துண்ட வெண்பிறை வாள் எயிற்று அவுணர் கோன் துரப்ப
மீண்டு வெங்கணை எங்கணுஞ் செறிந்திட விண்ணோர்
கண்டு கண்ணனை அணுகியே கை குலைத்து ஐய
உண்டு கொல் நமக்கு ஒளிப்பதோர் இடம் என
உரைத்தார். (181)

வாள்=ஒளி, எயிறு=தந்தம், துரப்ப=செலுத்த, மீண்டும்= அடர்கின்ற, குலைத்து=உதறிக் கொண்டு.

உரைத்துளார்க்கு மால் மாறுரை வழங்குமுன் ஒள்வேல்
கரத்தில் ஏந்திய குமர வேள் இன்னது கண்ணுல்
தெரித்து வெங்கனல் விடுத்திடும் ஊதை போல் சிலதன்
சரத்துனல் அவன தூண்டிய கணை எலாம் தடிந்தான்.(182)

மாறுரை=மறுமொழி, ஒள்=ஒளி பொருந்திய, தெரித்து=பார்த்து, ஊதை=காற்று.

மடிந்திடும்படி மாற்றலன் சரங்களை வள்ளல்
தடிந்த தன்மை கண்டு அமரர்கள் உவகையில் தழைத்தார்
படர்ந்து நீடிய கங்குலின் பாய் இருள் புலர
விடிந்த காலையில் எழும் கதிர் கண்ட மேதினி போல். (183)

மடிதல்=இறத்தல், தடிதல்=அழித்தல், தழைத்தல்=பூரித்தல், கங்குல்=இரவு, பாய்=பரந்த.

## வேறு

அங்கவ் எல்லை அவுணர் கோன், எங்கள் நாதன் எதிருற
மங்குல் போல் வரம்பிலாச், செங்கண் வாளி சிதறினன்.

மங்குல்=மேகம், செங்கண்=செம்கண், கண்=நுதி.

ஆய காலை அறுமுகன், தீயன் உந்து செறி கணை
மாய வாளி மாமழை, ஏ எனு முன் ஏவினன். (185)

மா=மிகுந்த.

எங்கள் நாதன் ஏவிய, துங்க வாளி சூர்விடும்
புங்கவங் களைப் புரத்து, அங்கி போல் அறுத்தவே.

துங்கம்=வெற்றி, புங்கவம்=அம்பு.



பிறைச் சந்திரன் போலும் வக்கிர தந்தங்களையுடைய சூரபன்மன் செலுத்திய பாணங்கள் எவ்விடங்களிலும் நிறைந்து கொள்ளத் தேவர்கள் கண்டு கைகளை உதறிக் கொண்டு ஓடிச் சென்று விஷ்ணு தேவரை அடைந்து சுவாமி! நாங்கள் ஒளித்திருக்கத்தக்கதோர் இடம் உண்டா என்று கேட்டார்கள். (181)

தேவர்களுக்குத் திருமால் மறுமொழி கூறுவதற்கு முன்னர் வேற்படையைத் திருக்கரத்தில் தாங்கிய சுப்பிரமணியப் பெருமான் இதனைக்கண்டு வாயு செலுத்துகின்ற வெய்ய அக்கினிக் கற்றைகளைப் போல சில பாணங்களைச் செலுத்திச் சூரபன்மன் செலுத்திய அம்புகளை அழித்தருளினார். (182)

இராக்காலத்தில் பரந்த இருளைச் சூரியன் உதித்து நீக்கிய தன்மையை, விடியற்காலத்தில் சீவராசிகள் கண்டு மகிழ்ச்சி கொண்டாற்போல, சூரபன்மனது பாணங்களைச் சுப்பிரமணியப் பெருமான் அழித்தருளிய தன்மையை தேவர்கள் கண்டு மகிழ்ச்சியால் உடம்புகள் பூரித்தார்கள். (183)

அச்சமயத்தில் சூரபன்மன், எங்கள் இறைவராகிய முருகக் கடவுளுக்கு எதிராகச் செல்லும்படி, மேகம் மழை பொழிவது போல அளவில்லாத வலிய நுனிகளையுடைய பாணங்களைச் சொரிந்தான். (184)

அப்பொழுது ஆறுமுகப் பெருமான் கொடியவனாகிய சூரபன்மன் செலுத்திய அம்புகள் அழியும்படி பெரிய அம்புமழையை ஏ என்று சொல்லுதற்கு முன்னர் செலுத்தி யருளினார். (185)

எங்கள் தலைவராகிய முருகக்கடவுள் செலுத்திய அம்புகள், திரிபுரங்களின் மேல் சிவபிரான் செலுத்திய நகை அழல் அவற்றை அழித்தது போல, சூரபன்மன் செலுத்திய அம்புகளை அழித்தன. (186)

அறுத்த பின்னும் அறம் நிலான், மறுத்தும் வாளி மாமழை
கறுத்த கண்டர் காளை மேல், செறுத்து வல்லை சிந்தினன்.

காளை = இளையோன், புத்திரன், செறுத்து = கோபித்து.

சிந்து கின்ற செம் சரம், வந்துருமுன் வந்தெனக்
கந்தன் நூறு கணை தொடா, அந்தில் பூழி ஆக்கினன்.

வந்துருமுன் = வந்து சேரமுன், வந்தென = காற்றைப் போல, அந்தில் = அவ்விடம்.

பூழி செய்து பொள் என, ஊழி நாதன் ஒண் சரம்
ஏழு நூறது ஏவினன், சூழும் மாயை தோன்றல் மேல்.

பூழி = துகள், தோன்றல் = புதல்வன்.

மாயை மைந்தன் மற்றதை, ஆய வாளியால் அறுத்து
ஏயினன் இராயிரம், சேயின் முன் சிலீமுகம். (190)

ஆய = அத்தொகைப்பட்ட, ஏயினன் = செலுத்தினன்.

வேறு

விட்டதனை அத்தொகை விறல் பகழி தன்னால்
அட்டு விரைவில் கடவுள் ஆயிர இரட்டி
கட்டழலை ஒத்துள கடும் கணைகள் தம்மைத்
தொட்டனன் வருத்த மொடு சூர்கிளை துளங்க. (191)

பகழி = அம்பு, கட்டழல் = பேர்அழல், துளங்க = நடுக்கமுற.

முராரி உதவும் சுதனை முந்து தளை இட்டு ஆண்டு
ஓர் ஆயிரம் அளித்த பரன உய்த்த கணை செல்ல
இராயிரம் நெடும் பகழி ஏவி அவை நீக்கி
அரா இறையும் வையமும் அழுங்கவுற ஆர்த்தான். (192)

முராரி = விஷ்ணு, சுதன் = புத்திரன், தளை = சிறை, அரா இறை = பாம்புக்கு இறை, ஆதிசேடன்.



பின்னரும் அறநெறியில் நில்லாதவனாகிய சூரபன்மன் கோபங் கொண்டு சிவகுமாரராகிய முருகக் கடவுள் மீது அம்புமழையை அளவில்லாது பொழிந்தான். (187)

அவன் பொழிந்த பாணங்கள் தம்முன்னிலையில் வந்து சேர முன்னர், முருகக்கடவுள் காற்றைப் போல விரைவில் நூறு அம்புகளைச் செலுத்தி, அவற்றை அவ்விடத்திலேயே துகளாக்கியருளினார். (188)

யுக முடிவுகாலத்திலும் அழியாத் தலைவராகிய முருகக்கடவுள் அவற்றைத் துகளாக்கி தம்மைச் சூழ்ந்து போர் புரியும் மாயவள் புதல்வன் மீது சிறந்த ஏழு நூறு பாணங்களைச் செலுத்தியருளினார். (189)

மாயவள் புதல்வனாகிய சூரபன்மன், அப்பாணங்களை, அத்தொகையான அம்புகளைச் செலுத்தி அழித்து, சுப்பிரமணியப் பெருமான் மீது இரண்டாயிரம் பாணங்களைச் செலுத்தினான். (190)

சூரபன்மன் செலுத்திய பாணங்களை சுப்பிரமணியப் பெருமான் அத்தொகையளவான அம்புகளைச் செலுத்தியழிவு செய்து, அவனுடைய சுற்றத்தவர்களாகிய அசுரர்கள் மனத்துயரத்துடன் நடுக்க முறும்படி அழலை நிகர்த்த கொடிய இரண்டாயிரம் பாணங்களைச் செலுத்தியருளினார். (191)

முன்னோர் காலத்தில் பிரமதேவரைச் சிறையில் வைத்துவிட்டு ஓர் ஆயிரம் வருடகாலம், படைத்தல் தொழிலைச் செய்து கொண்டிருந்த முருகக்கடவுள், செலுத்திய அம்புகள் செல்லச் சூரபன்மன் நெடிய ஈராயிரம் பாணங்களைச் செலுத்தி, அவற்றை அழித்து, ஆதிசேடனும் அதனால் சுமக்கப்படும் பூமியிலுள்ள உயிர்களும் வருத்தமுறும்படி ஆரவாரித்தான். (192)

ஆர்த்தவன் விடும் கணை அனைத்தினையும் முக்கண்
மூர்த்தி தரு கான்முளை செலச்செல முடித்தான்
கார்த்தெழு புகைப்படலை கான்று நிமிர் செம்தீச்
சேர்த்தினவை யாவையும் மிசைந்திடு திறம்போல். (193)

கான்முளை = முருகக் கடவுள், கார்த்து = கரு நிறம் கொண்ட, சேர்த்தினவை = சேர்த்த, இட்ட, மிசைந்திடு = ஓங்குதல்.

ஐயன் விடு வாளிகளை அவ்வசுரன் நீக்கும்
வெய்யன் விடு வாளிகளை வேள் கடிதறுக்கும்
எய்யும் நெடு வெம்பகழி இற்றவைகள் சிந்தி
வையம் மிசை போகியன வானம் அணித்தென்ன. (194)

போகியன = உயர்ந்தன.

முற்றிய அமர்த்தலை முனிந்திவர் செலுத்தும்
கொற்ற நெடு வாளிகள் குறைந்தழி எழும் தீப்
பற்றியது பார் இடை பகிர்ந்த வரை முற்றும்
வற்றிய அளக்கரும் வறந்துளது கங்கை. (195)

முற்றிய அமர் = மகாயுத்தம், தலை = இடம், யுத்த களம்.

தார் கெழுவு வேற்படை தடக்கை உடையோனுஞ்
சூரனும் இவ்வாறு அமர் இயற்று தொழில் காணு
வீரமடமாது உளம் வியந்து இவர் தமக்குள்
ஆரிடை நடத்தும் என ஐயமொடு நின்ருள். (196)

தார் = மலர் மாலை, கெழுவு = பொருந்திய.

ஆள் அரி தன் முன் இளவல் ஆனை வதனத்துக்
காளை மகிழ் பின் இளவல் கார்முகம் உகைக்கும்
வாளி மழையே யலது மற்றவர்கள் தம்மை
நீள் விழியினல் தெரிகிலார் புடையில் நின்ருேர். (197)

ஆள் அரி = சிங்கமுகன், வதனம் = முகம், உகைக்கும் = செலுத்தும்.



கருமையான புகைப்படலங்களைக் கான்று சுவாலித்தெரியும் அக்கினியானது, தன்னிடத்தில் இட்ட பொருள்கள் அனைத்தையும் எரித்து மேல் ஓங்குதல் போல, மூன்று கண்களையுடைய சிவபிரான் தந்த முருகக் கடவுள் சூரபன்மன் செலுத்திய பாணங்கள் முழுவதையும் அழித்தருளினர். (193)

சுப்பிரமணியப் பெருமான் செலுத்தும் பாணங்களை அச்சூரபன்மன் அழிப்பான். அவன் விடும் பாணங்களை சுப்பிரமணியப் பெருமான் விரைவில் அறுப்பார். இவ்வாறு இவ்விருவரும் செலுத்திய பாணங்களின் முரிந்த துண்டங்கள் பூமியில் வீழ்ந்து ஆகாயம் சமீபித்துள்ளது என்னும் வண்ணம் மேலுயர்ந்து குவிந்தன. (194)

இவர்கள் இருவரும் செலுத்திய வெற்றியையுடைய பாணங்கள் முரிந்தபொழுது, அவற்றினின்றும் எழுந்த அக்கினி பூமியினிடங்களில் பற்றியது. அவ்வெப்பத்தால் மலைகளெல்லாம் பிளவுபட்டன. சமுத்திரங்களும் கங்காநதியும் நீர் வற்றின. (195)

மாலை தூங்கும் வேற்படையைத் திருக்கரத்தில் கொண்டருளிய சுப்பிரமணியப் பெருமானும் சூரபன்மனும் நிகழ்த்திய போர்த்தொழிலை வீரலக்குமியானவள் பார்த்து இவ்விருவருள் எவரிடத்துச் சென்று சேரலாம் என்று நிச்சயம் பெருதவளாய் நின்ருள். (196)

சிங்கமுகாசுரனுக்கு முன்னவனுகிய சூரபன்மனும், யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளுக்குப் பின்னவராகிய முருகக் கடவுளும், தத்தம் விற்படைகளில் நின்றும் செலுத்திய அம்புமழைகளைப் பக்கத்தில் நின்றவர்கள் கண்டார்களேயன்றி அவ்விருவரையும் தமது கண்களாற் கண்டிலர். (197)

நீடுசமர் இன்னணம் நிகழ்ச்சியுறும் எல்லை
மேடமிசை ஊர்பரன் விடுத்த கணை எல்லாம்
ஈடுபட நூறி அவன் ஏறிவரும் மான்தேர்
ஆடுறு பதாகையை அறுத்து விரைந்து ஆர்த்தான். (198)

இன்னணம் = இவ்வண்ணம், மேடம் = ஆட்டுக் கடா, ஈடு = வலிமை, நூறி = அழித்து, பதாகை = கோடி.

ஆர்த்து விறல் வால் வளையை அம்பவள வாயில்
சேர்த்தி இசைத்தான் தனது சீர்த்தி இசைத் தென்ன
மூர்த்தம் அது தாழ்க்கிலன் முனிந்து கணை பின்னுந்
தூர்த்து முருகன் தனது தோற்றம் மறைத்திட்டான்.

வால் = வெள்ளிய, வளை = சங்கு, அம் = அழகிய, பவள = பவளம் போலும்.

மறைத்த பகழித் தொகையை வாளி மழை தன்னாற்
குறைத்து அவுணன் ஊர்ந்திடு கொடுஞ்சி நெடுமான் தேர்
விறல் கொடி தனைக் கொடிய வெஞ்சரம் ஓர் ஏழால்
அறுத்து முருகன் பரவை ஆழ் கடலில் இட்டான். (200)

கொடுஞ்சி = தேர் மொட்டு, பரவை = நீர்ப் பரப்பு.

வேறு

தானவர்க்குத் தலைவன் தனிக்கொடி
மீனவேலையில் அற்று உடன் வீழ்ந்துழிப்
பானுகம்பன் எனப்படு பாரிடர்
சேனைகாவலன் தெற்றென நோக்கினன். (201)

மீன = மீன், வேலை = சமுத்திரம், தெற்றென = விரைவில்.

கண்டு சிந்தை களித்துப் பெருமிதம்
கொண்டு குப்புற்று இசைத்துக் குனித்திடா
அண்டர் போற்றத் தன ஆயிரம் வாயினும்
ஒண் திரள் சங்கம் ஒல்லை வைத்து ஊதினன். (202)

பெருமிதம் = இறுமாப்பு, குப்புற்று = குதித்து, இசைத்து = பாராட்டி, குனித்தல் = கூத்தாடல்.



பெரிய யுத்தம் இவ்வாறு நிகழ்ந்து கொண்டிருந்த சமயத்தில் ஆட்டுக்கடா வாகனத்தையுடைய முருகக் கடவுள் செலுத்திய அம்புகள் அனைத்தையும் சூரபன்மன் அழித்து அப் பெருமான் எழுந்தருளி வந்த தேரில் அசைந்து கொண்டிருந்த கொடியையும் அறுத்துவிட்டு ஆரவாரித்தான். (198)

ஆரவாரித்த சூரபன்மன் வெள்ளிய வெற்றிச்சங்கை எடுத்துத் தனது பவளம் போலும் அதரங்களில் வைத்து அவனுடைய கீர்த்தி நின்று ஒலித்தாற் போல முழக்கினன். அதன் பின்னரும் வெகுண்டு பல அம்புகளைச் செலுத்தி முருகக் கடவுளின் திருக் கோலத்தை மறைத்தான். (199)

குமாரக்கடவுள் தமது திருமேனியை மறைத்த அம்புகளைத் தமது அம்புகளால் அழித்து, கொடிய ஒப்பற்ற ஏழுபாணங்களைச் செலுத்திச் சூரபன்மன் ஏறிநின்ற இரதத்தில் கட்டப்பட்டிருந்த வெற்றிக் கொடியை அறுத்து ஆழமாகிய சமுத்திரத்தில் இட்டருளினர். (200)

சூரபன்மனது தேரிற் கட்டப்பட்டிருந்த வெற்றிக் கொடி வெட்டுண்டு சமுத்திரத்தில் விழுந்த பொழுது பானுகம்பன் என்று சொல்லப்படும் பெயரையுடைய பூதப்படைத் தலைவர் அதனைக் கண்டார். (201)

அவர் கண்டவுடன் முருகக்கடவுளின் வெற்றியை நினைந்து மனக்களிப்பெய்தி, இறுமாப்படைந்து, இறைவன் புகழைப் பாராட்டிக் குதித்துக் கூத்தாடித் தேவர்களும் கொண்டாடும்படி, வெள்ளொளியை உடைய ஆயிரம் சங்கங்களை எடுத்துத் தமது வாய்களிலும் வைத்துஊதினர். (202)

கால் நுகம்படு கந்துகத் தேருடைப்
பானு கம்பன் பனிமதி ஆயிரம்
மானு கம்பவை வாய் வைத்து இசைத்தலும்
தான் உகம் பல தங்கிற்று அவ் வோசையே. (203)

கால்=உருள், கந்துகம்=குதிரை, பனி=குளிர்ந்த,
மானு=நிகர்த்த, கம்பு=சங்கு.

பாய் பெரும் புகழ்ப் பானுகம்பன் வளை
ஆயிரங்களும் ஆர்த்திட அண்டர் தம்
நாயகன் தன் விறல் கண்டு நாரணன்
தூய சங்கும் முழங்கிற்றுத் துண்ணென. (204)

பாய்=பரந்த, வளை=சங்கு, விறல்=வெற்றி,
துண்ணென=விரைவில்.

போதம் அங்கதில் புங்கவர் யாவரும்
சோதி வேற்படைத் தூயவன் ஏறு தேர்
மீது கேதனம் இல்லை வியன் கொடி
ஆதி நீ என்று அழலினை ஏவினர். (205)

போதம்=பொழுது, கேதனம்=கொடி.

ஏவலோடும் எரிதழற் பண்ணவன்
வாவு குக்குட மாண் கொடியாகியே
தேவ தேவன் திரு நெடுந் தேர்மிசை
மேவி ஆர்த்தனன் அண்டம் வெடிபட (206)

வாவு=தாவும், குக்குடம்=கோழி, மேவி=நின்று.

படியிலாது அமர் பண்ணவன் தேர் மிசைக்
கொடியதாய் நின்று குக்குடம் கூயது
கடிய தானவர் கங்குல் புலர்ந்திடும்
விடியல் வைகறை வேலையைக் காட்டல் போல். (207)

படி=ஒப்பு, வேலை=காலம்.



உருள்களையும் நுகத்தின்கண் பூட்டப்பட்ட குதிரைகளையுமுடைய தேரில் இருந்த பானுகம்பன் என்னும் பூதாதிபர் ஆயிரம் சந்திரர்களை நிகர்த்த ஆயிரஞ் சங்குகளை முழக்க, அம்முழக்கமானது பல யுக முடிவு காலமளவு நிலைத்திருந்தது. (203)

பெரும் புகழையுடைய பானுகம்பன் என்னும் பூதத் தலைவருடைய ஆயிரஞ் சங்குகளும் முழங்க, விஷ்ணு மூர்த்தியின் பரிசுத்தமான பாஞ்சசன்னியம் என்னும் சங்கமும், தேவ சேனாதிபதியாம் முருகக் கடவுளின் வெற்றியைக் கண்டு முழங்கியது. (204)

அச்சமயத்தில் அவ்விடத்தில் நின்ற தேவர்கள் எல்லோரும் அக்கினி தேவனைப் பார்த்து வேற்படையையுடைய முருகக் கடவுள் எழுந்தருளிய தேரின்மீது கொடியில்லை. ஆதலால் நீ பெருமையுற்ற கொடியாய் அமைந்திருக்குதி என்று சொல்லி அவனை அனுப்பினார்கள். (205)

தேவர்கள் அனுப்பியவுடன் அக்கினி தேவன் தாவிப் பறக்கும் மாட்சிமையுள்ள கோழிக் கொடியாய் அமைந்து தேவர்க்கும் தேவனாகிய முருகக் கடவுளின் அழகிய மனவேகப் பொற்றேரின் மீது நின்று அண்டமும் அதிர்ச்சியால் பிளப்புறும்படி கூவினான். (206)

அக்கினி தேவனாகிய சேவற் கோழி கொடியாய் அமைந்து முருகக் கடவுளின் தேர்மீது நின்று கூவிட் தன்மை, கொடிய அசுரர்களாகிய இராக்காலம் நீங்கி விடியற்காலமாகிய வைகறைக் காலம் அணுகிற்று என்பதனைக் காட்டியது போலாம். (207)

சங்கமோடு தபனனும் ஆர்த்தலும்
மங்குல் வண்ணத்து மாயவன் ஆர்த்தனன்
பங்கய ஆசனப் பண்ணவன் ஆர்த்தனன்
திங்கள் ஆர்த்தது செங்கதிர் ஆர்ப்பவே. (208)

தபனன் = அக்கினி தேவன், மங்குல் = மேகம், திங்கள் = சந்திரன்.

மறலி ஆர்த்தனன் மாருதங்கட் கெல்லாம்
இறைவன் ஆர்த்தனன் இந்திரன் ஆர்த்தனன்
அறை கடற்கு அரசானவன் ஆர்த்தனன்
குறைவில் செல்வக் குபேரனும் ஆர்த்தனன். (209)

மறலி = யமன், மாருதம் = காற்று.

ஆர்த்த ஓசை போய் அண்டத்தை முட்டியே
சூர்த்த நோக்குடைச் சூரபன்மன் செவிச்
சீர்த் துளைக்குள் செறிதலுந் தேவரைப்
பார்த்தனன் கடு உண்டன்ன பான்மையான். (210)

சூர்த்த = அச்சத்தைத் தரும், சீர்த்துளை = சீரைக் கவரும் துளை,
சீர் = ஒலி, கடு = நஞ்சு.

மாறில் என்முன் வருவதற்கஞ்சியே
பாறு போன்று பழுவத் துலைந்துளார்
தேறி வந்து தெழித்தனர் என்முனும்
ஆறு மாமுகன் ஆற்றல் கொண்டே கொலாம். (211)

மாறு = ஒப்பு, பாறு = பருந்து, பழுவம் = காடு,
தெழித்தல் = ஆரவாரித்தல்.

நன்று நன்றிது நான்முகன் ஆதியாய்
நின்ற தேவர் நிலை அழித்து ஒல்லையில்
கொன்று பின்னர்க் குமரனை வெல்வனல்
என்று சீறினன் யாரையும் எண்ணலான். (212)

எண்ணலான் = பொருட்படுத்தாதவன்.



சங்குகளும் அக்கினி தேவனாகிய கோழிக் கொடியும் ஆரவாரஞ் செய்ய, திருமாலும் பிரம தேவரும் ஆரவாரித்தனர். சூரிய சந்திரரும் ஆரவாரித்தனர். (208)

இயமனும், வாயு தேவனும், இந்திரனும், வருணனும், குபேரனும் ஆரவாரித்தார்கள். (209)

இவ்வாறு ஆரவாரித்த சத்தஞ் சென்று அண்ட முகட்டையும் சென்றடைந்தது. அச்சத்தம், சூரபன்மனின் காதுகளில் ஒலித்தலும், அவன் நஞ்சுண்டவனைப் போன்ற கோபத்துடன் தேவர்களை வெறித்துப் பார்த்தான். (210)

மகா வீரனாகிய எனது முன்னிலையில் வந்துலாவுதற்குத் தானும் அச்சம் கொண்டு பருந்துகள் கருடன் முன் போதற்கஞ்சி மறைந்து சஞ்சரித்தல் போல, காடுகளில் அலைந்து திரிந்த தேவர்கள் இப்பொழுது என் முன்னிலையிலே தைரியத்துடன் வந்தது மன்றி என்னை இகழ்ந்து ஆரவாரிக்கவும் துணிந்துவிட்டார்கள். இவ்வாறு இவர்கள் துணிந்தது ஆறு மாமுகனுடைய வலிமையைக் கொண்டேயாம். (211)

யாரையும் பொருட்படுத்தாதவனாகிய சூரபன்மன், பிரமன் முதலிய தேவர்களுடைய வலிமையைக் கெடுத்து, விரைவில் அவர்களைக் கொன்று, பின்னர் இச்சிவகுமாரனை வெல்லுவேன் என்று கூறிச் சீற்றங் கொண்டான். (212)

இருக்க மைந்தன் இகல் இவண் விண்ணிடைச்
செருக்கு தேவர் திறலினைச் சிந்துவான்
அருக்கன் ஓடிய அந்தரத்து உய்க்குதி
தருக்கு தேரினைச் சாரதி நீ என்றான். (213)

இகல்=போர், அருக்கன்=சூரியன், தருக்கு=செலுத்துதி.

மற்றிவ் வாறு வலவனை நோக்கியே
சொற்றகாலைத் தொழுது எந்தை நன்றெனப்
பொற்றை போலும் பொலன் மணித் தேரினை
வெற்றியாக என விண்மிசைத் தூண்டினன். (214)

வலவன்=சாரதி, பொற்றை=மலை,

பாகன் தூண்டிய பாண்டில் அம் தேர் எழீஇ
மேகம் கீண்டு மிசைப்படு சூறையின்
ஆகம் கீறி அமரர்கள் ஈண்டிய
மாகம் சென்றது வான் இழிந்தது என்னவே. (215)

பாண்டில்=தேர் உருள், கீண்டு=கிழித்துச் சென்று,
மிசை=மேல், ஆகம்=வடிவம், மாகம்=ஆகாயம்.

சென்ற தேரொடு சேண் இடைப் புக்குளான்
குன்றம் அன்ன கொடும் சிலை கோட்டியே
துன்று தேவர் தொகை இரிந்து ஓடுற
மன்ற வாளி மழைகளை வீசினன். (216)

சேண்=ஆகாயம், கோட்டி=வளைத்து, துன்று=நிறைந்து நின்ற,
இரிந்து=பின்வாங்கி, மன்ற=மிகவும்.

வீசுகின்றுழி விண்ணவர் மேல் சரம்
நீசன் விட்டிடு நீர்மையை நோக்கியே
ஈசன் மாமகன் ஈண்டு நின்று எண் இலா
ஆசுகங்கள் உய்த்து அங்கவை சிந்தினன். (217)

நீசன்=கீழ்மகன், நீர்மை=தன்மை, ஆசுகம்=அம்பு.



சிவகுமாரனோடு செய்யும் போர் இருக்கட்டும். சாரதியே! ஆகாயத்தில் நின்று ஆரவாரிக்கும் தேவர்களுடைய வல்லபத்தை அழிக்கவேண்டும், அதன் பொருட்டு இரதத்தை ஆகாய வீதியிற் செலுத்துதி என்று பணித்தான். (213)

சூரபன்மன் இல்வாறு பணித்தவுடன் சாரதி அவனை வணங்கி, மலை போன்ற பொன்னாலியன்ற தேரை வெற்றி உண்டாகுக, என்று வாழ்த்திக் கொண்டு ஆகாயத்திற் செலுத்தினன். (214)

சாரதி செலுத்திய தேர் மேக மண்டலத்தைக் கிழித்துச் சென்று மேலுள வாயு மண்டலத்தைப் பிளந்து போய் சுவர்க்கமும் இழிவுடையது என்று சொல்லும்படி தேவர்கள் வாழும் அவ்வுலகத்தை அடைந்தது. (215)

தேரில் சென்ற சூரபன்மன் மலை போன்ற உயர்ந்த தமது வில்லினை வளைத்து அங்குநின்ற தேவர் கூட்டம் பின்வாங்கியோடும் படி அம்புமழைகளைச் சொரிந்தான். (216)

அவன் அம்பு மழைகளைச் சொரிந்தபொழுது சிவகுமாரராம் முருகக்கடவுள், கீழ்மகனாகிய சூரபன்மனின் செயலைப் பார்த்தருளி, இப்பூவுலகில் நின்று அளவற்ற அம்புகளைத் தூண்டி, சுவர்க்கவுலகில் தேவர்கள் மீது செலுத்தப்பட்ட பாணங்களை அழித்தருளினர். (217)

### வேறு

மற்றவை துணித்தபின் வடிக்கயிறு முட்கோல்
பற்றிய தடக்கை உள பாகுதனை நோக்கிக்
கொற்ற அயில் தூண்டி ஒரு குன்றை வெளி கண்டோன்
தெற்றென விண் மேல் நமது தேர் விடுதி என்றான். (218)

வடிக்கயிறு = குதிரை வாய்க்கயிறு, முட்கோல் = குதிரை ஓட்டும் கோல, கண்டோன் = செய்தோன்.

என்னலும் இறைஞ்சி இரலைப்பரியின் மேலோன்
பொன்னுலகு பார் உலகு புக்கு எழுவதென்ன
மின்னின் மிளிர் தேரதனை விண்மிசை கடாவி
நன்நெறி செலா அவுணர் நாயகன் முன் உய்த்தான்.

இரலை = கலைமான், மிளிர் = பிரகாசிக்கும்.

வையம் நெடும் வானம் மிசை வல்லை புகும் எல்லை
ஐயன் இமையோர்கள் அயர்ந்து ஓடுவது நோக்கி
நையலிர் புலம்பலிர் நடுங்கலிர்கள் என்று ஓர்
செய்ய கரம் ஏந்தி முருகன் கருணை செய்தான். (220)

வையம் = தேர், வல்லை = விரைந்து, நையல் = வருந்துதல், செய்ய = சிறந்த.

கந்தன் மொழி வானவர் கணத்தவர்கள் கேளா
எந்தை இவண் வந்திடலின் யாம் உயிர்படைத்தே
உய்ந்தனம் எனா விரைவில் ஓடுவது நீங்கிச்
சிந்தை மகிழ்வத்தொடு திகந்தம் உற நின்றார். (221)

கணத்தவர் = கூட்டத்தவர், திகந்தம் = திக்கின் முடிவு.

நின்றிடலும் வெவ் அவுணன் நீர்மையது நோக்கிப்
பின்றிடுவராம் பிரமனே முதல தேவர்
ஒன்றொர் சிறுவன் கொல் எனை உற்றெதிரும் நீரான்
நன்றிது எனவே வெகுளிகொண்டு நகை செய்தான். (222)

பின்றிடுவராம் = பின்னிடுவராம்.



*வெற்றி வேற்படையைத் தூண்டிக் கிரவுஞ்சமலையை அழித்து வெளியிடமாக்கிய கந்தவேள், அப் பாணங்களை அழித்தபின்னர், குதிரையின் கயிற்றையும் முட்கோலையும் பிடித்த கைகளையுடைய வாயு தேவனாகிய சாரதியைப் பார்த்து, நமது இரதத்தை சுவர்க்க வுலகத்திற்கு விரைவில் விடுவாயாக எனப் பணித்தருளினார்.* (218)

*முருகக் கடவுளை வாயு தேவனாகிய சாரதி வணங்கி, சுவர்க்க உலகு பூவுலகில் வந்திருந்து மீண்டு தன்னிடத்திற்குச் சென்றது போல, மின்னலைப் போற் பிரகாசிக்கும் பொற்றேரை சுவர்க்கவுல கில் செலுத்தி தரும வழியில் ஒழுகாத சூரபன்மன் முன்னிலையில் நிறுத்தினான்.* (219)

*தேர் சுவர்க்கவுலகில் சென்ற அளவில், தேவர்கள் மனந்தளர்ந்து ஓடியதனை முருகக் கடவுள் பார்த்து, தேவர்காள்! மனம் வருந்தா தீர், ஓடாதீர் என்று கூறித் தமது திருக்கரத்தினால் அபயம் தந் தருளினார்.* (220)

*முருகக் கடவுள் அருளிச் செய்த வாக்கைத் தேவர்கள் கேட்டு, எமது பரமபிதாவாகிய முருகக் கடவுள் இவ்விடத்தில் எழுந்தருளி யதனால் நாங்கள் உயிர் பிழைத்தோம் என்று கூறி மன மகிழ்ச்சி கொண்டு ஓடாது திக்குகள் தோறும் நின்றனர்.* (221)

*அதனைக் கொடியவனாகிய சூரபன்மன் கண்டு, பிரமன் முதலாகிய தேவர்கள் அனைவரும வந்து என்னை எதிர்த்தற்குப் பின்னிடுவார்கள். தனித்த ஒரு பாலகனா வந்து என்னை எதிர்க்கும் தகுதியுடைய வனாவன். இது நல்லது என்று கூறிச் சீற்றம் கொண்டு இகழ்ந்து சிரித்தான்.* (222)

காய்சினம் மிகுந்து அவுணர் காவலன் அனந்தம்
ஆசுகம் விரைந்து படர் ஆசுக மதென்ன
வீசுதலும் வாளி பல விட்டு அவை விலக்கி
ஈசன் அருள் மாமதலை ஏற்று இகல் புரிந்தான். (223)

ஆசுகம் = (1) அம்பு (2) காற்று, இகல் = போர்.

சுறுக் கொள மயிர்ப்பொடி உயிர்ப்பு விடு சூரன்
கறைக் கதிர் அயில் பொலி கரத்தன் இவர் தம்மில்
செறுத்துடன் வடிக்கணை செலுத்தி அகல் வான்
மறைப்பதும் அறுக்குவது மாகி மலைவுற்றார். (224)

சுறு = மயிர் தீதலாலுண்டாகும் துர்நாற்றம், பொடி = சிலிர்த்த, கறை = இரத்தம், வடி = கூர்மை.

## வேறு

விரைந்து இருவோர்களும் வியன்கணை மாரிகள்
சொரிந்தனர் பேர் அமர் தொடர்ந்து செய் போழ்தினில்
எரிந்தது மாதிரம் இரங்கினர் பார்உளர்
திரிந்தன சாரிகை சிறந்தவர் தேர்களே. (225)

மாதிரம் = திக்கில் உள்ள பொருள்கள் (ஆகுபெயர்), சாரிகை = வட்டமாயோடல்.

கறங் கினம் போல்வன கலம்செய் குலாலன
திறம் கொளும் ஆழிகள் திரிந்தன மானுவ
மறம் கெழு சூறைகள் மயங்கின போல்வன
துறும் கணை மாரிகள் சொரிந்தவர் தேர்களே. (226)

கறங்கு = காற்றாடி, குலாலன் = குயவன், ஆழி = குயவனது சக்கரம், மானுவ = நிகர்ப்ப, மறம் = மூர்க்கம், துறும் = நெருங்கிய.

பாதலம் மூழ்குவ பாரிடை சூழ்குவ
மாதிரம் ஓடுவ வாரிதி சேர்குவ
பூதரம் மேவுவ பூமலரோன் நகர்
மீதினும் ஏகுவ மீளுவ தேர்களே. (227)

பூதரம் = மலை.



அதிக கோபம் கொண்ட சூரபன்மன் வேகமாய் வீசும் காற்றைப்போல, அளவற்ற பாணங்களைச் செலுத்த, சிவபிரான் தந்த ஆறுமுகப் பிரானும் எதிர் அம்புகளைச் செலுத்தி, அவனது அம்புகளை அழித்து நின்று போரினைச் செய்தருளினார். (223)

சுடுமூச்செறிகின்ற சூரபன்மனும், ஒளியையுடைய வேற்படை விளங்கும் திருக்கரத்தையுடைய சுப்பிரமணியப் பெருமானும், கூரிய பாணங்களைச் செலுத்தி ஆகாய இடங்களை மறைத்தலும், அவ்வம்புகளை வெட்டுதலுமாய் நின்று போரினைச் செய்தார்கள். (224)

இருவரும் தொடர்ந்து நின்று மகாயுத்தத்தைச் செய்த பொழுது, திக்குகளில் உள்ள பொருள்கள் எரிந்தன. பூமியில் உள்ளோர் வருந்தினார்கள். அவ்விரு வீரர்களுடைய தேர்களும் சூழ்ந்து திரிந்தன. (225)

அந்த இரு தேர்களும் காற்றாடிகள் இரண்டு நின்று சுழன்றாற்போற் சுழன்றன. குயவனுடைய சக்கரங்கள் இரண்டு ஒருங்கு சுற்றினாற் போற் சுற்றின. மூர்க்கமான சுழல் காற்றுகள் இரண்டு கூடிச் சுழன்றால் போற் சுழன்றன. (226)

இரு தேர்களும் கீழ் உலகங்களுக்கு ஆழ்ந்து செல்லும், பூமியிலும் சூழ்ந்து செல்லும், திக்குகளிலும் தாவிச் செல்லும், சமுத்திரங்களில் நீந்திச்செல்லும், மலைகள் மேலும் போகும், பிரமதேவரது சத்திய உலகத்திற்குப் போகும், திரும்பிவரும். (227)

எண்திசை சூழும் இரும் கடல் பாய்வன
விண்தொடு நேமி வியன்கிரி வாவுவ
கொண்டலின் ஆரிருள் கொண்டுழி போகுவ
அண்டம் முன் ஏகுவ அங்கவர் ஏறு தேர். (228)

கொண்டல்=மேகம், உழி=இடம்.

பெயர்ந்திடு தேருறு பிழம்பு அவை காணுபு
தியங்கினர் நான்முகர் தெரிந்திலர் சீர் உரு
மயங்கினர் ஆதவர் மருண்டனர் வானவர்
உயங்கினர் பாருளர் உலைந்தனர் நாகரே. (229)

உறு=மிகுந்த, பிழம்பு=ஒளித் திரள், உயங்கினர்=வாடினர்.

முதிர்ந்திடு போரினர் முழங்கிய தேர் செல
அதிர்ந்தது பாருலகு அலைந்தன வேலைகள்
பிதிர்ந்தன மால்வரை பிளந்தது வான்முகடு
உதிர்ந்தன தாரகை உகுந்தன கார்களே. (230)

முதிர்ந்திடு=முற்றிய, பெரிய. உகுந்தன=சிதறி விழுந்தன.

வேறு

தேர் இவை இரண்டுமாகித் திகழும் மூதண்டம் எங்குஞ்
சாரிகை வருதலோடுஞ் சண்முகன்மீது செல்லச்
சூர் எனும் அவுணர் கோமான் தொலையும் நாள் எழிலி பொங்கி
ஆர் அழல் மழை கான்றென்ன அடுசரமாரி தூர்த்தான்.

மூ=பழமை, எழிலி=மேகம்.

மழுப்படை அநந்த கோடி வச்சிரம் திகழ் முச் சென்னிக்
கழுப்படை அநந்த கோடி கப்பணம் அநந்த கோடி
கொழுப்படை அநந்த கோடி குலிசம் வேல் அநந்த கோடி
எழுப்படை அநந்த கோடி இடைஇடை இடிபோல் உய்த்தான். (232)

கழுப்படை=சூலப்படை, கப்பணம்=யானை நெருஞ்சின்முள் வடிவான படை. கொழுப்படை=கலப்பைப் படை, எழுப்படை=ஈட்டிப் படை.



இருவரும் ஏறி இருந்த தேர்கள் இரண்டும் பூமியின் அட்ட திக்கிலும் சூழ்ந்த பெரிய புறவாழியிலும் செல்லும். விண்ணுலகை முட்டுகின்ற பெரிய சக்கரவாளகிரியிலும் செல்லும். மேகத்தின் இருளைப் போன்ற நிறை இருளையுடைய இருட் பூமியிலும் ஏகும். அண்டகடாகத்தின் மேல், கீழ்ப் புறங்களிலும் செல்லும். (228)

இரு தேர்களும் செல்லும் வேகத்தால் எழுந்த ஒளியினால், அதன் வடிவங்களைக் காண முடியாதவராய் பிரமாக்கள் மனஞ் சோர்ந்தார்கள். சூரியர்கள் மனக்கலக்கம் அடைந்தார்கள். தேவர்கள் அச்சம் கொண்டார்கள். மனிதர்கள் வாட்டங்கொண்டார்கள். சர்ப்பங்கள் உலைவடைந்தன. (229)

பெரும் போரினைச் செய்த அவ்விரு வீரர்களின் முழக்கத்தைக் கொண்ட இரு தேர்களும் சென்றதனால் பூவுலகம் அதிர்ச்சியுற்றது. சமுத்திரங்கள் நிலை குலைந்தன. பெரிய மலைகள் பிளப்புற்றன. அண்ட முகடு வெடித்தது. விண்மீன்கள் கொட்டுண்டன. மேகங்கள் சிதறி வீழ்ந்தன. (230)

இரு தேர்களும் அண்டத்தின் எவ்விடங்களிலும் சூழ்ந்து திரிந்த போது, உலக அழிவுகாலத்தில் மேகங்கள் அக்கினி மழையைப் பொழிந்தாற்போலச் சூரபன்மன் ஆறுமுகப்பிரான் மீது அம்புமழையைப் பொழிந்தான். (231)

சூரபன்மன் அநந்த கோடியளவான மழுப்படைகளையும், மூன்று நுனிகளையுடைய சூலப்படைகளையும், குலிசப் படைகளையும், வேற்படைகளையும் ஈட்டிப் படைகளையும் இடியிடித்தாற் போலச் செலுத்தினான். (232)

கூற்றுயிர் குடிக்கும் துப்பில் கொடும்படை மாரி தன்னை
ஆற்றலின் அவுணர் கோமான் விடுத்துழி அவற்றை
யெல்லாம்
காற்றெனப் பகழி தூண்டி முறைமுறை கடிதிற் சிந்தி
மாற்றினன் திரிந்தான் ஐயன் மூதண்ட வரைப்பு முற்றும்.

துப்பு=வண்மை, வரைப்பு=இடம்.

இத்திறம் திரிந்த செவ்வேள் இடைதெரிந்து ஏழொடு ஏழு
பொத்திரம் தன்னைத் தூண்டிப் புகழுறும் அவுணர் செம்மல்
சித்திரத் தேரும் மாவின் தொகுதியும் சிந்தி நீக்கக்
கைத்தனு வோடும் தீயோன் கதுமெனப் புவிக்கண்
உற்றான். (234)

இடை=சமையம், பொத்திரம்=அம்பு, செம்மல்=அரசன்,
தனு=வில், புவி=தேர்.

நாண் உடை வரிவில் வாங்கி நண்ணலன் நஞ்சு பில்கும்
ஏண் உடை வயிரவாளி எண்ணில தூண்டி ஏற்பத்
தாணுவின் மதலை கண்டு தன் பெரும் சிலையைக் கோட்டித்
தூணி கொள் கணையின் மாரி தொடுத்து அவை
துணித்து விட்டான். (235)

நண்ணலன்=பகைவன், பில்கும்=கக்கும், ஏண்=வலிமை,
தாணு=சிவன்.

துணிப்புறும் எல்லை வல்லே சுடர்க்கணை அநந்த கோடி
தணப்பற விடுத்த லோடுஞ் சண்முகன் அவற்றை எல்லாம்
கணைப்பெரு மழையான் மாற்றி காசிபன் தனது செம்மல்
அணிப்படு தோள்மேற் பின்னும் ஆயிரம் பகழி உய்த்தான்.

துணிப்பு=துண்டித்தல், தணப்பு=நீக்கம், அணி=ஆபரணம்.

ஊழியின் முதல்வன் மைந்தன் ஓராயிரம் கணையுஞ் சூரன்
பாழி அம் புயத்துமீது படுதலுங் கடிதே இற்றுச்
சூழுறச் சிதறிற்றம்மா தொலைவிலா் வயிரம் கொண்ட
காழ் கிளர் வரைமேல் வீழ்ந்த கல்மழைத் தன்மையேபோல்.

ஊழி=உலக முடிவு, பாழி=பெருமை, காழ்=வயிரம்.



சூரபன்மன் வலிமையுடன் யமனுடைய உயிரையும் கவரவல்ல கொடிய ஆயுத மழையைச் சொரிந்தபோது, சுப்பிரமணியப் பெருமான் காற்றைப் போல விரைந்து பாணங்களைச் செலுத்தி, அவற்றை அழித்தகற்றிக் கொண்டு அண்டங்கள் தோறும் உலாவித் திரிந்தருளினர். (233)

உலாவித் திரிந்த முருகக்கடவுள் சமையம் பார்த்து பதினன்கு பாணங்களைச் செலுத்தி, சூரபன்மன் ஏறி இருந்த தேரையும் குதிரைகளையும் அழித்துவிட, தீமையே புரிபவனாகிய அச் சூரபன்மன் கையில் பிடித்த வில்லுடன் விரைவாக வேறோர் தேரின் மீதேறினான். (234)

அவன், நாணியையுடைய தனது வில்லை வளைத்து, நஞ்சைக் கக்கும் வயிரித்த அளவற்ற அம்புகளைச் செலுத்துவதைக் கண்ட சிவகுமாரன், தமது பெரிய வில்லினை வளைத்து, அம்புகளாகிய மழையைச் சொரிந்து, அவன் விட்ட அம்புகளை வெட்டியருளினர். (235)

சூரபன்மன் பின்னரும் ஒளிபொருந்திய அநந்தகோடியளவான பாணங்களை இடைவிடாது செலுத்திக்கொண்டு நிற்க, சண்முகப் பெருமான் தாம் செலுத்திய அம்புகளால் அவற்றை எல்லாம் அழித்துப் பின்னரும் ஆயிரம் அம்புகளைச் சூரபன்மனது ஆபரணங்கள் அணிந்த புயத்தில் தைக்கும்படி செலுத்தியருளினர். (236)

சிவபிரானுக்குத் திருக்குமாரராம் முருகக் கடவுள் செலுத்திய ஆயிரம் அம்புகளும் சூரபன்மனுடைய புயத்திற் பட்டவுடன், அவை பெருவயிரத்திதையுடைய மலையின் மீது வீழ்ந்த கல்மழைத் துளிகள் சிதறிப் போதல் போல், விரைவில் அழிந்து பக்கங்களிற் சிதறின. (237)

அந்தமில் வன்மை சான்ற அவுணன் மற்றதனை நோக்கி
முந்துறு வெகுளி தூண்ட முறுவலும் உயிர்ப்பும் தோன்ற
எந்தைதன் மொய்ம்பில் செல்ல இராயிரம் பகழி வாங்கிச்
சிந்தையில் கடிது தூண்டித் தேவரும் மருள ஆர்த்தான்.

உயிர்ப்பு=பெருமூச்சு.

உள் தெளிவுற்றோர் காணும் ஒப்பிலா முதல்வன் தோள் மேல்
விட்டிடு பகழிமுற்றும் வெந்து வெம் துகளதாகிப்
பட்டன திசைகள் முற்றும் பரந்தன பரத்தின் மேலோன்
கண் தழல் அதனால் மாய்ந்த காமவேள் யாக்கையே போல்.

தெளிவு=ஞானம், துகள்=சாம்பர்.

ஆங்கது காலை தன்னில் அறுமுகம் படைத்த ஐயன்
நீங்கரு நெறியால் உய்த்த நெடுஞ்சரம் அனைத்தும் மாற்றி
பாங்கமர் வயவர்மீதும் பாரிடப் படைகள் மீதும்
தீங்கணை அழுத்தலுற்றான் தேவரை இடுக்கண் செய்தான்.

நீங்கரு நெறியால்=குறி தவறுவண்ணம், வயவர்=வீரர்,
இடுக்கண்=துன்பம்.

தன் இணை தானேயாகி நின்றிடும் தனிவேல் வீரன்
அன்ன தோர் தன்மை கண்டு ஓர் ஆயிரம் பகழி பூட்டித்
துன்னலன் குனித்த சாபம் துணித்தனன் துணியா முன்னம்
பின்னும் ஓர் சிலையை ஏந்திப் பெருமுகில் இரிய ஆர்த்தான்.

துன்னலன்=பகைவன், சாபம்=வில்லு, இரிய=அஞ்சும்படி.

இம்பரில் மலைந்த சூரன் இம்மென அருக்கொண்டேகி
அம்பரத்து இடையே தோன்ற அன்னது குமரன் காணு
உம்பரில் சென்று தாக்க ஓர் இறை எதிர்ந்து நின்று
நம்பியொடு ஆடல் செய்வான் நவில் அரும் மாயை சூழ்வான். (242)

இம்பர்=பூமி, அருக்கொண்டு=மறைந்து, அம்பரம்=ஆகாயம்,
உம்பர்=ஆகாயம், ஆடல்=யுத்தம்.



வலிமையையுடைய சூரபன்மன் அத்தன்மையைக் கண்டு, கோப நகையும், பெருமூச்சும் உடையவனாய், தேவர்களும் கண்டு மயங்கத்தக்கதாக, ஈராயிரம் அம்புகளை எமது பரமபிதாவாம் முருகக்கடவுளின் திருப்புயத்தில் தைக்கும்படி செலுத்தி ஆரவாரஞ் செய்தான். (238)

மெய்ஞ்ஞானம் பெற்ற ஞானிகளால் தரிசிக்கப்படும் முருகக் கடவுளின் திருத் தோளின் மீது சூரபன்மன் விடுத்த அம்புகளனைத்தும், சிவபிரானது நெற்றிக்கண் அக்கினியால் எரிந்த மன்மதனுடைய சரீரம் சாம்பராய் பரந்தது போல, நுண்ணிய சாம்பராய் அழிந்து திசைகள் தோறும் பரவின. (239)

அறுமுகப்பிரான் குறிதவறுவண்ணம் செலுத்திய பாணங்களை, தேவரைத் துன்புறுத்தி வந்தவனாகிய சூரபன்மன் தனது அம்புகளால் அழித்து, அவர் பக்கத்தில் நின்ற வீரர்கள் மேலும், பூதர்கள் மேலும், பூதசைனியங்கள் மேலும் கொடிய பாணங்களைச் செலுத்தினான். (240)

ஒப்பற்ற வேல் வீரராம் முருகக் கடவுள் அதனைக் கண்டு, ஓராயிரம் பாணங்களை விட்டுச் சூரபன்மன் வளைத்து வைத்திருந்த வில்லை வெட்டியருளினார். உடனே சூரபன்மன் பின்னரும் ஓர் வில்லை எடுத்துக் கொண்டு பெரிய மேகங்களும் அஞ்சி அகலும் படி ஆரவாரித்தான். (241)

பூமியில் நின்று போர் செய்த சூரபன்மன், மறைந்து சென்று ஆகாயத்தில் நின்றான். அதனை முருகக் கடவுள் கண்டு, ஆகாயத்தில் சென்று போர் செய்ய, அவன் ஓரிறையளவு நேரம் பெருமானோடு போர் செய்து, பின்பு மாயப் போரை ஆலோசனையுடன் செய்வானாயினான். (242)

விண்ணிடை நின்ற சூரன் விரைந்துடன் கரந்து சென்று
மண்ணிடை மீட்டும் செல்ல மாநில வரைப்பில் செவ்வேள்
துண்ணென வந்து வெம் போர் தொடங்கலும்
தோற்றம் மாற்றிக்
கண் அகன் தூய நீத்தக் கனை கடல் நடுவன் ஆனான்.

ஆயிடை முருகவேள் சென்று அடுசமர் இயற்றும் எல்லை
மாயையில் மறைந்து சூரன் மாதிர முடிவில் தோன்ற
ஏ என ஆண்டும் செவ்வேள் ஏகியே நெடும் போர் ஆற்றக்
காய் கனல் உமிழும் வேலான் கரந்து பாதலத்தில்
நின்றான். (244)

ஆறு இரு தடம் தோள் வள்ளல் அது கண்டு
பிலத்துள் ஏகி
மாறு அமர் இயற்றும் எல்லை வல்லை தன் உருவும் மாற்றி
வீறு உள சிமையச் செம்பொன் மேருவின் குவட்டில் நிற்ப
ஏறு உடை முதல்வன் மைந்தன் இம் என
அங்கட் சென்றான். (245)

மேருவின் சிகரம் நண்ணி வேலுடைத் தடக்கை வீரன்
பேர் அமர் இயற்றத் தீயோன் பின்னரும் ஆண்டு நீங்கி
நாரணன் உலகில் தோன்ற நம்பியும் தொடர்ந்து போந்து
சூர் எனும் அவுணனோடு தொல் சமர் ஆற்றி நின்றான்.

ஆற்றிடுகின்ற காலத்து அவுணர்கோன் அண்டகோள
மேல் திகழ் வாயில் செல்ல விமலனும் அங்கண் ஏகி
ஏற்று எதிர் மலையா அன்னான் ஏறிய இவுளித் தேரைக்
கூற்றுறழ் பகழி தன்னால் அட்டனன்
கொற்றம் கொண்டான். (247)



ஆகாயத்தில் நின்ற சூரபன்மன், விரைவில் மறைந்து சென்று பூமியில் வந்து நின்றான். சுப்பிரமணியப் பெருமானும் திடீரென பூமிக்கு வந்து யுத்தத்தை ஆரம்பிக்கச் சூரபன்மன் மறைந்து சென்று சமுத்திரத்தின் நடுவில் நின்றான். (243)

கரந்து = மறைந்து, கண் = இடம், கனை = ஒலி, நீத்தம் = நீர், நடுவன் = நடுஇடம்.

முருகக் கடவுள் சமுத்திர நடுவினுஞ் சென்று அவனுடன் போர் செய்தபொழுது, சூரபன்மன் அவ்விடத்தில் நின்றும் மறைந்து சென்று திகாந்தத்தில் நிற்க, சுப்பிரமணியப் பெருமான் அவ்விடத்திற்கும் சென்று பெரும் போரைச் செய்யச் சூரபன்மன் அவ்விடத்தில் நின்றும் மறைந்து சென்று பாதல உலகில் நின்றான். (244)

மாதிரம் = திக்கு.

பன்னிரு திருப்புயங்களைக் கொண்ட சுப்பிரமணியப் பெருமான் அதனை அறிந்து பாதலவுலகிலும் சென்று போரினைச் செய்தபோது, அவன் மறைந்து சென்று மேருமலையின் உச்சியில் நின்றான். முருகக் கடவுள் அதனை அறிந்து அவ்விடத்திற்கு விரைந்து சென்றார். (245)

பிலம் = பாதலம், வீறு = பொலிவு, சிமையம் = கொடுமுடி, குவடு = உச்சி, ஏறு = இடபம்.

வேற்படையையுடைய முருகக் கடவுள் மேரு மலையின் சிகரத்திலும் சென்று பெரிய யுத்தத்தைச் செய்யத் தீயவனாகிய சூரபன்மன் அவ்விடத்தையும் விடுத்து, விஷ்ணுமூர்த்தியின் வைகுந்த உலகத்தில் நிற்க, முருகக் கடவுளும் வைகுந்தவுலகில் சென்று சூரபன்மனுடன் யுத்தத்தைச் செய்துகொண்டு நின்றார். (246)

முருகக் கடவுள் போரினைச் செய்தபோது, சூரபன்பன் அண்ட கோளத்தின் மேற்பக்க வாயிலின்கட் செல்ல, முருகக் கடவுள் அங்கேயும் சென்று, யமனைப் போன்ற அம்புகளைச் செலுத்திச் சூரபன்மனுடைய தேரையழித்து வெற்றி பெற்றருளினார். (247)

இவுளி = குதிரை, உறழ் = நிகர்த்த.

கந்துக விசய மான் தேர் இற்றலும் கடுங்கோல் மன்னன்
இந்திர ஞாலம் என்னும் எறுழ் மணித்தடந் தேர் தனைச்
சிந்தனை செய்தலோடும் சேண்கிளர் செலவிற்றாகி
வந்திட அதன் மேலேறி வல்லை போர் புரிதலுற்றான்.(248)

மண்டமர் புரியும் எல்லை வள்ளல் தன் பகழிதன்னால்
அண்டமது அடைந்த வாயில் அடைத்ததும் அப்பாலுள்ள
தண்டமது எல்லாஞ் செல்லாத் தன்மையும்
தகுவர் கோமான்
கண்டனன் நன்று நன்றென் இறைத் தொழிற்
காவல் என்றான். (249)

இறைத் தொழில் அவுணர் செம்மல் ஏந்து தன்
சிலையை வாங்கித்
திறத்தொடும் அநந்த கோடி செம்சரம் தூண்டி அண்ட
நெறிப்படு வாயில் பொத்தும் நெடும் கணைக்
கதவம் முற்றும்
அறுத்து நுண் தூளி ஆக்கி அம்பரம் சுழல விட்டான்.

காவலன் அண்டவாயிற் கணைகளின் கபாடம் நீக்கி
மாவொடு களிறுந் தேரும் வயவரும் வரம்பின்றாகி
ஓவரு நெறியின் அப்பால் உற்ற தன் தானை தன்னைக்
கூவினன் வருக என்று குவவுத்தோள் கொட்டி ஆர்த்தான்.

ஆர்த்திடுகின்ற காலத்து அண்டத்தின் அப்பால் நின்ற
தேர்த்தொகை களிற்றின் ஈட்டம் திறல் கெழும்
இவுளிப் பந்தி
சூர்த்திடும் அவுண வெள்ளம் துண்ணென ஈண்டை ஏகிப்
போர்த் தொழில் முயன்று செவ்வேள் புடையுறத்
தெழித்துச் சூழ்ந்த. (252)



சூரபன்மன் தனது வெற்றியையுடைய பெரிய தேர் அழிந்த வுடன், இந்திர ஞாலம் என்னும் பெயரையுடைய தேரை அவ்விடத் திற்கு வருமாறு நினைத்தான். உடனே அத்தேர் ஆகாய வழியாக வந்து நின்றது. அவன் அத்தேரின் மீது ஏறி நின்று போரினைச் செய்யத் தொடங்கினன். (248)

கந்துகம் = குதிரை, எறுழ் = வலிமை.

சூரபன்மன் பெரும் போரைச் செய்தபோது, இவ்வண்டத்தின் வாயிலானது சுப்பிரமணியப் பெருமான் செலுத்திய அம்புகளால் அடைபட்டதையும், அதனால் அப்புறத்தில் நின்ற சேனைகளெல்லாம் இவ்விடத்திற்கு வரா திருத்தலையும், பார்த்து எனது பரிபாலனம் மிகவும் சிறந்தது என்று இகழ்ந்து கூறினன். (249)

மண்டு = மிகுந்த, தண்டம் = சேனை, தகுவர் = அசுரர், இறை = அரசு.

சூரபன்மன் தனது வில்லை வளைத்துக் கோடிக்கணக்கான அம்புகளைச் செலுத்தி இவ்வண்டத்தின் வாயிலை அடைத்திருந்த அம்புக் கதவு முழுவதையும் வெட்டித் துகளாக்கி ஆகாயத்திற் சுழன்று திரியும்படி விட்டான். (250)

திறம் = வீரம், பொத்தும் = அடைத்திருந்த, அம்பரம் = ஆகாயம்.

சூரபன்மன் இவ்வண்டத்தின் வாயிலை அடைத்திருந்த அம்புக் கதவை அழித்து, அவ்வாயிலுக்கு அப்பால் நின்ற குதிரைகளும் யானைகளும் தேர்களும் காலாட்களும் ஆகிய நால்வகைச் சேனைகளையும், வாருங்கள் என்று அழைத்துத் தனது திரண்ட புயங்களில் தட்டி ஆரவாரித்தான். (251)

காவலன் = அரசன், கபாடம் = கதவு, வயவர் = காலாட்கள்,
ஓவல் = ஒழிதல், குவவு = திரட்சி.

இவ்வண்டத்தின் புறத்தே தடையுற்று நின்ற தேர்களும், யானைளும், குதிரைகளும், அசுர வெள்ளமும் ஆகிய நால்வகைச் சேனைகளும் விரைவில் வந்து மிக்க ஆரவாரத்தோடு சுப்பிரமணியப் பெருமான் பக்கத்தில் சூழ்ந்தன. (252)

களிறு = ஆண்யானை, இவுளி = குதிரை, பந்தி = வரிசை,
தெழித்து = ஆரவாரித்து.

நீள்நுதல் விழியின் வந்த நிருமலக் கடவுள் தன்னை
ஏணொடும் அண்டத்து அப்பால் இருந்திடு தானை சுற்றச்
சேணுறு நெறிக்கண் நின்ற திசைமுகன் முதலாம் தேவர்
காணுதலோடும் உள்ளம் கலங்கி மற்றினைய சொல்வார்.

காலமோடு உலகம் உண்ணக் கனன்று எழு கரிய தீயின்
கோலமோ அண்டத்து அப்பால் குரைபுனல்
நீத்தம் தானோ
ஆலமோ அசனிக் கொண்மூ ஆயிரகோடி சூழ்ந்த
சாலமோ யாதோ என்று தலை பனித்து இரியல் போனார்.

ஆயின காலை தன்னில் அண்டங்கள் தோறும் நின்ற
மா இரும் தகுவன் தானை வந்து தன்மருங்கு சுற்றிப்
பாய் புனல் முகில் கான்றென்னப் படைத்தொகை
வீசி ஆர்ப்பத்
தீ உருவான செம்மல் சிறிது தன் நாட்டம் வைத்தான்.

அடலையின் நலத்தை வீட்டி அரும்பெறல் ஆக்கம் சிந்தி
அடலையின் உணர்வு இன்றுகும் அவுணர் கோன்
தானை முற்றும்
அடலையின் நெடுவேல் அண்ணல் அழல் எழ
விழித்தலோடும்
அடலையின் உருவாய் அண்டத் தொல்உரு
அழித்த மன்னே. (256)

முற்படும் அனிகம் முற்றும் முடிதலும் முடிதல் இன்றி
எல்படும் அண்டத்து அப்பால் ஈண்டிய பதாகினிக்குள்
பிற்பட அளப்பில் சேனை பெயர்ந்து மற்று
ஈண்டை துன்னிச்
சிற்பரன் குமரன் தன்பால் படைமுறை சிதறிச் சூழ்ந்த.



சிவபெருமானுடைய நெற்றிக் கண்ணில் நின்றும் தோன்றிய சுப்பிரமணியப் பெருமானை, வந்த சேனைகள் இறுமாப்புடன் சூழ்ந்து கொள்ள, ஆகாய வழியில் நின்ற பிரமா முதலிய தேவர்கள் அதனைக் கண்டு மனம் கலங்கிப் பின்வருமாறு கூறுவாராயினர். (253)

நீள் = ஒளிமிக்க, நுதல் = நெற்றி, ஏண் = இறுமாப்பு,
சேண் = ஆகாயம்.

உலக அழிவு காலத்தில் தோன்றுகின்ற பிரளய காலாக்கினியின் புகையினது பரந்த வடிவமோ, இவ்வண்டத்தின் அப்புறத்தில் இருந்து வருகின்ற முழக்கத்தையுடைய சமுத்திரத்தின் கரிய வடிவமோ, இடியையுடைய மேகங்கள் ஆயிர கோடியளவில் கூடிய கூட்டமோ, வேறு யாதோ என்று சொல்லிக் கொண்டு நடுக்கத்துடன் ஓடினார்கள். (254)

கனலல் = எரிதல், குரை = ஒலிக்கின்ற, அசனி = இடியேறு,
கொண்மூ = மேகம், சாலம் = கூட்டம், பனித்து = நடுங்கி.

சுப்பிரமணியக் கடவுள் சூரபன்மனது புற அண்டங்களில் உள்ள நால்வகைச் சேனைகளும், தமது நாலு பக்கங்களிலும் சூழ்ந்து நிற்பதையும், படைகளைச் செலுத்தி ஆரவாரிப்பதையும் அறிந்து, தமது திருக் கண்களில் அக்கினி தோன்றச் சிறிது பார்த்து அருளினர். (255)

தகுவன் = அவுணன், நாட்டம் = பார்வை.

முருகக் கடவுள் அக்கினி தோன்றப் பார்த்த அளவில், சூரபன்மனது சிறந்த வலிமையும் பெறுதற்கரிய பொருட் செல்வமும் அழிந்து, அழிவு காலத்திலும் நல்லுணர்ச்சி கூடப்பெறாத சூரபன்மனது சேனைகள் முழுவதும், எரிந்து சாம்பரின் வடிவமாகி, இவ்வண்டத்தின் இயற்கை வடிவை மறைத்தன. (256)

அடல் = (1) வலிமை (2) சங்காரம் (3) சங்காரக் கடவுள்
(4) சாம்பர். ஆக்கம் = செல்வம், சிந்தி = கெடுத்து.

முன்னர் வந்த அசுர சேனைகள் அனைத்தும் இவ்வாறு எரிந்து அழிந்து போகவும், பின்னரும் அளவில்லாத சேனைகள் இடம் பெயர்ந்து வந்து முருகக் கடவுள் மீது ஆயுதங்களை முறை முறையாகச் சொரிந்து கொண்டு சூழ்ந்தன. (257)

அனிகம், பதாகினி = சேனை, எல் = ஒளி, துன்னி = அடைந்து.

பரப்பொடு மிடைந்த தானைப் பரவையை நோக்கி ஐயன்
நெருப்புமிழ் தன்மைத் தென்ன நெட்டுயிர்ப்பு
அனிலம் உந்தி
உரப்பினன் சிறிதே அற்ருல் உம்பரில் குவிந்த பூளைப்
பொருப்பிடை அழல் புக்கென்னப் பூழியாய்
உலகம் போர்த்த. (258)

பரப்போடு = பரவி, மிடைந்த = நெருங்கிய, பரவை = சமுத்திரம்,
அனிலம் = காற்று, பூளை = பஞ்சு, பொருப்பு = மலை, பூழி = சாம்பர்.

மாட்சியின் உலவுசேனை வடிவெலாம் விடுத்துத் தொல்லை
மாட்சியின் உயிரே தாங்கி மலைதும் என்று உன்னிப்
பின்னுஞ்
சூட்சியின் வளைந்தவாபோல் சோதிவேற் குமரன் தன்பால்
சூட்சியின் மேவிற்றம்மா தூயநுண் துகளின் ஈட்டம். (259)

மாட்சி = (1) பெருமை (2) தன்மை, சூட்சி = (1) உபாயம்
(2) சூழுதல்.

அந்தம் இல் தானை முற்றும் அத்தன் ஓர் உம்காரத்தால்
வெம் துகளாகப் பின்னும் மேலை அண்டத்துள் நின்ற
தந்தியும் பரியும் தேரும் தானவப் படையும் ஆர்த்து
வந்து வந்து அயலில் சூழ வரம்பிலா முதல்வன்
கண்டான். (260)

தந்தி = யானை, பரி = குதிரை, தானவர் = அசுரர்.

திருத் தமிழ் மதுரை தன்னில் சிவன் பொருள்
நிறுக்கும் ஆற்ருல்
உருத்திர சருமனுகி உற்றிடு நிமலன் வெம் போர்
அருத்தி கொள் கணிச்சி சூலம் ஆழி தண்டு எழு அதாகும்
கரத்தினில் படைகள் தம்மை நோக்கியே கழறல் உற்ருன்.

அருத்தி = வேட்கை, கணிச்சி = மழு, ஆழி = சக்கரம்.

வென்றி அம் படைகாள் கேண்மோ விரைந்து உடன்
தழுவி நம்பாற்
சென்றிடும் அனிகம்தன்னைச் செல்நெறி பெருமல் அப்பால்
நின்றிடு படையை எல்லாம் நீவிர்பல் உருக் கொண்டேகிக்
கொன்று இவண் வருதிர் என்று கூறி மற்று
இவற்றைத் தொட்டான். (262)

வென்றி = வெற்றி, தழுவி = சேர்ந்து.



தம்மைச் சூழ்ந்த சேனு சமுத்திரத்தை முருகக் கடவுள் பார்த்தருளி, சிறிது உம்காரத் தொனி கொண்டு உரப்பியருளினுர். அதனுல் தீயானது பஞ்சு மலையில் புகுந்தால் அக்கணமே அது எரிந்து சாம்பராய்ப் பரவுதல் போலச் சேனைகள் எரிந்து சாம்பராகி உலகம் முழுவதையும் மறைத்தன. (258)

எரிந்த சேனு சமுத்திரம், நாம் தூல வடிவங்களுடன் சென்று போர் செய்யச் செய்ய, இச்சிவகுமாரன் நம்மை அழித்து விடுகின்ருன். ஆதலின் தூல வடிவங்களை அகற்றிவிட்டு, நமது உயிர் வடிவமாம் சூக்கும வடிவத்தைப் பொருந்திப் போரினைப் புரிவோம் என்று கருதி, சூழ்ச்சியினுல் பின்னரும் குமாரக் கடவுளின் பக்கத்தில் சூழ்ந்த தன்மையைப் போல, இறந்தவர்களின் சாம்பல், வேற்படையை உடைய குமாரக் கடவுளின் பக்கங்களில் செறிந்தது. (259)

அங்கு நின்ற சேனை முழுவதும் முருகக் கடவுளின் உம்காரத் தீயினுல் சாம்பராய் அழிந்து போகப் பின்னரும், புற அண்டங்களில் தங்கி நின்ற யானைகளும் குதிரைகளும் தேர்களும் அசுரர்களுமாகிய நால்வகைச் சேனைகளும், ஆரவாரித்துக் கொண்டு வந்து தமது பக்கங்களில் சூழ்ந்து கொள்வதனை, (முதல்வராகிய முருகக் கடவுள்) பார்த்தருளினுர். (260)

மதுராபுரியில் செந்தமிழ் மொழியின் இறையனுர் அகப்பொருள் இலக்கண நூலின் உண்மை உரை இதுவென உணர்த்தும் முறைமையினுல், உருத்திரசருமன் என ஓர் ஊமைப்பிள்ளையாய் அவதரித்த முருகக்கடவுள் தமது திருக்கரங்களில் அமைந்திருந்த மழுவும், சூலமும், சக்கரமும், தண்டமும், எழுவும் என்று சொல்லப்படும் பஞ்சாயுதங்களையும் பார்த்து, பின்வருமாறு பணித்தருளுவாராயினர். (261)

வெற்றியைத்தரும் அழகையுடைய படைகளே ! நீவிர் பலவேறு வடிவங்களை எடுத்து விரைந்து போய் நம்மிடத்தில் வந்து சூழ்ந்த சேனைகளையும், அப்புறத்து நிற்கின்ற சேனைகளையும் எல்லாம் அழித்து மீண்டு வரக்கடவீர் என்று பணித்து அவைகளைச் செலுத்தியருளினுர். (262)

ஆதி நாயகன் விட்டுள படையெலாம் அனந்தகோடி
சோதி ஆர் கதிரும் தீயும் பணிகளும் போலத் தோன்றி
ஏதிலான் அனிகமாகி இம்பர் உற்றன இமைப்பின்
பாதியின் முன்னம் அட்டுப் பெருவிறல் படைத்த மன்னே.

தூயதோர் குமரற் சூழ்ந்த படையை முன் தொலைத்து வீட்டி
ஏயின படையோர் ஐந்தும் இம்பரே ஒழிய நின்ற
ஆயிரத்தோர் ஏழண்டத்து அகலமும் சென்று சென்று ஆங்கு
ஓய்வற எழுந்த தானை முழுதும் அட்டு உலவுகின்ற. (264)

ஐவகைப் படைகள் முற்றும் அண்டங்கள் தோறும் நின்ற
வெவ்விய அவுணர்த் தேய்த்து விரைவொடு திரிதலோடும்
தெவ்வியல் அவுணர் மன்னன் செயிர்த்து மற்றிதனை நோக்கி
இவ்வொரு கணத்தின் முன்னம் இவன் உயிர் உண்பன் என்றான். (265)

சாற்றி இத்தன்மை தன்னைத் தானவர்க்கு அரசன் முன்னம்
கூற்றுயிர் குடித்த நோன்தாள் பண்ணவன் கொடுப்பக் கொண்ட
மாற்றரும் திகிரி தன்னை வாங்கினன் வழிபட்டேத்திக்
காற்றினும் கடிது செல்லக் கந்தவேள் மீது விட்டான். (266)

விட்டிடு திகிரி யாரும் வெருக்கொள விரைந்து சென்று
கிட்டிய காலைச் செவ்வேள் கிளர்ந்த ஓர் பாணி நீட்டி
வட்டணை நேமி தன்னை வருதியால் என்று பற்ற
ஒட்டலன் அதனை நோக்கி உளந்தளர்ந்து உயிர்த்து நின்றான். (267)



முதற்பொருளாம் சுப்பிரமணியப் பெருமான் செலுத்திய படைகள் ஐந்தும் கோடிக்கணக்கான ஆதித்தர்களும், அக்கினிகளும், சர்ப்பங்களும் போலாக உருத்திரிந்து தோன்றிச் சூரபன்மனது சேனைகளாகி யுத்தகளத்தில் நின்றவற்றை அரை மாத்திரை நேரத்தில் அழித்து முதலில் பெரும் வெற்றியைப் பெற்றன. (263)

ஆர்=நிறைந்த, பணி=பாம்பு, ஏதிலான்=பகைவன், விறல்=வெற்றி.

குமாரக் கடவுளைச் சூழ்ந்த சேனைகளை முதலில் அழித்தகற்றி இவ்வண்டத்தின் ஏனைய இடங்களிலும் சென்று அங்கே நின்ற சேனைகளையும் அழித்தன. பின்பு எஞ்சிய, ஓராயிரத்தேழு அண்டங்கள் தோறும் சென்று, ஆங்காங்கே போர்க்கெழுந்து கொண்டிருந்த சேனைகள் முழுவதையும் கொன்று கொன்று உலாவித் திரிந்தன. (264)

ஏயின=செலுத்தப்பட்ட, அகலம்=இடம்.

ஐந்து படைகளில் இருந்து தோன்றிய படைகளெல்லாம், எல்லா அண்டங்களிலும் நின்ற அசுரர்களை விரைவில் அழித்து, உலாவுவதைக் கண்ட சூரபன்மன் கோபமுற்று, ஒரு கண நேரத்துள் இச்சிறுவனின் உயிரைக் கவர்வேன் என்று கூறினான். (265)

வெவ்விய=கொடிய, தேய்த்து=அழித்து, தெவ்=பகை
செயிர்த்து=கோபித்து.

சூரபன்மன் இவ்வாறு கூறி, யமன் உயிரைக் கவர்ந்த திருவடிகளை உடைய சிவபிரான், தனக்கு வரம் அருளிய நாளில் கொடுத்த சக்கரப்படையை எடுத்து, வழிபாடு செய்து போற்றி, முருகக் கடவுள் மீது வாயு வேகத்திலும் மிக்க வேகமாய்ச் சென்று தாக்கும்படி செலுத்தினான். (266)

கூற்று=யமன், குடித்த=கவர்ந்த, நோன்தாள்=தம்மை அடைந்த உயிர்களைச் சுமக்கும் தாள், திகிரி=சக்கரப்படை.

சூரபன்மன் செலுத்திய சக்கரம் கண்டோர் அனைவரும் அஞ்சும்படி விரைந்து போய் முருகக் கடவுளைக் கிட்டியபொழுது சுப்பிரமணியப் பெருமான் அச்சக்கரத்தைப் பார்த்துப் படையே! இங்கே வா என்று கூறித் தமது ஒரு திரக்கரத்தை நீட்டி, அதனைப் பிடித்தருளினார். அதனைச் சூரபன்மன் பார்த்து மனஞ் சோர்ந்து பெருமூச்சுவிட்டு நின்றான். (267)

வெரு=அச்சம், பாணி=கை, வட்டணை=வட்டம், நேமி=சக்கரம், ஒட்டலன்=பகைவன்.

உள் நிலா மாயை வல்ல ஒரு தனித்தேர் மேல் நின்றோன்
எண் இலா உருவம் கொண்டே இரும்கணை மாரி தூர்ப்பத்
தெள் நிலா மௌலி அண்ணல் உதவிய செம்மல் நோக்கி
நண்ணலான் ஒருவன் மாயம் நன்று நன்றென்று நக்கான்.

சிறு நகை செய்து மேலாம் சேதனப் பகழி பூட்டி
அறுமுகன் அவுணர் செம்மல் ஆற்றிடும் மாயம் முற்றும்
இறைதனின் முடித்தி என்றே ஏவலும் விரைவில் ஏகி
முறை நெறி பிழைத்தோன் மாயம் முற்று ஒருங்கு அட்ட
தன்றே. (269)

மாயையின் உருவம் நீங்க வலி அழிந்து உள்ளம் மாழ்கித்
தீயவன் ஒருவன் ஆகிச் சேண் உயர் தேரில் நின்றான்
ஆயது தெரிந்து வானோர் அறுமுகத்தவனைப் போற்றிப்
பாய் புனற் கடலின் ஆர்த்துப் பனிமலர் மாரி தூர்த்தார்.

தூர்த்தலும் தேரும் தானும் துண்ணெனக் கரந்து சூரன்
போர்த்திடும் அண்டகூடப் பித்திகை வாயில் எய்தி
ஆர்த்து அறைகூவிப் புக்கு ஆங்கு அப்புறத்தண்டம்
செல்லத்
தீர்த்தனும் அதனை நோக்கித் தீயனைத் தொடர்ந்து
போனான். (271)

தொடர்ந்து தன் மனத்தில் செல்லும் தொல்லை மால்
இரதத்தோடும்
கடந்த பேர் ஆடல் மிக்க காசிபன் தனயன் நின்ற
இடம் தலைப்படலும் அன்னான் எந்தை யோடு இகற்போர்
ஆற்றி
அடும் திறல் மாயை நீரால் அப்புறத்து அண்டம்
போனான். (272)



இந்திரஞாலம் என்னும் ஒப்பற்ற தேரில் நின்ற சூரபன்மன் எண்ணற்ற மாயாவடிவங்களைக் கொண்டு மிகுந்த அம்பு மழைகளைப் பொழிய, ஒளியை வீசும் சந்திரனைத் தரித்த சடாமுடியையுடைய சிவபிரான் தந்த முருகக் கடவுள் அதனைப் பார்த்துச் சூரபன்மன் செய்யும் மாயத்திறங்கள் நல்லது நல்லது என்று கூறிப் புன்னகை செய்தருளினார். (268)

உள் = மனம், (1) நிலா = அழுந்திய, தெள் = தெளிந்த, (2) நிலா = சந்திரன், மௌலி = சிரசு.

அறுமுகப் பெருமான் புன்னகை செய்து எவற்றிற்கும் முதலாகியதோர் ஞானாஸ்திரத்தை எடுத்துத் தமது வில்லில் தொடுத்து இந்த அவுணர் வேந்தன் செய்த மாயம் முழுவதையும் ஓர் இறையளவு நேரத்துள் நீ அழிக்கக்கடவை என்று பணித்துச் செலுத்த, அது விரைந்து சென்று தீயவனாகிய சூரபன்மன் செய்த மாயச் செயல்கள் முழுவதையும் ஒருங்கு அழித்தது. (269)

சேதனம் = ஞானம், முறை = நீதி, ஒருங்கு = முற்றாக.

சூரபன்மன் கொண்ட மாயவடிவங்கள் அழிந்து போக, அவன் தனித்தவனாகி மனம் வருந்தி ஆகாயத்தில் உயர்ந்த தேரில் நின்றான். தேவர்கள் அதனைக் கண்டு பரந்த நீரையுடைய கடல் முழங்கினாற் போல் ஆரவாரித்துக்கொண்டு ஆறுமுகப் பெருமானைத் தோத்திரம் செய்து, அவர்மீது குளிர்ந்த பூ மழையைப் பொழிந்தார்கள். (270)

மாழ்கி = வருந்தி, சேண் = ஆகாயம், பாய் = பரந்த, பனி = குளிர்ந்த.

சூரபன்மன் தேருடன் விரைவில் மறைந்து நீங்கி, இவ்வண்ட முகட்டுச் சுவரிலமைந்த வாயிலை அடைந்து ஆரவாரித்து, இறைவனைப் போர்க்கழைத்துக்கொண்டு புறத்தே உள்ள அண்டத்திற்குப் போக, பரிசுத்தராகிய முருகக் கடவுளும் அவனைப் பின் தொடர்ந்து சென்றருளினார். (271)

பித்திகை = சுவர், அறைகூவல் = போர்க்கழைத்தல்.

முருகக் கடவுள் மனவேகப் பொற்றேருடன் போராடலிற் சிறந்த சூரபன்மனைக்கிட்ட, அவன் எமது பரமபிதாவாம் முருகக் கடவுளுடன் வலிய போரைச் சிறிது நேரஞ் செய்து, பின்னர் தனது மாயா சாதன வியல்பினால் உருக்கரந்து அப்பாலுள்ள அண்டத்துக்குச் சென்றான். (272)

ஆடல் = பொருதல், இகல் = வலிய, அடும் = அழிக்கும்.

இந்நிலை அவுணர் கோமான் இருநிலத்து அண்டம் முற்றும்
மின் எனப் படர்ந்து தோன்றி வெய்ய போர் விளைத்து நின்று
பின்னரும் கரந்து செல்லப் பிரானும் அவ்வண்டந் தோறும்
துன்னலன் தனை விடாது தொடர்ந்து அமர் இயற்றிப் போனான். (273)

வேறு

ஆய காலை அயன் முதல் தேவர்கள்
நேயம் மிக்க குரவரை நீங்கிய
சேயினோர்களில் தேம்பித் திருமகள்
நாயகன் தனை நோக்கி நவிலு வார். (274)

வலம் கை வாளுடை மாயை தன் மாமகன்
பொலன் கொள் அண்டப் புரைதனுள் போயினான்
இலங்கு வேற்படை எந்தை தன் போர் இடை
விலங்கினான் அலன் என்றும் விளிகிலான். (275)

மாயை ஆற்றவும் வல்லவன் ஈண்டு ஒரீஇப்
போய தன்மை புணர்ச்சியதே அலால்
ஆயின் வேறிலை ஆறிரு மொய்ம்புடைத்
தூயன் மற்றது சூழ்ந்திலன் போலுமால். (276)

வாடினான் என மாற்றலனைத் தொடர்ந்து
ஓடினான் எந்தை ஒல்லையில் சூரனைக்
கூடினான் கொல் குறுகலன் ஆகியே
நாடினான் கொல் அறிகிலம் நாம் எலாம். (277)



மின்னலானது ஆங்காங்கு தோன்றித் தோன்றி ஒளியைப்பரப்பி உடன் உடன் மறைவது போலச் சூரபன்மன் பெரிய பிருதுவி அண்டங்கள் தோறும் சென்று சென்று முருகக் கடவுளுடன் போர் செய்து மறைந்து செல்ல, முருகக் கடவுளும் தொடர்ந்து அவனுடன் யுத்தத்தைச் செய்து கொண்டு போயினர். (273)

கோமான் = அரசன், இருமை = பெருமை, படர்ந்து = சென்று
துன்னலன் = பகைவன்.

அப்பொழுது அன்புடைய பெற்றோரைப் பிரிந்த குழந்தைகள் அப்பெற்றார்க்கு என்ன இடர் நேர்ந்ததோ என்றஞ்சி மனம் வருந்தி அழுதல் போல, முருகக் கடவுளைப் பிரிந்த பிரமா முதலிய தேவர்கள் மனம் நொந்து இலக்குமியின் நாயகராகிய திருமாலை நோக்கிப் பின்வருமாறு கூறுவாராயினர். (274)

நேயம் = அன்பு, குரவர் = பெற்றார், சேயினோர்கள் = குழந்தைகள்
திருமகள் = இலக்குமி, நவிலுவார் = கூறுவார்.

வலக்காத்தில் வாட்படையையுடைய சூரபன்மன், வாயிலினுட் புகுந்து சென்றான். அவன் பெற்ற வரவிசேடத்தால் எக்காலத்தும் இறவான். ஆதலின், ஒளி விளங்கும் வேற்படையையுடைய எமது பரமபிதாவாம் முருகக் கடவுள் அவனோடியற்றும் போரில், தான் இறந்து போவேன் என்று அஞ்சிப் பின்வாங்கி இருக்க மாட்டான். (275)

பொலன் = பொன், புரை = துளை, விலங்கினான் = பின்வாங்கினான்,
விளிகிலான் = இறவான்.

மாயா சாதனையில் வல்லவனாகிய அவன் இவ்வண்டத்தை விட்டுச் சென்ற தன்மையை நாம் ஆராய்ந்து பார்த்தால், அது நமது இறைவரை அப்பாற் கொண்டு சென்று தனித்தவராக்கி வெல்லுதற்குக் கொண்டதோர் உபாயமாகும். இவ்வுபாயத்தைப் பன்னிரு திருப்புயங்களைக் கொண்ட பரிசுத்தராகிய நமதிறைவர் அறிந்திலார் போலும். (276)

ஒருகுதல் = நீங்குதல், புணர்ச்சி = உபாயம், சூழ்தல் = ஆராய்தல்.

முருகக் கடவுள் அவன் தோல்வியுற்றோடினான் என மதித்து அவனைத் தொடர்ந்து ஓடிப்போயினர். அவர் சூரபன்மனை விரைவில் அணுகினரோ? அணுகாதவராய் அவனைத் தேடித்திரிகின்றனரோ? நாம் ஒன்றும் அறியாதவராகவே இருக்கின்றோம். (277)

வாடினான் = தோல்வியுற்றான், குறுகலன் = அணுகாதவன்.

மாகம் மேல் நிமிர் மற்றை அண்டத்தினும்
சேகு உலாவிய சிந்தையன் தன்னுடன்
ஏகினன் ஐயன் என் இனித்தான் விளை
வாகுமோ என்று அஞ்சுதும் ஏழையோம். (278)

என்ற காலை இலங்கு எழில் பூவை போல்
நின்ற மாயவன் நீள்மலரோன் முதல்
துன்றும் வானவர் சூழலை நோக்கியே
ஒன்றும் அன்பொடு உளப்பட ஓதுவான். (279)

வேறு

வஞ்சம் மேதகும் அவுணர்கோன் ஆற்றலை மதித்து ஈண்டு
அஞ்சி அஞ்சியே இரங்கலிர் அறுமுகத்து ஒருவன்
செம் சிலைத் தனி வன்மையும் வீரமும் தெரிந்தும்
நெஞ்சகத் திடை ஐயுறுகின்றது நெறியோ. (280)

ஓதியாகியும் உணர்ந்தவர்க்கு உணரவும் ஒண்ணு
நீதியாகியும் நிமலமதாகியே நிகழும்
சோதியாகியும் தொழுதிடும் எம்மனோர்க்கு எல்லாம்
ஆதியாகியும் நின்றவன் அறுமுகன் அன்றோ. (281)

ஈறிலாது அமர் பரமனே குழவியின் இயல்பாய்
ஆறு மாமுகம் கொண்டுதித்தான் என்பதல்லால்
வேறு செப்புதற்கு இயையுமோ மேலவன் தன்மை
தேறியும் தெளிகின்றில உமது சிந்தையுமே. (282)



நமது இறைவர் வயிரம் பொருந்திய மனத்தையுடையவனாகிய சூரபன்மனைத் தூக்கிக்கொண்டு புற அண்டங்களுக்குச் சென்றருளினார். இனிமேல் நம்மிறைவர்க்கு என்ன நேரிடுமோ என்று நினைந்து நாங்கள் அஞ்சி வருந்துகின்றோம். (278)

மாகம் = ஆகாயம், நிமிர் = உயர்ந்து, சேகு = வயிரம்.

தேவர்கள் இவ்வாறு முறையிட்ட பொழுது, காயா மலர்போல் நீலவர்ண அழகுத் திருமேனியுடைய திருமாலானவர், பெருமையுடைய செந்தாமரை ஆசனராகிய பிரமா முதலாக அங்கு கூடி நின்ற தேவர்களைப் பார்த்து, உள்ளத்தில் பொருந்திய அன்பினோடும் உபதேசிப்பாராயினர். (279)

பூவை = காயா, சூழல் = கூட்டம்.

தேவர்களே ! வஞ்சம் பொருந்திய சூரபன்மனது வல்லபத்தை, இறைவனாற்றலையும் கடந்து விடக்கூடும் என்று பெரிதாக மதித்து அச்சம் கொண்டு வருந்தாதீர். ஆறுமுகங்களை உடைய முதல்வராகிய முருகக்கடவுளின் விற்போரின் வல்லபத்தையும் பராக்கிரமத்தையும் பல முறைகளில் அறிந்திருந்தும், ஐயமுற்று மனம் வருந்துவது முறையாகுமோ. (280)

மேதகும் = பொருந்திய, சிலை = வில், ஐயுறல் = சந்தேகித்தல்.

ஞானமாகியும், எல்லாப் பொருள்களையும் அறிந்த பெரியோர்க்கும் அறிய முடியாத மெய்ப்பொருளாகியும், மலமில்லாது விளங்கும் சுயம்பிரகாசமாகியும், வணங்குகின்ற தேவர்களாகிய எங்கட்கு எல்லாம் முதல்வராகியும் உள்ளவர் ஆறுமுகப்பெருமான் அல்லவா? (281)

ஓதி = ஞானம், நிருமலம் = மலசம்பந்தமற்றது.

ஆதியும் அந்தமும் இல்லாது விளங்கும் சிவபெருமானே சிறந்த ஆறு திருவதனங்களையுடைய பாலனைத் தோன்றி அருளினர் என்று சொல்லுவதன்றி, இருவர்க்கும் இடையில் பேதமுண்டு என்று கூறுதற்கு சுருதி, யுத்தி ஆதிய பிரமாணங்கள் இடந்தருவனவாமோ. தலைவராகிய சுப்பிரமணியப் பெருமானது பெருமையை முன்னர் அறிந்து நிச்சயித்திருந்தும், உங்கள் சித்தங்கள் அந் நிச்சயத்தின் வழி நின்றில. (282)

பரமன் = மேலானவன், வேறு = பேதம், தேறியும் = நிச்சயித்தும்.

ஐயம் எய்தலிர் ஆயிரகோடி அண்டத்தும்
வெய்யன் ஏகினும் தொடர்ந்து போய் வெம்சமர் இயற்றிச்
செய்ய வேலவன் துரந்து வந்திடும் தினைத்துணையில்
கையில் நெல்லிபோல் காட்டுவன் நீவிருங் காண்டீர். (283)

செய்ய = சிவந்த.

என்று மாயவன் கழறலும் அயன் முதல் எவரும்
நன்றெனத் தெளிவுற்றனர் அவ்வழி நண்ணுன்
ஒன்றின் ஆயிரகோடி அண்டத்திலும் ஓடி
நின்று நின்று அமர் ஆடினன் எந்தையை நேர்ந்து. (284)

வழி = பொழுது, நண்ணுன் = பகைவன்.

வெம் திறல் சமர் ஆற்றியே அவுணர் கோன் மீட்டும்
இந்த அண்டத்து மகேந்திர வரைப்பில் வந்து
இறுத்தான்
முந்து நீழலே விடாது செல்வோரென முனிந்து
கந்தனும் தொடர்ந்து அவனொடு போந்தனன் கடிது.

சமர் = யுத்தம், வரைப்பு = இடம், யுத்த களம். இறுத்தான் = சேர்ந்தான்.

## வேறு

போந்திடு தன்மை நோக்கிப் புராரி தன் புதல்வன் நங்கள்
ஏந்தலைத் தொடர்ந்தான் என்னு இம்பரில் அவுணர் தானை
தீந்தழல் என்னப் பொங்கிச் செங்கையிற் படைகள் வீசி
ஆய்ந்திடும் உணர்வின் மேலாம் ஆதிதன புடை
சூழ்ந்து ஆர்த்தார். (286)

புராரி = சிவன், ஏந்தல் = அரசன்.

நாதனும் அதனை நோக்கி நன்று இவர் முயற்சி என்னு
ஓதினன் முறுவல் செய்ய ஒன்னலன் தானை தொன் நாள்
மூதெயில் என்ன நீறாய் வெந்து உடன் முடிந்தது அம்மா
தாதைதன செய்கை மைந்தன் செய்வது தக்க தன்றே.

ஒன்னலன் = பகைவன், எயில் = நகரம்.



ஆறுமுகப்பிரானுக்கு ஆபத்து நேரவும் கூடுமென்று நினைந்து, சந்தேகித்து வருந்தாதீர். சூரபன்மன் ஆயிரகோடி அண்டங்களிலும் ஓடியோடிச் சென்று போரினை முயல்வனாயினும், சிவந்த வேலைக் கொண்ட நமதிறைவர் தொடர்ந்து சென்று கொடிய யுத்தத்தைச் செய்து அவனைத் துரத்திக் கொண்டு ஓர் தினையளவு நேரத்துள் இவ்வண்டத்திற்கு வந்துவிடுவார். அதனைக் கையில் உள்ள நெல்லிக் கனிபோல காட்டுவேன். நீங்களும் காண்பீர்கள். (283)

திருமால் இவ்வாறு உபதேசிக்க, பிரமா முதலிய தேவர்கள் எல்லோரும் தேறுதல் அடைந்தார்கள். அப்பொழுது சூரபன்மன் ஆயிர கோடி அண்டங்களிலும் ஓடிச் சென்று தன்னைத் தொடர்ந்து வந்த எமதிறைவரை, எதிர்த்துச் சிறிது நேரம் நின்று அவருடன் போரினைப் புரிந்தான். (284)

கொடிய வலிய போரினைச் செய்துகொண்டு சூரபன்மன் திரும்பியும் இவ்வண்டத்தில் உள்ள மகேந்திரபுர யுத்த களத்தில் வந்து சேர்ந்தான். ஒருவனை அவன் நிழல் விடாது நீங்காது பின்தொடர்வது போல சுப்பிரமணியக் கடவுளும் கோபமுற்று அவனைப் பின் தொடர்ந்து அந்த யுத்த களத்தில் வந்து சேர்ந்தருளினார். (285)

முருகக் கடவுளும் சூரபன்மனைத் தொடர்ந்து வந்த தன்மையை அசுர சேனைகள் கண்டு, சிவகுமாரன் எங்கள் அரசனைத் தொடர்ந்து வந்துவிட்டான் என்று அக்கினி சுவாலித்தால் போலக் கோபம் கொண்டு, மெய்யுணர்ச்சிக்கும் அதீதமாய் விளங்கும் முதல்வராகிய முருகக் கடவுளின் பக்கங்களில் வந்து வளைத்துப் படைகளைச் சொரிந்துகொண்டு ஆரவாரித்தார்கள். (286)

முருகக் கடவுளும் அவர்கள் செயலைப் பார்த்து, இவ்வசுரர் நம்மை வென்றுவிடலாமென்று முயன்ற முயற்சி நல்லதாம் என்று கூறி நகைத்தனர். அந்த நகையழலால் பகைவனது சேனைகள், முன்னர் சிவபிரானுடைய நகையழலால் முப்புரங்களும் எரிந்து சாம்பராய தன்மைபோல, எரிந்து நீறாகி அழிந்து போயின. புத்திரன் தனது தந்தையர் செய்த செயலைத் தானும் செய்துவரல் சிறந்த குணமல்லவா? (287)

ஆனதோர் காலை தன்னில் அறுமுகம் படைத்த அண்ணல்
தூ நகை அங்கி செல்லத் துண்ணெனப் பதைத்து வீழ்ந்து
தானவர் அனிகம் வெந்த சாம்பரின் குன்றை நோக்கி
வானவர் மகிழ்ந்து பூத்தூய் வள்ளலை வழுத்தி நின்றார்.

தூ = சுத்தம், வழுத்தி = தோத்தரித்து.

முருகு அவிழ் தொடையலான் தன் முறுவலான் அனிகம் முற்றும்
விரைவில் நுண் துகள் அதாகி வீழ்தலும் அவுணர் வேந்தன்
ஒருவனும் தமியன் நின்றான் ஒண் தமிழ் முனிவன் உண்ணத்
திரைகடல் இன்றித் தோன்றுந் தீப் பெருங் கடவுள் ஒத்தான். (289)

முருகு = வாசனை, தொடையல் = மாலை, அனிகம் = சேனை, ஒண் தமிழ் = சிறந்த தமிழ்.

முன்பு அடை குமரன் அங்கண் முறுவலித் திட்ட வாறும்
தன் படை அழிந்தவாறும் தமியன் தான் நின்ற வாறும்
கோன் படை வீரரோடு குறட்படை ஆர்க்கு மாறும்
துன்பு அடை அவுணன் கண்டு ஆங்கு உளத் தொடுஞ் சொல்லலுற்றான். (290)

தமியன் = தனியன், கோன் = அச்சம், குறள் = பூதம்.

பின்னுறு துணைவர் மைந்தர் பேர் இயல் அமைச்சர் ஏனோர்
முன்னுற முடிந்தார் இன்று முடிவுறுத் தானை முற்றும்
பன்னிரு கரத்து மைந்தன் படுத்தனன் தமியனானேன்
என் இவண் செய்வது என்னா உயிர்த்தனன் எண்ணம் மிக்கான். (291)

துணைவர் = சகோதரர், எண்ணம் = ஆலோசனை.

மாயவள் தன்னை மன்னன் மனத்திடை நினைத்தலோடும்
ஆயவள் வந்து தோன்றி அரும்பெறல் ஆற்றல் மைந்த
நீ ஒரு தமியன் ஆகி நின்று உளம் தளர்ந்தே என்னைக்
கூயினை முன்னிற்று என்னை தெரிவுறக் கூறுகென்றாள்.

முன்னிற்று = பெறக் கருதியது.



ஆறு முகங்களைக் கொண்ட சுப்பிரமணியக் கடவுளின் புன்னகை ஆகிய அக்கினியினால் அசுர சேனைகள் எரிந்து அழிந்த சாம்பர் மலையைத் தேவர்களாயினோர் பார்த்துச் சந்தோஷமுற்று மலர்களைத் தூவி ஆறுமுகப் பெருமானைத் தோத்திரஞ் செய்து கொண்டு நின்றார்கள். (288)

வாசனை வீசுகின்ற கடப்பமலர் மாலையையுடைய முருகக் கடவுளின் புன்னகை அழலால் அசுர சேனைகளெல்லாம் சாம்பராகி அழிந்துபோக, சூரபன்மன் ஒருவனுமே தனித்தவனாய் நின்றான். அவ்வாறு நின்ற அவன் சிறந்த தமிழ் மொழிக்குத் தலைவராகிய அகத்திய முனிவர் சமுத்திர நீரை ஆசமனஞ் செய்துவிட, அக்கடலிடத்துள்ள வடவாமுகாக்கினிக்கு ஒப்பாய் விளங்கினான். (289)

தன் முன்னிலையில் நின்ற முருகக் கடவுள் அக்கினி தோன்றப் புன்னகை செய்தருளிய தன்மையையும், அதனால் தனது சேனைகள் எரிந்துபோன தன்மையையும், தான் ஒருவனாய்த் தனித்து நின்ற தன்மையையும், வீரர்களும் பூத சேனைகளும் ஆரவாரிக்கும் தன்மையையும் கண்டு, பெருந் துக்கம் கொண்டவனாகிய சூரபன்மன் தன் மனத்தோடு கூறுவானாயினான். (290)

எனது தம்பிமாரும், புத்திரர்களும், மந்திரிமாரும் மற்றைய வீரர்களும், முன்னமே இச் சிவகுமாரனால் இறந்தொழிந்தார்கள். அளவில்லாத சேனைகள் முழுவதையும் இற்றைத் தினம் பன்னிரு கரங்களைக் கொண்ட இவ்வீரன் முடித்துவிட்டான். நான் ஒருவனே தனித்தவனாய் நிற்கின்றேன். இப்பொழுது செய்யத் தக்கது யாது என்று பெருமூச்செறிந்து ஆலோசனை மிகப் பெற்றவனானான். (291)

ஆலோசனை மிகப் பெற்றவனாகிய சூரபன்மன் தனது தாயாகிய மாயவளை அங்கு வருமாறு நினைத்தான். நினைத்த அளவில் அதனை அறிந்த மாயவள் அங்கே வந்து நின்று, பெரு வல்லபத்தைப் பெற்ற என் புதல்வனே! நீ ஒரு தனித்தவனாய் நின்று மனத் தளர்ச்சி கொண்டு என்னை வரும்படி நினைத்தாய். நீ பெறக் கருதியது யாது? அதனை யான் அறியும்படி சொல்லுதி என்று கேட்டாள். (292)

அறிந்திடு மாயை இவ்வாறு அறைதலும் குமரன் போரின்
மறம் தகு துணைவர் மைந்தர் மந்திரி தானை முற்றும்
இறந்திட எஞ்சினேன் யான் யாவரும் எழுதற்கு ஒத்த
திறம் தனை அருண்மோ என்ன நகைத்து அவள்
செப்பல் உற்றாள். (293)

மறம் = வீரம், ஒத்த = இயைந்த, திறம் = உபாயம்.

உறு படை சுற்றம் துஞ்ச ஒருவனே யாயும் விண்ணோர்
சிறை விடுத்து உய்யுமாறு சிந்தனை செய்திலாய் நீ
அறுமுகன் தன்னோடு இன்னும் அமர்செயக் குறித்தியாயின்
நிறை பெரும் செல்வ வாழ்க்கை நீங்கினை போலும் அன்றே.

உறு = உற்ற, துஞ்ச = இறந்தொழிய.

பன்னிரு தடம் தோள் கொண்ட பகவனைப் பாலன் என்றே
உன்னலை அவன் கைவேலால் ஒல்லையில் படுதி கண்டாய்
இன் உயிர் துறக்க நின்றாய் என்மொழி கேட்பாய் அன்றே
சென்னியில் விதியை யாவராயினுந் தீர்ந்தார் உண்டோ.

பகம் = ஞானம், ஒல்லையில் = விரைவில்.

நின்றிட அனைய தன்மை நின் உளம் மகிழும் ஆற்றால்
பொன்றினர் எழுதல் வேண்டில் புறக் கடற்கு ஒரு சாராக
மன்றல் கொள் அமுதசீத மந்தர கூடம் என்றோர்
குன்றுளது அதனை ஈண்டே கொணருதி கூடும் என்றாள்.

மன்றல் = வாசனை.

இவ்வகை உரைத்து மாயை ஏகினள் ஏகலோடும்
மைவரை என்ன நின்ற மன்னவர் மன்னன் கேளா
அவ்வை தன் சூழ்ச்சி நன்றால் அடுகளத்து
அவிந்தோர் யாரும்
உய்வகை இதுவே என்னு உன்னினன் உவகை மிக்கான்.

அவ்வை = தாய், அவிந்தோர் = இறந்தோர், உவகை = மகிழ்ச்சி.



தன் புதல்வன் கருதியதை முன்னரே அறிந்து கொண்ட மாயவள் இவ்வாறு கேட்க, சிவகுமாரனுடைய யுத்தத்தில் இறந்து போன தம்பிமாரும், புத்திரர்களும், சேனைகளும், உயிர் பெற்றெழுதற்கு ஏற்ற உபாயத்தைக் கூறுதி என்று கேட்டான். அம்மாயையானவள் சிரித்துக் கூறுவாளாயினள். (293)

உற்ற துணையாய் அமைந்த சேனைகளும் சுற்றத்தவர்களும் இறந்தொழிய, நீ தனித்த ஒருவனாய் நின்று தளர்ச்சியுறும் இந்த நேரத்திலும் இதற்குக் காரணமாயுள்ள தேவர் சிறையை விடுத்து உய்யும் வழியை நினைக்கிறாய் அல்லை. ஆறுமுகப் பெருமானுடன் இன்னும் போர் செய்ய நினைப்பாயாயின் நிறைந்த பெரிய அரச செல்வத்தோடு பொருந்திய வாழ்வினையும் இழந்துவிட்டாயென்றே சொல்லலாம். (294)

பன்னிரு திருப்புயங்களைக் கொண்ட இறைவரை ஒரு சிறு பாலன் தானே என்று நினைத்துக் கொள்ளாதே. விரைவில் அவ்விறைவர் கைக்கொண்ட வேற்படையினால் இறந்தொழியப் போகின்றாய். உனது இனிய உயிரை இழந்துவிடும் நியதியுடன் நிற்கும் நீ, யான் கூறும் உறுதி மொழிகளை ஏற்றுக்கொள்ளமாட்டாய. தலைவிதிப் பயனை அனுபவியாது ஒழியப் பெற்றவர் இவ்வுலகின்கண் எவராயினும் உளரோ. (295)

இறந்துபோன உனது துணைவர் முதலாயினோர் உயிர் பெற்று எழுதலை விரும்புவாயானால், புறவாழி என்னும் சமுத்திரத்திற்கு ஒரு புறமாக வாசனையுடைய குளிர்ந்த அமுதமந்தர கூடம் என்னும் ஒரு மலை உளது. அம்மலையை இவ்யுத்த களத்திற்குக் கொண்டு வருவாயேல் உனது எண்ணம் கைகூடப்பெறும் என்று உபாயம் கூறினாள். (296)

ஒரு கரிய மலை நின்றது போலச் செயலற்று நின்ற கரிய வடிவத்தையுடைய சூரபன்மன், தாய் கூறிய உபாயத்தைக் கேட்டு, எனது தாயானவள் சொன்ன உபாயம் நன்றாம். இவ்வுபாயமே யுத்த களத்தில் இறந்த எல்லோரும் உயிர்பெற்றெழுதற்கு ஏற்ற உபாயம் என்று துணிந்து மகிழ்ச்சி அடைந்தான். (297)

ஆவகை உவகை கொள்ளா அமுத மந்தரம் கொண்டு ஏக
ஏவரை விடுத்தும் என்றே இறைப்பொழுது அவுணர்
தங்கள்
காவலன் முன்னி மாயக் கடு முரண் தேரில் நீங்கித்
தேவியல் அரிமான் ஏற்றுத் திறல் உடை எருத்தம்
புக்கான். (298)

இந்திர ஞாலம் தன்னை இறையவன் விளித்து நீ என்
புந்தியின் விரைந்து சென்று புறக்கடல் மருங்கின் மேவி
அந்தமது அடைந்தோர்க்கு ஆவி அளித்திடும்
அமுதம் கொண்ட
மந்தர கிரியைக் கீண்டு மற்று இவண் கொணர்தி என்றான்.

விழுமிய மாயமான் தேர் வினவி ஓர் கணத்தின் முன்னம்
எழுகடலினுக்கும் அப்பால் இருந்திடு கடலின் சார்போய்
அழிவுறாது அங்கண் நின்ற அமுத மந்தரத்தைக் கொண்டு
வழிபடர் கதியின் மீண்டு மகேந்திரம் புக்கதன்றே. (300)

வேறு

அக்காலையில் இரதம் தரும் அமுதத் தனி வரையின்
மெய்க்கால் வர அந்நாள் வரை வெம்பூசல் இயற்றி
மைக்காலன் மெய் உயிர் உண்டிட மறியும் படை முழுதும்
தொக்கு ஆலமது எழுந்தாலெனத் துண்ணென்று
எழுந்தனவே. (301)

பரியின் தொகை முழுது உய்ந்தன பனி போலிய நெடும்
கைக்
கரியின் தொகை முழுது உய்ந்தன கடுந்தேர்த் தொகை
ஈர்க்கும்
அரியின் தொகை முழுது உய்ந்தன அவுணப் படையாகி
விரியும் தொகை முழுது உய்ந்தன மெய் ஊறு அது நீங்கி.



சூரபன்மன் அமுதமந்தர மலையைக் கொண்டு வருதற்கு யாரை அனுப்பலாமென்று ஆலோசித்து, இந்திரஞாலத் தேரை அனுப்புதலே தகுதியென்று துணிந்து, அத்தேரினின்றும் இறங்கி, தெய்வத் தன்மை பொருந்திய தனது சிங்கேற்றின் வலிய பிடரில் இவர்ந்தான். (298)

ஆவகை = ஆதல் வகை, ஏவரை = எவரை, முன்னி = யோசித்து, தே = தெய்வம், எருத்தம் = பிடர்.

சூரபன்மன் இந்திரஞாலத் தேரை அழைத்து, நீ எனது மனவேகம் போல விரைவில் சென்று புறவாழி என்னும் சமுத்திரத்தின் கரையை அடைந்து இறந்து போனவர்களை உயிர் பெறச் செய்யத் தக்க அமிர்தத்தையுடைய மலையை எடுத்துக் கொண்டு வரக் கடவை என்று பணித்தான். (299)

புந்தி = மனம், அந்தம் = மரணம், கீண்டு = பிடுங்கி எடுத்து.

சிறந்த மாயங்களைச் செய்யவல்ல இந்திரஞாலத் தேர், ஓர் கண நேரத்திற்கு முன்னர் ஏழு கடல்களுக்கும் அப்பாலுள்ள புறவாழியின் மருங்கில் சென்று, அவ்விடத்தில் நின்ற, அமுதமந்தரமென்னும் மலையை அகழ்ந்தெடுத்துக் கொண்டு அதிவேகத்துடன் மகேந்திரபுரத்தினுள் வந்தது. (300)

விழுமிய = சிறந்த, படர்வழி = முன்னர் சென்ற வழி, கதி = வேகம்.

அமுதமந்தர மலை வந்தபொழுது, அம்மலையின் சத்தை அளாவிய காற்று வந்து வீசியது. அதனால் யுத்த ஆரம்ப நாள் தொடக்கம் யுத்தத்தைச் செய்து, அதனால் உயிர்களை யமன் கவர இறந்து கிடந்த சேனைகள் முழுவதும், ஆலகாலங்கள் பலவாய்க் கூடி ஒரு காலத்தில் ஒருங்கு எழுந்தாற்போல விரைந்து விறிட்டெழுந்தன. (301)

மெய் = உடல், பூசல் = யுத்தம், மறியும் = இறந்த, தொக்கு = பலவாய்.

குதிரைச் சேனைகள் முழுவதும், பெரிய நெடிய துதிக்கைகளையுடைய யானைச் சேனைகள் முழுவதும், வேகத்தையுடைய தேர்களை இழுத்துச் செல்லும் சிங்கங்களும், அசுர சைனியமாகிய காலாட்படைகளும், உடல்களின் ஊறுபாடுகள் ஒழிந்து உயிர் பெற்றெழுந்தன. (302)

போலிய = போன்ற, விரியும் = பரந்த, ஊறு = காயம்.

வடிவற்று உடல் அழிந்திட்டிடும் உயிரானவும் மருமம்
அடி கைத்தலம் முடி தோள் முதல் அங்கங்கள் குறைந்தே
முடிவுற்றிடும் உயிரானவும் முளரிக் கனல் உண்ணப்
பொடி பட்டிடும் உயிரானவும் எழுந்திட்டன புவிமேல்.

மிண்டிக் கடிது உயிர் பெற்றெழு வெம் சூர் முதல் அனிகம்
எண் திக்கொடு புவி பாதலம் இரு நாற்கடல் எங்கும்
மண்டிக் ககனத்து ஏழ்வகை உலகங்களும் மல்கி
அண்டத் தனி முடிகாறும் அடைந்திட்டன மிடைந்தே.

மா தண்டம் எழுத் தோமரம் வயிரப்படை வாள் கோல்
கோ தண்டம் முதல் பல்படை கொடு தானவர் அனிகம்
வே தண்டம் எனச் சேண் உயர் வேழம் பரி நிரைகள்
மூ தண்டம் வெடிக்கும்படி முழங்குற்றன அன்றே. (305)

எழுந்தான் வயப்புலி மாமுகன் இரவிப்பகை எழுந்தான்
எழுந்தான் எரிமுக வெய்யவன் இளமைந்தனும் எழுந்தான்
எழுந்தான் அறத்தினைக் காய்பவன் இருபாலரும் எழுந்தார்
எழுந்தார் ஒரு மூவாயிரர் ஏனோர்களும் எழுந்தார். (306)

சூர்க்கின்ற தொல் வடிவம் கொடு துண்ணென்று எழுகின்றோர்
பார்க்கின்றனர் அனிகங்களைப் பகுவாய் திறந்து இடிபோல்
ஆர்க்கின்றனர் தமது ஆடலை அறைகின்றனர் நம்மேல்
போர்க்கின்று வந்தனர் யாரெனப் புகல்கின்றனர் இகலால்.



*யுத்த களத்தில் உடல்கள் அழிந்து அவற்றினின்றும் நீங்கிய உயிர்களும், மார்பு தலை முதலாகிய உறுப்புக்கள் வெட்டுண்டதனால் நீங்கிய உயிர்களும், முருகக் கடவுளின் நயனம் வாக்குகளில் தோன்றிய அக்கினியினால் எரிந்து சாம்பராய் அழிய அவற்றினின்றும் நீங்கிய உயிர்களும் உடல்களுடன் உயிர் பெற்றெழுந்தன.* (303)

வடிவம் = உருவம், மருமம் = மார்பு, முளரி = தாமரை, முகம். பொடி = சாம்பர்.

*உயிர்களைப் பெற்று நெருங்கி எழுந்த சூரபன்மனுடைய சேனைகள் அட்ட திக்குகளிலும், பூமியிலும், பாதலங்களிலும், கடல்களும் ஆகிய எவ்விடங்களிலும், நிறைந்து ஒப்பற்ற இவ் வண்டத்தின் முகடுவரையும் நெருங்கிப் பொருந்தி நின்றன.* (304)

மிண்டி = நெருங்கி, மண்டி = நிறைந்து, மல்கி = நிறைந்து.

*பெரிய தண்டாயுதமும், ஈட்டியும், வச்சிரப்படையும், வாளும், அம்பும், வில்லும் முதலாகச் சொல்லப்படும் படைக்கலங்களைத் தாங்கிய அசுரசேனைகளும், மலைகளைப் போல உயர்ந்த யானைகளும், குதிரைகளும், பழமையுடைய அண்டமும் வெடிக்கும்படி முழங்கின.* (305)

தண்டம் = தண்டாயுதம், எழு = ஈட்டி, தோமரம் = பெருஞ்சவளம், கோல் = அம்பு, கோதண்டம் = வில், வேதண்டம் = மலை.

*சிங்கமுகாசுரனும், பானுகோபனும், அக்கினி முகாசுரனும், வச்சிரவாகுவும், தருமகோபனும், அசுரேந்திரன் அதிசூரன் என்னும் இருபுத்திரரும், ஒப்பற்ற மூவாயிரம் புத்திரரும், மற்றைய வீரர்களும் உயிர் பெற்றெழுந்தார்கள்.* (306)

வயப்புலி = சிங்கம், இரவி = சூரியன், எரி = அக்கினி, காய்தல் = கோபித்தல்.

*தமது பழைய உருவங்களைப் பெற்று எழுந்த இவ் வீரர்கள் உயிர் பெற்றெழுந்த சேனைகளைப் பார்க்கின்றார்கள். தமது அகன்ற வாய்களைத் திறந்து இடி இடித்தாற் போல ஆரவாரஞ் செய்கின்றார்கள். தங்கள் வெற்றிகளைப் புகழ்ந்து பேசுகின்றார்கள். இன்றைக்கு எங்கள் மீது யுத்தத்திற்கு வந்தவர்கள் யாவர் என்று கூறுகின்றார்கள்.* (307)

சூர் = அச்சம், ஆடல் = வெற்றி, அறைதல் = பேசுதல், புகலுதல் = கூறுதல்.

ஈடுற்றிடு சமர் எல்லையில் இடை உற்றிடு படைகள்
நாடுற்று இவண் எடுத்திட்டனர் நறை உற்றிடு தும்பை
சூடுற்றிடு மணி மாமுடிச் சூரன் புடைதன்னில்
கூடுற்றனர் வெம்போர் செயும் குறிப்புற்றனர் அன்றே.

### வேறு

உய்ந்து இவர் யாவரும் ஒல்லை எழுந்தே
அந்தம இல் சேனையொடு ஆர்த்திடு காலை
இந்திர ஞாலம் எனப்படு மான் தேர்
வந்தது தானவர் மன்னவன் முன்னம். (309)

பொற்றையி னோடு பொலன் கெழு மான் தேர்
உற்றதும அன்பினர் உய்ந்து எழுமாறும்
இற்ற பதாதி இரைத்து எழுமாறும்
தெற்றென மாயவள் செம்மல் தெரிந்தான். (310)

மகிழ்ந்தனன் ஆர்த்தனன் வானவர் தம்மை
இகழ்ந்தனன் விம்மிதம் எய்தினன் யாயைப்
புகழ்ந்தனன் மேனி பொடித்தனன் நெஞ்சம்
திகழ்ந்தனன் நன் நகை செய்தனன் அன்றே. (311)

உந்தி நிரப்புறும் உண்டிய தின்றி
முந்தி நிரப்பிடை மூழ்கினன் வல்லே
வெம் திறல் ஆளி வியன் தவிசு ஏறி
இந்திர நல் வளம் எய்தியது ஒத்தான். (312)



அசுரவீரர் யுத்தகளத்தில், முன்னர் நழுவவிடப்பட்ட படைகளைத் தேடி எடுத்துக்கொண்டு, தும்பை மாலையைத் தரித்த அழகிய கிரீடத்தையுடைய சூரபன்மனது பக்கங்களில் நின்று, முருகக் கடவுளுடன் போரைச் செய்யும் நோக்கம் கொண்டார்கள். (308)

ஈடு = சமம், நறை = தேன், மா = அழகு.

உயிர் பெற்றெழுந்த வீரர் அனைவரும் அளவில்லாத சேனைகளுடன் சேர்ந்து ஆரவாரித்துக்கொண்டு நின்றபொழுது, இந்திரஞாலம் என்று சொல்லப்படும் பெயரையுடைய தேர் சூரபன்மனுடைய முன்னிலையில் வந்து சேர்ந்தது. (309)

ஒல்லை = விரைவு, உய்ந்து = உயிர்பெற்று.

சூரபன்மன் போன்மயமாகிய இந்திரஞாலத் தேர் அமுத மலையைக் கொண்டு தன் முன்னிலையில் வந்து சேர்ந்த தன்மையையும், அன்புடைய சிங்கமுகனாகிய வீரர் அனைவரும் உயிர்பெற்றெழுந்த தன்மையையும், இறந்த சேனைகள் உயிர்பெற்றெழுந்து ஆரவாரித்துக் கொண்டு நிற்கும் தன்மையையும் கண்டான். (310)

போற்றை = மலை, போலன் = போன், இற்ற = இறந்த, பதாதி = சேனை, செம்மல் = புதல்வன்.

கண்ட சூரபன்மன் மகிழ்ச்சியடைந்தான். ஆரவாரித்தான். தேவர்களை இழித்துக் கூறினான். தன் தாயாகிய மாயவளை மெச்சினான். உடல்முழுவதும் உரோமம் சிலிர்க்கப்பெற்றான். உவகைச் சிரிப்புச் சிரித்தான். (311)

விம்மிதம் = அதிசயம், யாய் = தாய், திகழ்தல் = மலர்தல், நன் நகை = உவகை நகை.

வயிற்றை நிரப்புதற்குரிய உணவு கிடையாமல் வறுமையில் அழுந்திடக் கிடந்த தரித்திரன் ஒருவன், திடீரெனச் சிறந்த இந்திர பாக்கியத்தைப் பெற்றுச் சிங்காசனத்தில் ஏறி, இந்திரலோகத்தை அரசாட்சி செய்த மகிழ்ச்சியைப் போன்ற பெருமகிழ்ச்சியைச் சூரபன்மன் அடைந்தான். (312)

உந்தி = வயிறு, (2) நிரப்பு = வறுமை, ஆளி = சிங்கம், வளம் = செல்வம்.

ஓங்கிய சென்னி உயர்ந்தன மொய்ம்பு
வீங்கியதால் உடல் மிக்கு மதர்ப்புத்
தேங்கிய சிந்தை சிலிர்த்த உரோமம்
ஆங்கவன் எய்தியது ஆர் அறைகிற்பார். (313)

வஞ்சனி தந்திடு மைந்தன் இவ்வாற்றால்
நெஞ்சம் மகிழ்ந்து அவண் நின்றிடு காலை
நஞ்சம் எழுந்திடு நாள் கொல் இது என்றே
அஞ்சி நடுங்கினர் அண்டர்கள் எல்லாம். (314)

பொன் நகர் வாழ்க்கை புவித்திசை வாழ்க்கை
பின் உறுகின்ற பெரும்பத வாழ்க்கை
என் நகர் வாழ்க்கையும் எய்திய இன்னே
ஒன்னலர் கொல்லுமுன் ஓடுதும் என்றார். (315)

ஊர்ந்திடும் ஊர்திகள் ஓர் புடை தம்பால்
சார்ந்தவர் ஓர் புடை தாம் ஒரு பாலாய்
சேர்ந்திடு கைப்படை சிந்தி விண்ணோர்கள்
பேர்ந்து இரிகின்றனர் பின்னது நோக்கார். (316)

கிள்ளை புறு மயில் கேழ்கிளர் அன்னம்
பிள்ளை மணிகுயில் பேர் இசை ஆந்தை
கள் உணும் வண்டு கரண்டம் அது ஆதிப்
புள் உருவம் கொடு வானவர் போனார். (317)



அவன் இறுமாப்பு அடைந்தான். அதனால் அவனது சிரசு உயர்ந்தது. புயங்கள் கிளர்ந்தன. உடல் பூரித்தது. உரோமங்கள் சிலிர்த்தன. இவ்வாறு சூரபன்மன் அடைந்த மகிழ்ச்சி இத்தன்மைத்தென்று யாவர் கூற வல்லவர். (313)

மொய்ம்பு=புயம், வீங்கியது=பூரித்தது, மதர்ப்பு=இறுமாப்பு.

மாயவள் பெற்ற புதல்வனாகிய சூரபன்மன் இவ்வாறு மன மகிழ்ச்சி கொண்டு நின்ற பொழுது, தேவர்கள் எல்லோரும் ஆலகாலம் பாற்கடலில் நின்றும் தோன்றிய நாள் இதுவாயிருக்க வேண்டும் என்று கூறி, அச்சம் கொண்டு மனம் நடுங்கினார்கள். (314)

வஞ்சனி=வஞ்சத்தையுடையவள், மாயை.

அஞ்சிய தேவர்கள், சுவர்க்க உலக வாழ்வும், பூமியின் திக்கு நகரங்களின் வாழ்வுகளும், பெரும் பத வாழ்க்கைகளும் இப்பொழுதே கிடைத்து விட்டன. அதெல்லாம் வேண்டாம். பகைவராகிய அசுரர் எங்களைக் கொல்லுதற்குமுன் நாம் ஓடிப் பிழைப்போம் என்றார்கள். (315)

இன்னே=இப்பொழுதே, ஒன்னலர்=பகைவர்.

தேவர்கள், தாம் ஏறிச் செல்லும் வாகனங்கள் ஓர் பக்கத்திலும், தாங்கள் வேறோர் பக்கத்திலுமாகி, தங்கள் கைகளில் உள்ள படைக்கலங்களையும் எறிந்து விட்டு, பின்னுக்கும் திரும்பிப் பாராதவராய் ஓடுகின்றார்கள். (316)

புடை=பக்கம், பேர்ந்து=நீங்கி, இரிகின்றனர்=ஓடுகின்றனர்.

தேவர்கள், கிளியும், புறுவும், அன்னமும், காகமும், குயிலும், ஆந்தையும், வண்டும், நீர்க்காக்கையும் முதலாகிய பறவைகளின் வடிவங்களை எடுத்துக் கொண்டு பறந்து போனார்கள். (317)

கிள்ளை=கிளி, கேழ்=நிறம், பிள்ளை=காக்கை, மணி=கருமை,
கள்=தேன், கரண்டம்=நீர்க்காக்கை, ஆதி=முதலாகிய,
புள்=பறவை.

அங்கது நோக்கி அடல் கணவீரர்
மங்கிய தானையும் மாண்டுளர் யாரும்
இங்கெழுகின்றனர் யாம் இவண் வீந்தாம்
சங்கை இல் என்று தளர்ந்து அலைவுற்றார். (318)

இலக்கரும் எண்மரும் ஏந்தலும் நோக்கி
அலக்கணும் அச்சமும் அற்புத நீரும்
கலக்கமும் வெய்ய கடும் சினமும் கொண்டு
உலைக்கனல் அன்ன உயிர்ப்பொடு நின்றார். (319)

வேறு

வென்றி கொண்ட வேற்குமரன் இவ்விளைவெலாம் நோக்கி
நின்ற ஒன்னலன் சூழ்ச்சியும் வலவை சொல் நெறியும்
குன்றின் வன்மையும் உய்ந்தெழு பரிசனர் குழுவும்
நன்று நன்றெனக் கை எறிந்து அழல் எழ நகைத்தான்.

ஆனகாலையில் அரிமுகன் அலரிதன் பகைஞன்
ஏனை மைந்தர்கள் அறத்தினை வெகுண்டிடும் ஏந்தல்
சேனை காவலர் யாவரும் சூரன்முன் சென்று
மான வீரமோடு இறைஞ்சி நின்று இனையன வகுப்பார்.

எந்தை நீ இவண் நிற்குதி யாமெலாம் ஏகிக்
கந்தவேளுடன் அவன்படை வீரரைக் கடிந்து
சிந்தர் ஆகிய பூதர் தம் தொகையையும் செகுத்து
வந்து நின் அடி வணங்குதும் வல் விரைந்து என்றார்.



வலிய பூதகணத்தலைவர்கள், இறந்துபோன அசுரசேனைகளும் அசுர வீரர்களும், இங்கே உயிர்பெற்றெழுகின்றனர். ஆதலின் அவர்களால் நாங்கள் இன்றைக்கு இறந்துவிடுவோம். இதற்குச் சந்தேகமில்லை என்று சொல்லி மனஞ்சோர்ந்து வருந்தினார்கள். (318)

அடல் = வலிமை, மங்கிய = இறந்த, வீதல் = இறத்தல், சங்கை = சந்தேகம், அலைவு = துன்பம்.

அசுரர் உயிர்பெற்றதனை இலக்கர்களும், எண்மர்களும், வீரவாகுதேவரும் பார்த்து, மனவருத்தத்தையும், பயங்கரத்தையும், அதிசயத்தையும், சஞ்சலத்தையும், கொடுங்கோபத்தையும் உடையவராகி, உலைமுகத்து அக்கினியைப் போல வெப்பமான பெருமூச்செறிந்துகொண்டு நின்றார்கள். (319)

அலக்கண் = மனவருத்தம், உலைக்கனல் = கொல்லன் உலைமுகத்தக்கினி.

வெற்றி பொருந்திய வேற்படையையுடைய முருகக் கடவுள், சூரபன்மன்கொண்ட தந்திரமும், மாயவள் கூறிய உபாயமும், அமுதமலையின் திறமையும், உயிர்பெற்றெழுந்த அசுரவீரர் கூட்டமும் நன்றாகும் எனக்கூறி, கைகளைப் புடைத்து அக்கினி தோன்றச் சிரித்தருளினார். (320)

விளைவு = நிகழ்ச்சி, வலவை = வல்லவள், மாயை. பரிசனர் = உறவினர்.

அச்சமயத்தில் சிங்கமுகாசுரனும், பானுகோபனும், மற்றைய புதல்வரும், தருமகோபனும், படைத்தலைவர்களும், சூரபன்மனுடைய முன்னிலையில போய், அபிமானத்தோடு கூடிய வீரத்துடன் அவனை வணங்கி நின்று பின்வருமாறு கூறுவாராயினர். (321)

மானம் = அபிமானம், அலரி = சூரியன்.

எமதரசே! தேவரீர் இவ்விடத்தில் நிற்கக்கடவீர். நாமனைவரும் சென்று, கந்தனையும் அவனுடைய சேனைவீரர்களையும் அழித்து, பூதர் தொகையையும் கொன்று மீண்டு வந்து தேவரீருடைய பாதங்களை வணங்குவோம் என்று கூறினார்கள். (322)

கடிந்து = அழித்து, சிந்தர் = குறள்வடிவினர், செகுத்து = கொன்று.

கொற்ற வீரர்கள் இவ்வகை உரைத்தலும் கொடியோன்
மற்று இவ்வாசகம் நன்று எனைப் போற்றுவான் வந்தீர்
பற்றலன் பெருவன்மையும் வீரமும் படுத்து
வெற்றி இன்றெனக்கு அருளுதிரால் என விடுத்தான்.

விடுத்த காலையில் விடாது சூழ் அனிகங்கள் விரவி
அடுத்து வந்திடப் பொள்ளென ஏகியே ஆர்த்துப்
பிடித்த பல்வகைப் படைகளும் உரும் எனப் பெய்து
வடித்த வேற்படை நம்பியை அன்னவர் வளைத்தார். (324)

தீங் கனற் பெரும் கடவுள்பால் செறி இருள் தொகைபோல்
வாங்கு விற் கரத்து ஐயனை அவுணர்கள் வளைப்ப
ஏங்கலுற்றனர் பாரிடர் ஏனையோர் எம்மால்
தாங்குதற்கு அரிது இப்பெரும் படை எனத் தளர்ந்தார்.

விறல் உடைப் பல் தானையும் வெய்யவர் தொகையும்
நொறில் உடைக் கதி கொண்டு சூழ்வுற்றது நோக்கி
அறுமுகத் தனிப் பண்ணவன் உயிர்த்தொகை அனைத்தும்
இறுதியைப் புரி கடவுள் மாப்படையினை எடுத்தான். (326)

அங்கையில் கொடு சிந்தையால் வழிபடல் ஆற்றிச்
சிங்க மாமுகன் ஆதியாம் அவுணர்தம் திறத்தைச்
சங்கை இன்றியே நின்றிடு தானைகள் தம்மை
இங்கு வல்லையில் அடுதியால் என விடுத்திட்டான். (327)



சூரபன்மன் அவர்களை நோக்கி என்னைக் காக்கும்படி உயிர் பெற்றெழுந்த உறவினர்களே! நீவிர் கூறியவாறு என் பகைவனாகிய கந்தனுடைய போராற்றலையும், பெருவீரத்தையும், அழித்து எனக்கு வெற்றியைத் தரக்கடவீர்கள் என்று கூறி அனுப்பினான். (323)

பற்றலன் = பகைவன், படுத்து = அழித்து.

உடனே அசுர வீரர்கள் தம்மைச் சூழ்ந்து வர விரைந்து சென்று கைகளில் தாங்கிய பலவகைப்பட்ட ஆயுதங்களையும் இடியிடித்தாற் போலச் செலுத்திக்கொண்டு, வேற்படையையுடைய சுப்பிரமணியப் பெருமானைச் சூழ்ந்தார்கள். (324)

அனிகம் = சேனை, உரும் = இடியேறு, வடித்த = கூரிய.

எரிகின்ற அக்கினி தேவனுக்குப் பக்கங்களில் மொய்க்கின்ற இருளானது, உடன் அழிதல் போல, அழியும் நியதியுடையராய், அசுரசேனைகள் சுப்பிரமணியப் பெருமானைச் சூழ்ந்தார்கள். அதனைக் கண்டு பூதர்கள் ஏக்கம் கொண்டார்கள். வீரர்கள் இந்த அசுர சேனைகளின் தாக்கம் எங்களால் சகித்தற்கரியது என்று கூறி மனஞ் சோர்ந்தார்கள். (325)

தீ = எரிகின்ற, வாங்கு = வளைத்த.

அப்பொழுது ஒப்பற்ற அறுமுகப்பெருமான், அசுர சேனைகளும் அசுர வீரர்களும், வேகமான நடையுடன் வந்து தம்மை வளைந்து கொண்ட தன்மையைப் பார்த்தருளிச் சர்வ ஆன்மாக்களையும் அழிவு செய்கின்ற மகா உருத்திர மூர்த்தியின் படைக் கலத்தைத் திருக்கரத்தில் கொண்டருளினார். (326)

நொறில் = விரைவு, கதி = நடை.

முருகக் கடவுள் அப்படையை அழகிய திருக்கரத்தில் தாங்கி, அதற்கு மனோபாவனையாய் அர்ச்சனை செய்து, இவ்விடத்தில் நிற்கின்ற சிங்கமுகன் முதலாகிய வீரர்களையும், சூழ்ந்து நிற்கின்ற சேனைகளையும் விரைவில் அழிக்கக்கடவாய் என்று கூறிவிட்டார். (327)

அங்கை = அழகிய கை, திறம் = மிகுதி, சங்கை = சந்தேகம்.

விடுத்த காலையில் கட்செவி நிரைகளும் விடமும்
இடிக் குழாங்களும் உருத்திரர் உருக்களும் எரியும்
கடற் பெரும் கணத் தொகுதியும் அளவிலாக் கடவுட்
படைக்கலங்களுமாய் விரிந்தது சிவன் படையே. (328)

இன்ன தன்மையால் அரன்படை மூதண்டம் எங்கும்
துன்னி ஆர்த்து எழீஇத் துண்ணெனச் சென்று சூழ்வுற்று
முன்னர் உய்ந்து எழும் அவுணர் தம் படையெலாம் முருக்கி
ஒன்னலன் தமர் யாரையும் ஒருங்கு கொன்றது வே. (329)

முந்து வெய்ய சூர்ப் பரிசனத் தொகை எலாம் முருக்கி
இந்திரப் பெரும் ஞாலமாம் தேர்மிசை இருந்த
மந்தரப் பெரும் கிரியினைத் துகள் எழ மாய்த்துக்
கந்தவேள் புடை மீண்டது சிவன் படைக்கலமே. (330)

அரிமுகத்தவன் ஆதவன்தனை முனம் அழன்றோன்
எரிமுகத்தவன் வச்சிர மொய்ம்பன் நூற்றிருவர்
முரண் மிகுத்த மூவாயிரர் அறப்பகை முதலோர்
விரிகடல் படை வெற்பொடு முடிந்து அவண் வீழ்ந்தார்.

தன்மை அங்கவை யாவையும் கண்டனன் தளர்ந்தான்
வன்மை நீங்கினன் கவன்றனன் இரங்கி மெய் மறந்தான்
புன்மை யாயினன் உயிர்த்தனன் செயிர்த்தனன் புலர்ந்தான்
தொன்மை போலவே தமித்தனன் துணை இலாச் சூரன்,



அச் சிவன் படையானது, சர்ப்பங்களும், ஆலசாலமும், இடிக் கூட்டமும், உருத்திர மூர்த்த வடிவங்களும், அக்கினியும், கடல் போற் பரந்த பூதர் கூட்டமும், அளவற்ற தெய்வப் படைக்கலங்களுமாகத் தோன்றிப் பெருகியது. (328)

கட்செவி = சர்ப்பம், கணம் = பிசாசு.

இத்தன்மையுடன் இவ்வண்டத்தின் இடங்கள் எங்கும் முழங்கிக் கொண்டு விரைந்து போய் சூரபன்மனது அசுர சேனைகளை எல்லாம் அழிவு செய்து, அவனது உறவினராகிய சிங்கமுகன் முதலாகிய யாவரையும் ஒருங்கு அழித்தது. (329)

முருக்கி = அழித்து, ஒன்னலன் = பகைவன், தமர் = உறவினர்.

சிவப்படைக்கலம், முன்னர் சூரபன்மனது அசுர சேனைகளை அழிவு செய்து, பின்னர் இந்திர ஞாலம் எனப்படும் தேரின் மீதிருந்த அமுத மலையையும் துகளாய்ச் சிதைத்துத் தன்னைச் செலுத்திய முருகக் கடவுள் இடத்து மீண்டும் வந்து சேர்ந்தது. (330)

முந்து = முன்னர், பரிசனம் = சூழ்வோர்.

சிங்கமுகாசுரனும், பானுகோபனும், அக்கினி முகாசுரனும், வச்சிரவாகுவும், நூற்றிரு புதல்வர்களும், மூவாயிரம் புதல்வர்களும் தருமகோபனும் முதலாகிய அசுரத் தலைவர்கள் அனைவரும் கடல் போலப் பரந்த அசுர சேனைகளுடனும் அமுத மலையுடனும் ஒரு சேர அழிந்து வீழ்ந்தார்கள். (331)

ஆதவன் = சூரியன், மொய்ம்பன் = புயத்தையுடையவன்.

சூரபன்மன் பழமை போலத் தனித்தவனாய், மனஞ் சோர்ந்து, வலிமையிழந்து, கவலை கொண்டு, சிறுமையடைந்து, பெருமூச் செறிந்து, கோபங் கொண்டு, உடல் தளர்ச்சியுற்றான். (332)

கவன்றனன் = கவலை கொண்டான், புன்மை = சிறுமை,
செயிர் = கோபம், புலர்ந்தான் = தளர்ச்சியுற்றான்.

கண்டகன் படை முற்று ஒருங்கு இறந்தது காணு
எண் தொகைப்படு பூதரும் ஏனை வீரர்களும்
முண்டகம் தனில் இருந்திடு புங்கவன் முதலாம்
அண்டர் யாவரும் துயர் ஒரீஇ உவகை பெற்று ஆர்த்தார்.

அழுந்தும் ஆர்இருள் ஒருவி விண்மிசைதனில் அடைவோர்
கழிந்ததோர் இடையூற்றினால் மீட்டும் அக்கதியில்
விழுந்ததே எனத் துன்பொடு நின்றனன் விளிவுற்று
எழுந்த தானையை இழந்திடும் அவுணருக்கு இறைவன்.

அனைய தன்மையில் நின்றிடும் அவுணர்கோன் ஆற்றச்
சினமது எய்தி என்படையெலாம் சிதைத்த பாலனையும்
தனிமை செய்து பின் வெல்வனென்று உளங்கொடு தழற்கண்
முனைவன் நல்கிய தேரினை நோக்கியே மொழிவான். (335)

கொச்சகத்து இயல் குதலைவாய் மதலைபாற் குழீஇய
வச்சிரத்து எயிறுடைய வெம் பூதரை வயின் சூழ்
கைச்சிலைத் திறல் வீரரைக் கவர்ந்து போய் அண்டத்து
உச்சியில் கொடு வைத்தனை இருத்தி என்றுரைத்தான்.

உரைத்தகாலையில் நன்றென வினவியே ஓடித்
திருத்தகும் திறல் வாகுவை முதலினோர் திறத்தைக்
கிருத்திமப் பெரும் தானையைக் கிளையொடும் வாரிக்
கருத்தை மாமயல் செய்தது கைதவன் கடுந்தேர். (337)



பூதர்களும், வீரவாகு முதலிய வீரர்களும், பிரமா முதலிய தேவர்களும், கீழ்மகனாகிய சூரபன்மனுடைய சேனைகளும், சிங்க முகனாகிய வீரர்களும் ஒருங்கு அழிந்த தன்மையைக் கண்டு கவலை நீங்கிக் களிப்புற்று ஆரவாரஞ் செய்தார்கள். (333)

கண்டகன் = கீழ்மகன், முண்டகம் = தாமரை,
புங்கவன் = தேவன், ஒரீஇ = நீங்கி.

வருந்தும் நரகத்துன்பத்தை விட்டு நீங்கி சுவர்க்க இன்பத்தைப் பெற்ற பக்குவமுடையோர், எஞ்சிநின்ற பிராரத்த தீவினையின் முனைப்பினால், பின்னரும் நரகத்தை யடைந்து துன்பம் எய்தியது போல, முன்னர் சேனைகள் இறந்ததனால் துன்புற்று, அவைகள் உயிர்பெற்றெழுந்ததனால் இன்புற்று, முருகக் கடவுள் அழித்ததனால் பின்னரும் அவை இறந்துபோகத் துன்பத்தையே உடையவனாய்ச் சூரபன்மன் நின்றான். (334)

அழுந்தும் = துன்பம் அனுபவிக்கும், ஆர் இருள் = அரிய இருளாகிய நரகம், ஒருவி = நீங்கி, கழிந்த = எஞ்சிய, விளிவு = இறப்பு.

என்னைத் தனித்தவனாக்கிய சிவகுமாரனையும் தனித்தவனாக்கி, பின்னர் வெற்றியடையக் கடவேன் என்று சூரபன்மன் தீர்மானித்து, சிவபிரான் கொடுத்தருளிய தனது இந்திர ஞாலத் தேரைப் பார்த்துக் கட்டளை யிடுவானாயினான். (335)

தழற்கண் முனைவன் = அக்கினிக் கண்ணையுடைய சிவபிரான்.

மதலை வார்த்தையைப் பேசும் வாயினையுடைய சிவகுமாரன் பக்கத்தில் நிற்கின்ற பூதர்களையும், போரில் வலிய வீரர்களையும் எடுத்துக் கொண்டு சென்று அண்ட முகட்டில் வைத்துக் கொண்டு இருக்கக் கடவை என்று கட்டளை செய்தான். (336)

கோச்சை = திருந்தாமை, குதலை = திருந்தா மென் மொழி, மழலை.
வச்சிரம் = வயிரம், எயிறு = தந்தம், வயின் = இடம்.

வஞ்சகனாகிய சூரபன்மனது கொடுமையை விளக்கத்தக்க இந்திர ஞாலத் தேரானது, அவனுடைய ஆணையின் படி வீரவாகு முதலிய வீரர்களையும், பரந்த பூதசேனைகளையும் எடுத்துக்கொண்டு சென்று அவர்களுடைய உணர்ச்சிகளை மயங்கச் செய்தது. (337)

திருத்தகு = திருத்தம் தகு, திருத்தம் = தேர்ச்சி, கிருத்திமர் = பூதர்,
கிளை = கூட்டம், கைதவன் = வஞ்சகன்.

கையர் தன்மையில் கடற்படை முழுவதும் கவர்ந்து
மையல் சிந்தையில் செய்து தன் வயினிடைத் தாங்கி
ஒய்யெனச் சென்று மூதண்டகோளகை உளிப் போய்
வெய்யவன் பணி ஆற்றி ஆண்டிருந்தது வியன் தேர்.

நிமலன் அவ்வழித் தானை அம் பெருங்கடல் நீங்கத்
தமியன் நின்றனன் ஆங்கது தகுவர்கோன் காணு
நமது தேர்வலி நன்றென உவகையால் நகைத்தான்
அமரர் அச்செயல் நோக்கியே பின்னரும் அயர்ந்தார்.

சூர் இடத்துறு சூழ்ச்சியும் துணைவர்கள் தம்மைப்
பாரிடத்தொடு முகந்து எழீஇ மாயையில் படர்ந்த
தேரிடத்து இயல்வன்மையும் ஆங்ஙனம் தெரிந்தான்
நேரிடப் பிறர் இன்றியே தமியனும் நெடியோன். (340)

கண்டுசீறி ஓர்கார்முகம் வாங்கியே கடிது ஓர்
திண்திறற் கணை பூட்டி நம் சேனையைப் பற்றி
அண்ட கோளகை புக்குறும் அடு முரண் தேரைக்
கொண்டு வல்லையின் வருகென விடுத்தனன் குமரன்.(341)

விடும் தனிக் கணை வேல்எனச் சென்று வில்வீசி
இடம் திகழ்ந்திடும் ஏழ்வகை உலகமும் இமைப்பிற்
கடந்து மற்றுள பதங்களும் நீங்கி ஓர் கணத்தில்
தொடர்ந்து மூதண்ட கோளகை புகுந்தது துன்னி. (342)



கீழோர் பிறர் பொருளை அபகரித்துச் செல்லுதல் போல, முருகக் கடவுளின் கடலபோலப் பரந்த சைனியம் முழுவதையும் வாரி எடுத்து, அவர்கட்கு மயக்கத்தை விளைத்து, விரைந்து சென்று அண்ட முகட்டை அடைந்து, சூரபன்மனது கட்டளையைச் செய்து கொண்டு அவ்விடத்திற்றானே தங்கியது. (338)

கையர் = கீழோர், வயின் = வயிறு, வெய்யவன் = கொடியவன்.

அப்பொழுது சுப்பிரமணியப் பெருமான் தனித்தவராக நின்றருளினர். அத்தன்மையைச் சூரபன்மன் கண்டு நமது தேரின் வன்மை சிறந்ததேயாம் என்று வியந்து மகிழ்ந்து சிரித்தான். தேவர்கள் இரதத்தின் செயலைப் பார்த்துப் பின்னரும் சோர்ந்தார்கள். (339)

வழி = பொழுது, தகுவர் = அசுரர்.

முழுமுதல்வராகிய சுப்பிரமணியப் பெருமான் தம்மை வெல்லும்படி சூரபன்மன் கொண்ட உபாயத்தையும், பூதசைனியங்களுடன் துணைவர்களாகிய இலக்கத்தொன்பதின்மரையும், மாயையின் வலிமையால் கொண்டு சென்று அண்டமுகட்டில் இருக்கும் இந்திர ஞாலத் தேரின் வல்லபத்தையும் நோக்கியருளினர். (340)

நேர் = ஒப்பு, நெடுமை = பெருமை.

குமாரக் கடவுள் விரைவில் ஒப்பற்ற தமது வில்லை வளைத்து, வலியமைந்த ஓர் பாணத்தை அதனிடத்துச் சந்தித்து, நமது சேனைகளை எடுத்துக் கொண்டு அண்டமுகட்டில் இருக்கின்ற இந்திர ஞாலத் தேரைப் பிடித்துக்கொண்டு வருதி என்று கூறி விடுத்தருளினர். (341)

கார்முகம் = வில்.

குமாரக் கடவுள் விடுத்த ஒப்பற்ற பாணம், வேற் படையைப் போல் ஒளியை வீசிக் கொண்டு போய், எழுவகை உலகங்களையும் இமைப் பொழுதிற் கடந்து சென்று, அவற்றின் மேலுள்ள உலகங்களையும் தாண்டிச் சென்று, அண்ட முகட்டில் நின்ற இந்திர ஞாலத் தேரைக் கிட்டியது. (342)

வில் = ஒளி, இடம் = தூரம், பதம் = பதவி, உலகம்.

துன்னி வெஞ்சரம் மாயமான் தேர் வலி தொலைச்சி
அன்னதைக் கொணர்ந்து ஒல்லையின் மீண்டுளது அம்மா
மின்னுலாய் நிமிர் எழிலியை விண்ணினும் பற்றி
இந்நிலத்தினில் கொடுவரும் மாருதத்து இயல்போல்.

வேறு

வெம் திறல் நெடும் கணை மீண்டு ஞாலமேல்
இந்திர ஞாலமாம் இரதத்தைக் கொடு
கொந்து அவிழ் மாலை வேற் குமரன்தன் முனம்
வந்தது வானவர் வழுத்தி ஆர்ப்பவே. (344)

முப்புரம் முடித்தவன் முருகன் தன் கணை
இப்புவி வருதலும் இலக்கத் தெண்மரும்
ஒப்பரும் இளவலும் ஒல் என் பூதரும்
குப்புறல் உற்றனர் கொடியன் தேரினும். (345)

குதித்தனர் புடவியில் குமரவேள் இரு
பதத் திருமலர் தனைப் பணிந்து பன்முறை
துதித்தனர் புடையராய்த் துன்னி நின்றனர்
கதித்திடு பேர் அருள் கடலின் மூழ்கியே. (346)

ஆவதோர் காலையில் அகிலம் யாவுமாம்
மூவிரு முகனுடை முக்கணன் மகன்
வாவு இயல் வனப்புடை மாயத்தேர் தெரிஇத்
தேவர்கள் பரசுற இனைய செப்புவான். (347)



அப் பாணம் மின்னலைக் கான்றுகொண்டு நின்ற மேகத்தை, ஆகாயத்தினின்றும் இப்பூவுலகத்திற்குக் கொண்டுவந்த காற்றைப் போல, இந்திர ஞாலத் தேரினது ஆற்றலையும் கெடுத்து, வீரரையும் தெளிவு பெறச்செய்து, அதனை விரைவில் பூமிக்குக் கொண்டு வந்தது. (343)

தொலைச்சி = கெடுத்து, எழிலி = மேகம், மாருதம் = வாயு.

வலிமையையுடைய பாணம், தேவர்கள் துதித்து ஆரவாரிக்கும்படி இந்திர ஞாலம் என்னும் தேரைப் பிடித்துக்கொண்டு, கடப்ப மலர் மாலையைத் தரித்த, வேற்படையையுடைய முருகக் கடவுளின் சந்நிதியில் வந்து சேர்ந்தது. (344)

கொந்து = கொத்து, வழுத்தி = துதித்து.

முப்புரங்களையும் அழித்த சிவபிரானது குமாரராகிய முருகப் பெருமானது அம்பு, வீரரையுடைய தேரினை இழுத்துக்கொண்டு, முருகக் கடவுளின் முன்னிலையில் வர அத்தேரினின்றும் இலக்கத் தெட்டு வீரர்களும் வீரவாகு தேவரும் ஒல்லென்று ஆரவாரித்த பூதர்களும் பூமியிற் குதித்தார்கள். (345)

புரம் = நகரம், குப்புறல் = குதித்தல்.

பூமியிற் குதித்தவர்களாகிய வீரவாகு தேவர் முதலாயினோர் முருகக்கடவுளின் திருவடி மலர்களைப் பலமுறை வணங்கி, பெரிய திருவருட் சமுத்திரத்துள் அமிழ்ந்தித் தோத்திரம் செய்துகொண்டு அவருடைய இரு மருங்கிலும் நெருங்கி நின்றார்கள். (346)

புடவி = பூமி, புடை = பக்கம், கதித்திடு = சிறந்த.

ஆறு திருவதனங்களையுடைய சிவகுமாரராம் முருகக் கடவுள் அழகு மிக்க மாயா சாதனையையுடைய, இந்திர ஞாலத் தேரைப் பார்த்து தேவர்கள் தம்மைக் கொண்டாடும்படி பின்வருமாறு கூற வாராயினர். (347)

வாவுதல் = தாவுதல், வனப்பு = அழகு, பரசுதல் = துதித்தல்.

தொல்லையில் வரம் பெறு சூரன் தன்புடை
செல்லலை ஆங்கவன் முடிகை திண்ணமால்
மல்லல் அம் திருவுடை மாயத்தேரை நீ
நில் இவண் என்றனன் நிகரில் ஆணையான். (348)

ஆண்டு அது வினவுறு அவுணர்கோன் புடை
மீண்டிடல் அஞ்சியே மேலை வன்மை போய்
மாண்டிடல் பிறப்பிலான் மதலை மாடுறப்
பாண்டில் அம் தேர் அது பணியில் நின்றதே. (349)

அண்டம் அது அடைந்த தேர் ஐயன் வாளியால்
மண்டலம் இழிந்து தன் மருங்குறுததும்
எண்தகு பூதரும் யாரும் மீண்டதும்
கண்டனன் அவுணர்கோன் கனலில் சீறினான். (350)

அன்னது காண்டலும் அவுணன் ஆங்கொரு
கோன் நெடும் சிலையினைக் குனித்து வல்லையில்
பன்னிரு கரமுடைப் பண்ணவன் மிசை
மின் நிகர் பகழிகள் மீட்டும் வீசினான். (351)

மாசறு கங்கைதன் மதலை அவ்வழி
காய் சினம் கொண்டு ஒரு கார் முகம் வளை இ
ஆசுக மாரி பெய்து அவுணர் கோமகன்
வீசிய கணையெலாம் விலக்கினான் அரோ. (352)



ஒப்பற்ற திறமையுடைய முருகக் கடவுள், மிகுந்த அழகும் மாயவல்லபமும் உடைய இரதமே! நீ முன்னை நாளில் உன்னைத் தவத்தின் பேறாகப் பெற்றுக் கொண்ட சூரபன்மனிடத்து இனிச் செல்லாதே. அச் சூரபன்மன் நம்மால் இறந்து போதல் நிச்சயம். ஆதலால் நமது பக்கத்தில் நிற்கக்கடவையென்று பணித்தருளினார். (348)

செல்லலை = செல்லாதே, முடிகை = இறத்தல், மல்லல் = மிகுதி.

அழகிய இந்திர ஞாலத் தேரானது முருகப் பெருமான் பணியைக் கேட்டு, சூரபன்மனிடத்தில் திரும்பிச் செல்வதற்கு அச்சமுற்று மாயா சக்திகள் ஒழியப் பெற்று, இறத்தல் பிறத்தல் ஆகிய இயல்புகள் ஒழிந்த சிவபிரானது திருக்குமாரராம் முருகப் பெருமான் பக்கத்தில் நின்றது. (349)

பாண்டில் = உருள், பணி = ஆணை.

அண்ட முகட்டை அடைந்த தனது தேர் ஆறுமுகப் பிரானுடைய பாணத்தினால் பூமியில் இழுத்துக் கொண்டு வரப்பட்டதும், அது தன்னிடத்துக்குத் திரும்பி வாராத்தன்மையையும், வலிமைமிக்க பூதர்களும் வீரர்களும் தேரினின்றும் தப்பிக்கொண்ட தன்மையையும் சூரபன்மன் கண்டு அக்கினி போலக் கோபமுற்றான். (350)

சூரபன்மன் விரைவில் அச்சத்தைத் தரும் உயர்ந்த வில்லை வளைத்து, மின்னலைப் போல வேகத்தையுடைய பல பாணங்களைத் தொடுத்துப் பன்னிரு திருக்கரங்களையுடைய முருகக் கடவுள் மீது பின்னரும் செலுத்தினான். (351)

கோன் = அச்சம்.

குற்றமற்ற கங்கையின் புதல்வராகிய சரவணபவனும், பெருங்கோபத்தைப் பொருந்தி, ஒரு வில்லை வளைத்து அம்பு மழையைச் சொரிந்து சூரபன்மன், செலுத்திய அம்புகளெல்லாவற்றையும் நீக்கியருளினார். (352)

வழி = பொழுது.

கையனும் அத்துணை காய்சினம் கொளீஇ
ஒய்யென எந்தை தேர் உய்க்கும் வன்மையோன்
மெய் இடம் எங்கணும் வெளியுறு வகை
செய்யன பகழிகள் செறித்துப் போர் செய்தான். (353)

பொருந்தலன் கணைபடப் புலம்பிக் காற்றினோன்
வருந்தினன் மயங்கினன் மாக்கள் தூண்டலன்
இருந்தனன் வறிது அவன் இயற்கை யாவையும்
தெரிந்தனன் குமரவேள் அருளின் செய்கையான். (354)

கண்டிடு முருகவேள் கணைகள் ஆயிரம்
விண் தொடர் செலவினால் விடுத்து வெய்யசூர்
கொண்டிடு சிலையினைக் குறைத்துப் பல்பெருந்
துண்டமது ஆக்கினான் அமரர் துள்ளவே. (355)

வேறு

கைச்சிலை முரியச் சூரன் கண்ணுதற் பெருமான் தந்த
முச்சிகைப் படை ஒன்றேந்தி முடங்குளை ஊர்தி தன்னை
உச்சியில் நீபம் சூடும் உலகுடை ஒருவன் ஊர்ந்த
அச்சுறு தடம்தேர் முன்னர் அணுகுறத் தூண்டிச் சென்றான். (356)

தூண்டிய அரிமான் ஏறு சூரனது உளத்தில் போந்து
மாண் தகு தனது தீய வள் உகிர்க் கரத்தால் எந்தை
பாண்டில் அம் தேரை ஆற்றும் பரித்தொகை பதைப்ப மோதி
ஆண்டு அயல் நின்ற பூதர் அலமர ஆர்த்த தன்றே. (357)



கீழ்மகனாகிய சூரபன்மனும் கடுங்கோபம் கொண்டு, எமது பரம பிதாவாம் முருகக்கடவுளின் இரதத்தைச் செலுத்தும் பாகனாகிய வாயு தேவனது சரீரம் முழுவதும் வெளியிடம் இல்லையாம்படி பாணங்களைச் செலுத்திப் போரினைச் செய்தான். (353)

கையன் = கீழ்மகன், காய்சினம் = கடுங் கோபம்,
ஒய்யென = விரைந்து, உய்க்கும் = செலுத்தும், செய்யன = சிறந்த.

சாரதியாகிய வாயுதேவன் சூரபன்மனுடைய பாணங்கள் சரீரம் எவ்விடத்தும் தைத்ததனால் மனம்வருந்தி அறிவு மயங்கிக் குதிரைகளைச் செலுத்தாது செயலற்றிருந்தான். முருகக் கடவுள் வாயு தேவன் அடைந்த துன்பத்தைப் பார்த்தருளினார். (354)

பொருந்தலன் = பகைவன், மாக்கள் = குதிரைகள்,
வறிது = செயலற்று.

உடனே, முருகக் கடவுள் ஆயிரம் அம்புகளை ஆகாயமார்க்கமாய்த் தொடர்ந்து செல்லும்படி தூண்டிச் சூரபன்மன் பிடித்திருந்த வில்லைத் தேவர்கள் பார்த்து ஆனந்தக் கூத்தாடும்படி வெட்டிப் பல துண்டங்களாகச் செய்தருளினார். (355)

செலவினால் = செல்லும்படி, குறைத்து = வெட்டி.

சூரபன்மன் தனது கையில் வெட்டுண்டுபோக, நெற்றிக் கண்ணையுடைய சிவபிரான் கொடுத்த ஓர் சூலப்படையைப் பிடித்துக் கொண்டு சிங்கமாகிய தனது வாகனத்தில் ஏறித் திருமுடியில் கடப்ப மலர் மாலையை அணிந்த முதல்வராகிய சுப்பிரமணியப் பெருமான் இவர்ந்து நின்ற தேரின் முன்பு சென்றான். (356)

முச்சிகைப்படை = மூன்று நுதிகளையுடைய சூலப்படை,
முடங்குளை = சிங்கம், நீபம் = கடம்பு.

சூரனால் தூண்டப்பட்ட சிங்க ஏறு அவனுடைய மனக் குறிப்பின் வழியே சென்று, எமது பிதாவாகிய முருகக் கடவுளது அழகிய தேரை இழுக்கின்ற குதிரைகள் பதைப்புறும்படி, தனது கூரிய நகங்களையுடைய கையினால். அவற்றை அடித்துப் பக்கத்தில் நின்ற பூதர்கள் மனம் சுழலும்படி கர்ச்சித்தது. (357)

அரி = சிங்கம், மான் = மிருகம், வள் = கூர்மை, உகிர் = நகம்,
பாண்டில் = உருள், அலமர = அஞ்சும்படி.

அன்னது பொழுது தன்னில் அரிமிசைச் சென்ற சூரன்
தன்னுடை வலங்கை கொண்ட தனிப் பெருஞ் சூலம் தன்னைப்
பன்னிரு தடம் தோள் கொண்ட பகவன்மேல் திரித்து வீச
மின் என நிலவு கான்ற விண் வழிப் படர்ந்த தன்றே.

நீடிய சூலம் செல்ல நிமிர்ந்தன எழுந்து செந்தீக்
கூடின அசனி ஈட்டம் குழீஇயின படையின் கொள்ளை
ஆடியல் கணங்கள் ஈண்டி ஆர்த்தன அதனை நோக்கி
ஓடினர் அமரர் ஆனோர் உலகெலாம் வெருவிற்றம்மா.

அண்ணலும் அதனை நோக்கி ஆயிரகோடி வாளி
கண் அகன் சிலையில் பூட்டிக் கதுமென எதிர்தந்து உய்ப்பத்
துண்ணென அவற்றை எல்லாம் சூலவேல் துணித்து வீட்டி
நண்ணலன் வெகுளித்தீயின் உருவென நடந்ததன்றே.

நடத்தலும் முகம் ஆறுள்ளோன் ஞானநாயகன் ஈந்துள்ள
படைத்திறல் வன்மை உன்னிப் பாணி ஒன்று அதனின் மேவி
அடுத்திடு குலிசந்தன்னை அடையலன் உய்த்த சூலம்
பிடித்தனை வருதியென்று பேசினன் செல்ல விட்டான்.

விட்டிடுகின்ற எல்லை வியன் பெரும் குலிசம் ஏகி
நெட்டழற் சிகை மீக்கான்று நிமிர்ந்திடு சூலம் தன்னைக்
கிட்டுதலோடும் பற்றிக் கிளர்ந்த முத்தலையும் கவ்வி
ஓட்டலன் சிந்தை உட்க ஓய்யென மீண்டதன்றே. (362)



அப்பொழுது சூரபன்மன் தனது வலக்கையில் பிடித்திருந்த ஒப்பற்ற சூலப்படையைப் பன்னிரு புயங்களையுடைய முருகக் கடவுள் மீது எறிய, அப்படை மின்னலைப்போல ஒளியை வீசிக் கொண்டு ஆகாய வழியாற் சென்றது. (358)

திரித்து = சுழற்றி, நிலவு = ஒளி, கான்ற = வீசி.

சூலப்படை ஆகாய வழியாற் சென்றபொழுது அக்கினிக் கற்றைகளும் இடித் தொகுதிகளும் படைக் கூட்டங்களும் தோன்றிக் குழுமின. பிசாசங்கள் தோன்றி ஆரவாரித்தன. அவற்றைப் பார்த்துத் தேவர்கள் ஓடினர். உயிர்கள் எல்லாம் அச்சம் கொண்டன. (359)

அசனி = இடி, கொள்ளை = கூட்டம், கணங்கள் = பிசாசங்கள்.

சுப்பிரமணியப் பெருமானும் அச்சூலத்தின் இயல்பைப் பார்த்து ஆயிரகோடி அம்புகளைச் செலுத்த, அச்சூலப்படை அவ்வம்புகள் அனைத்தையும் விரைவில் துண்டித்து வீழ்த்திச் சூரபன்மன் கொண்ட கோபாக்கினியின் வடிவம் போலச் சென்றது. (360)

கண் = இடம், கதுமென = விரைவில், எதிர்தந்து = மாறுகொண்டு
உய்ப்ப = செலுத்த, நண்ணலன் = பகைவன்.

ஆறுமுகப்பிரான், சிவபிரான் சூரபன்மனுக்குக் கொடுத்தருளிய சூலப்படையின் வலிமையை நினைத்துத் தமது ஒரு திருக்கரத்தில் உள்ள குலிசப் படையைப் பார்த்தருளி, சூரபன்மன் தூண்டிய சூலப்படையைப் பிடித்துக்கொண்டு வருதி என்றுகட்டளையிட்டுத் தூண்டியருளினர். (361)

பாணி = கரம், அடுத்திடு = தங்கிய, அடையலன் = பகைவன்.

சிறந்த அக் குலிசாயுதம், அக்கினிச் சுவாலைகளை வீசிக்கொண்டு விரைந்து வருகின்ற சூலப்படையானது தன்னை யணுகிய அளவில், சூரபன்மனுடைய மனஞ் சோரும்படி அதனுடைய மூன்று நுதிகளையும் கவ்விப் பிடித்துக் கொண்டு விரைவில் முருகக் கடவுளிடத் துக்குத் திரும்பியது. (362)

சிகை = சுவாலை, மீ = மேல், ஒட்டலன் = பகைவன், உட்க = சோர.

முத்தலைப் படையைக்கொண்டு முரண்மிகு குலிசம் செவ்வேள்
கைத்தலம் உய்த்துத் தானும் கதுமென இருந்ததம்மா
பைத்தலைப் பாந்தள் போற்றும் பருவரைச் சிகரம் மூன்றும்
இத்தலப் புணரி தன்னில் இடும் மருத்து இயற்கையே போல். (363)

ஆண்டு அதுகாலை தன்னில் அறுமுகத்து ஐயன் கையில்
தூண்டிய குலிசத்தோடு சூலமும் வருதலோடும்
காண் தகும் அமரர் எல்லாம் கரதலம் உச்சி கூப்பி
ஈண்டு இவன் தன்னை அட்டே எமை அளித்திடுதி என்றார். (364)

என்னலும் எந்தை கேளா இராயிரம் பகழி பூட்டி
ஒன்னலன் ஊர்ந்து செல்லும் ஒருபெரு மடங்கல் ஏற்றின்
சென்னியில் அழுத்தலோடும் சேண் கிளர்ந்து அரற்றி வீழ்ந்து
தன்னுயிர் ஒல்லை வீந்து தரை இடைப் பட்டதன்றே.

ஊர்தியது இறந்து வீழ ஒருதனிச் சூரன் காணப்
பார்தனிற் பாய்ந்து நின்று பராபரன் செம்மல் கையில்
கூர்தரு சூலம் போன கொள்கையும் தெரிந்து பின்னுட்
சேர்தரு வடவை யென்னச் செயிர்த்து இவை சிந்தை செய்வான். (366)

தேரொடு படையை வௌவித் திறல் உடை மடங்கல் சிந்தி
நேரலன் வலியனே போல் நின்றனன் அனையன் தன்னைச்
சாரதர் தொகையை ஏனைத் தலைவர்கள் தம்மை எல்லாம்
ஓர் உருக்கொண்டு யானே விழுங்குவன் ஒல்லை என்றான்.



பிரசண்ட வாயுவானது, படத்தையுடைய ஆதிசேடன் பாதுகாத்த பெருமலையாகிய மேருவின் சிகரம் மூன்றையும் பறித்துப் பூமியைச் சூழ்ந்த சமுத்திரத்தில் இட்ட தன்மை போலச், குலிசாயுதம் சூலப் படையைக் கவ்விக்கொண்டு வந்து முருகப் பெருமானுடைய திருக் கரத்தில் கொடுத்துத் தானும் முன்னர் போல் இருந்தது. (363)

பை = படம், பாந்தள் = பாம்பு, சிகரம் = கோடுமுடி,
புணரி = சமுத்திரம், மருத்து = பிரசண்டவாயு.

ஆறுமுகப்பெருமானுடைய திருக்கரங்களில், அவரால் செலுத்தப்பட்ட குலிசப்படையுடன், சூலப்படையும் வந்து சேர்ந்தளவில், தேவர்கள் எல்லாரும் தங்கள் கைகளைச் சிரசுகளின் மேல் வைத்து வணங்கிச் சூரபன்மனை அழித்து எங்களைக் காத்து அருளுக என்றார்கள். (364)

காண் தகும் = கண்ணுற்ற, கரதலம் = கைகள்.

எமது பிதாவாகிய ஆறுமுகப் பெருமான் அதனைக் கேட்டு இரண்டாயிரம் பாணங்களைச் சூரபன்மன் ஏறிச் சென்ற சிங்கேற்றின் நெற்றியில் அழுத்திவிட, அத்துன்பத்தாற் கதறிக் கொண்டு ஆகாயத்தில் துள்ளிப் பூமியில் வீழ்ந்து இறந்தது. (365)

அரற்றி = கதறி, வீதல் = இறத்தல், பட்டது = இறந்தது.

தனது வாகனமாகிய சிங்கம் வீழ்ந்து இறக்கத் தனித்தவனாய் நின்ற சூரபன்மன், தான் செலுத்திய சூலப்படை முருகக் கடவுளின் கையில் போய்ச் சேர்ந்த தன்மையும் கண்டு, உலகம் அழியும் நாளில் சுவாலித்தெழும் வடவாமுகாக்கினியைப் போல மனம் கொதித்துச் சிந்திப்பானாயினான். (366)

பார் = பூமி, கூர் தரு = கூர் பொருந்திய.

பகைவனாகிய இச்சிறுவன் எனது தேரையும் சூலப் படையையும் கவர்ந்து கொண்டு, வலிமையுடைய சிங்கத்தையும் கொன்று, ஒரு பெரிய வீரன் போலவே நிற்கின்றான். அவனையும், பூதர் கூட்டத்தையும், மற்றைய வீரவாகு முதலிய தலைவர்களையும் நான் ஒரு பெரிய பறவை வடிவத்தைக் கொண்டு விரைவில் விழுங்குவேன் என்று தீர்மானித்தான். (367)

வௌவி = கவர்ந்து, மடங்கல் = சிங்கம், நேரலன் = பகைவன்,
சாரதர் = பூதர், உரு = பறவை.

என்றிவை மனத்தில் உன்னி இணையறு மாயை நீரால்
நின்றுள அவுணர் செம்மல் நேமியப்புள்ளே போல
ஒன்றொரு வடிவம் எய்தி ஒலி திரைக் கடலின் ஆர்த்துத்
தன் துணைச் சிறகர் பெற்ற தனிப்பெரும் கிரிபோலுற்றான்.

கறை அடித் தந்தி சிந்தும் காய்சின அரிமேல் உய்க்கும்
நறை அடிக் கமலத்து ஐயை ஞாட்பு இடை ஆடற் கொத்த
பறை அடித் திட்டதே போல் படிமகள் உடலம் விள்ளச்
சிறை அடிக் கொண்டு தீயோன் சேண் இடை
எழுதலுற்றான். (369)

மண் இடை வரைப்பு முற்றும் மணிச் சிறை அதனால் மூடி
விண்ணிடைப் பரிதி ஒள்வாள் விலக்கியே சுழலும் வேலைக்
கண்ணிடைப் பெருமீன் குப்பை கவர்ந்திட
ஊக்கிற் றென்னத்
துண்ணெனப் பூதர் தானைச் சூழல் புக்கு எறியும் மாதோ.

அடித்திடும் சிறகர் தன்னால் அளவை இல் பூதர் தம்மைப்
பிடித்திடும் புலவு நாறும் பெருந்தனி மூக்கிற் குத்தி
மிடற்றிடைச் செறித்து மெல்ல விழுங்கிடும் விறல்
வேலண்ணல்
கொடித்தடம் தேரைச் சூழும் கொடிய புள் வடிவக் கூற்றம்.

சுற்றிடுங் குமரன் தேரைத் தூண்டிய வலவன் தன்னை
எற்றிடும் கொடிஞ்சி எஞ்ச இறுத்திடும் பரிகள் தம்மைக்
குற்றிடும் மூக்கின் சென்னி கொய்திடும் குழீஇய வீரர்ப்
பற்றிடும் படைகள் முற்றும் பறித்திடும் முறித்து வீசும்.



அவன் தனது ஒப்பற்ற மாயாசாதனவியல்பினால், ஒரு சக்கரவாகப் பறவை போன்ற வடிவத்தைக் கொண்டு திரைகளையுடைய சமுத்திர முழக்கம் போலக் கத்திக்கொண்டு இரண்டு சிறகுகளையுடைய பெருமலையாகிய மேருவைப்போலத் தோன்றினான். (368)

இணை = ஒப்பு, நேமியம்புள் = சக்கரவாகப் பறவை.

பருத்த கால்களையுடைய யானைகளை அழிக்கும் சிங்கத்தின்மேல் இவர்ந்து வருகின்ற வாசனை பொருந்திய தாமரை மலர் போலும் பாதங்களையுடைய துர்க்காதேவி, அந்த யுத்தகளத்தில் நடிக்கின்றதோர் நடனத்துக்கு மிருதங்கம் அடித்தாற்போலச், சக்கரவாகப் புள் வடிவம் கொண்ட சூரபன்மன், பூமியாகிய பெண்ணின் உடம்பு வெடிக்கும்படி சிறகுகளை அடித்துக்கொண்டு ஆகாயத்தில் பறக்கத் தொடங்கினான். (369)

கறை = உரல், நறை = வாசனை, ஞாட்பு = யுத்தகளம்,
ஐயை = வீரலக்ஷ்மி, படிமகள் = பூமி ஆகிய பெண்.

பறக்கும் சக்கரவாகப் பறவையாகிய சூரபன்மன், தனது அழகிய சிறகுகளால் பூமியினிடங்களை மூடி, ஆகாய வெளியில் சூரியனது பிரகாசத்தையும் மறைத்துக்கொண்டு திரியும் சமுத்திரத்தில் உள்ள மீன்களை எடுத்தற்கு முயன்றாற் போலப், பூத சேனைகளின்மேல் பறந்து சென்று அவர்களைக் கொத்தும். (370)

வரைப்பு = இடம், பரிதி = சூரியன், வாள் = ஒளி,
வேலை = சமுத்திரம், குப்பை = குவியல், ஊக்கிற்று = முயன்றது,
சூழல் = கூட்டம்.

சூரபன்மன் கொண்ட சக்கரவாகப் பறவை வடிவாகிய யமன் பூதர்களைச் சிறகுகளால் அடித்து வீழ்த்தும். புலால் மணம் வீசும் தனது அலகினால் கொத்தித் தன் வாயினுள் இட்டு மெல்ல விழுங்கிடும். வெற்றியைத் தரும் வேலைத் தாங்கிய முருகக் கடவுள் இவர்ந்து நிற்கும் கொடிகட்டப்பட்ட தேரைச் சூழ்ந்து வட்டமிடும். (371)

புலவு = புலால், மூக்கு = அலகு, செறித்து = இட்டு.

குமாரக் கடவுளின் தேரைச் செலுத்திய சாரதியாகிய வாயு தேவனைச் சிறகர்களால் புடைக்கும். தன்னுடைய அலகினால் தேரின் கூம்புகளைக் கறிக்கும். தேரை இழுக்கும் குதிரைகளைக் கொத்தும். அங்கு நின்ற வீரருட் சிலரைப் பிடித்துச் செல்லும். அவர்கள் பிடித்த படைகளை நறுக்கி எறியும். (372)

கொடிஞ்சி = கூம்பு, தேர் மொட்டு.

இத்திறம் அவுணர் செம்மல் இரும் சிறைப்புள் அதாகி
அத்தலைக் கறங்கி வீழ்வுற்று அந்தரம் திரிதலோடும்
முத்தியை உதவும் நோன்றாள் மூவிருமுகத்தன் காணாக்
கைத்தலம் புடைத்து நக்கு நன்று இவன் கற்பிது என்றான்.

எறித்தரு சுடர் வேலண்ணல் இம்மென வெகுண்டு போரில்
நிறுத்திய மேரு என்ன நிமிர்ந்த தோர் வரிவில் வாங்கி
விறல் கணை அநந்த கோடி மிசை மிசைக் கடிது பூட்டித்
திறத்தியல் புள்ளாய்ச் சூழும் அவுணன் மேல் செல்ல உய்த்தான். (374)

நெறித்திகழ் பகழி மாரி நிமலன் விட்டிடலும் வெய்யோன்
சிறைப்புடைக் கொண்டு பாங்கிற் சிந்திட அவற்றை மோதிக்
குறைத்திடும் துண்டம் தன்னால் கொய்திடும் தாளிற் பற்றி
முறித்திடும் கிளர்ந்து வானம முழுவதும் சுழன்று செல்லும். (375)

வேலைகள் எல்லை முற்றும் படர்ந்திடும் விராவி மேவும்
ஞாலமது அகலம் முற்றும் படர்ந்திடும் நாகர் வைகும்
வாலிய உலகம் முற்றும் படர்ந்திடும் வந்து பூத
சாலமது எறிந்து கவ்வித் தலைத்தலை மயங்கிச் செல்லும்.

சூரன் மற்றினைய ஆற்றால் சுலாய்க்கொடு திரிதலோடும்
பூரணன் அதனைக் காணாப் புள்ளெனப் பெயர்வான் தன்னைத்
தேரொடும் தொடர்ந்து கோறல் பழியெனச் சிந்தை செய்து
வாரணம் உயர்த்தோன் தன்னை நோக்கினன் வானோர் தம்முள். (377)



*சூரபன்மன் பெரிய சிறகுகளையுடைய சக்கரவாகப் பறவை வடிவம் கொண்டு ஆகாயத்தில் உலாவுதலும், மோட்சத்தைத் தந்து ஆதரிக்கும் திருவடிகளையுடைய அறுமுகப் பெருமான், அவன் இயல்பனைத்தையும் பார்த்துத் தமது திருக்கரங்களைத் தட்டிப் புன்னகை செய்து சூரபன்மன் கண்ட கற்பனை நன்றாம் என்று கூறியருளினார்.* (373)

இரும் = பெரிய, கறங்கி = வட்டமிட்டு, தலை = இடம், நோன்றல் = சுமத்தல், ஆதரித்தல். கற்பு = கற்பனை.

*பிரகாசம் பொருந்திய வேலையுடைய முருகக் கடவுள் மேரு மலை போன்று உயர்ந்த ஒரு வில்லை வளைத்து, வெற்றியைத் தரும் அநந்தகோடி அளவான பாணங்களைத் தொடுத்து, சூரபன்மன் கொண்ட சக்கரவாகப் புள்ளின்மேற் சென்று தைக்கும்படி பிரயோகித்தருளினார்.* (374)

எறித்தரு = எறிதரு, பிரகாசம் பொருந்திய. விறல் = வெற்றி, மிசை மிசை = ஒன்றன் பின் ஒன்றாய், திறம் = வலிமை. நிமிர்ந்தது = நிமிர்ந்த, நிறுத்தப்பட்ட.

*முருகக் கடவுள் அம்புமழையைச் சொரிந்தருள, சூரபன்மனாகிய சக்கரவாகப்புள் அப்பாணங்களைச் சிறகுகளினால் அழிக்கும். அலகினால் கறித்துவிடும். கால்களால் முறித்துவிடும். உயர்ந்து ஆகாயம் எவ்விடத்தும் வட்டமிட்டுச் செல்லும்.* (375)

நெறி = ஒழுங்கு, பகழி = அம்பு, சிறை = சிறகு, புடை = அடி சிறைப்புடை = சிறகின் அடி. துண்டம் = மூக்கு, அலகு.

*சமுத்திரங்கள் தோறும் பறந்து செல்லும். பூமியின் இடங்கள் தோறும் பறக்கும். தேவர்கள் வசிக்கும் ஆகாயவுலகம் முற்றும் பறக்கும். பூதர் கூட்டத்தைக் கொத்திக் கவ்விக் கொண்டு செல்லும்.* (376)

விராவி = நெருங்கி, சாலம் = கூட்டம்.

*சூரபன்மன் பறவை உருவம் கொண்டு இவ்வாறு திரிய, முழு முதற் பொருளாகிய முருகப் பெருமான் பார்த்தருளி, பறவை வடிவங்கொண்டு நிற்கின்றவனை நாம் தேரில் நின்று கொல்லுதல் குற்றமாகும் என நினைத்துத் தேவர்களுள் ஐராவத யானையை வாகனமாகக் கொண்ட இந்திரனை நோக்கியருளினார்.* (377)

சுலாவல் = சுற்றுதல், பூரணன் = எங்கும் நிறைந்தவன் (முருகன்) கோறல் = கொல்லல், வாரணம் = யானை.

இந்திரன் அனையகாலை எம்பிரான் குறிப்பும் தன்மேல்
அந்தம் இல் அருள் வைத்துள்ள தன்மையும் அறிந்து நோக்கிச்
சுந்தர நெடும்கண் பீலித் தோகை மாமயிலாய்த் தோன்றி
வந்தனன் குமரற் போற்றி மரகத மலைபோல் நின்றான்.

நின்றிடு மஞ்ஞைப் புத்தேள் நெடுநிலம் கிழிய மேருக்
குன்றமும் புறம் சூழ் வெற்பும் குலைந்திடக் கரிகள் வீழ
வன்றிரை அளக்கர் நீத்தம் வறந்திடப் பணிகள் அஞ்சத்
தன் துணைச் சிறகால் மோதி இனையன சாற்றலுற்றான்.

ஐய கேள் அமரர் எல்லாம் வழிபட அளியன் தன்பாற்
செய்ய பேரருளை வைத்தாய் ஆதலில் சிறுமை தீர்ந்தேன்
உய்யலாம் நெறியும் கண்டேன் உன்னடி பரிக்கப் பெற்றேன்
பொய்யுலாம் மாய வாழ்க்கைப் புன்மையும் அகல்வன் மன்னே. (380)

அல்லல் செய்து எமரை எல்லாம் அரும் சிறைப்படுத்தி வீட்டிப்
பல்வகை உலகை ஆண்ட அவுணர்கோன் பறவை யாக்கை
செல்லுழிச் சென்று சென்று செருவினை இழைத்து வெல்வான்
ஒல்லையில் அடியேன் தன்மேல் ஏறுதி ஊர்தற்கு என்றான்.

என்னலும் உளத்திற் செல்லும் இவுளிமான்தேரின் நீங்கிப்
பன்னிரு நாட்டத் தண்ணல் படர்சிறை மயூரம் ஆகி
முன்னுறு மகவான் தன்மேல் மொய்ம்புடன் புக்கு வைகி
ஒன்னலன் செலவு நோக்கி உம்பரில் ஊர்தலுற்றான்.



தேவேந்திரனானவன் முருகக்கடவுளின் திருவுளக் குறிப்பையும் அவர் அளவற்ற கிருபைபாலித்த தன்மையையும் உணர்ந்து, அழகிய இறகுகள் அமைந்த வாலையுடைய பெரியதோர் ஆண் மயிலின் வடிவுகொண்டு வந்து, முருகக் கடவுளை வணங்கிக் கொண்டு ஒரு மரகத மலை போல் நின்றான். (378)

நோக்கி = விரும்பி, சுந்தரம் = அழகு, கண் = மயிற்றோகைக் கண், பீலி = இறகு, தோகை = வால்.

மயில் வடிவத்தைக் கொண்ட இந்திரன், பெரிய பூமி பிளக்கவும், மேருவும் மற்றைய மலைகளும் நிலைகுலையவும், திக்கு யானைகள் நடுங்கி விழவும், சமுத்திரத்தின் நீர் வற்றவும், ஆதிசேடன் அட்ட நாகம் முதலிய சர்ப்பங்கள் அச்சமுறவும் தனது சிறகுகளை அடித்துக் கொண்டு பின்வரும் மொழிகளைக் கூறினான். (379)

மஞ்ஞை = மயில், புத்தேள் = இந்திரன், அளக்கர் = சமுத்திரம், பணி = பாம்பு.

சர்வலோக நாயகரே! பிரமா முதலிய தேவத் தலைவர்கள் அனைவரும் தேவரீரை வழிபட்டு சிறப்படியர்களாயிருக்கவும், சிறியேன் மீது பெருங்கருணை பாலித்தருளினீர். ஆதலின் சிறுமைப்பாடு நீங்கினேன். தேவரீருடைய திருவடிகளைச் சுமக்கும் பாக்கியத்தையும் பெற்றுக்கொண்டேன். நான் உய்யும் வழியையும் காணப் பெற்றேன். இவ்வுடல் உயிர் வாழ்க்கையாம் சிறுமையினின்றும் நீங்கிவிடுவேன். (380)

அளியன் = சிறியேன், செய்ய = சிறந்த, விசேட. பரித்தல் = சுமத்தல், பொய்யுலாம் = அநித்தியமான, புன்மை = சிறுமை.

நம்மனோரை யெல்லாம் துன்பப்படுத்திச் சிறையில் இட்டு, பலவகைப்பட்ட உலகங்களை அரசாளுகின்ற சூரபன்மன் கொண்ட சக்கரவாகப் பறவையின் வடிவம் செல்லும் இடந்தோறும் தேவரீரும் சென்று, போரினைப் புரிந்து வெல்லும் பொருட்டாக அடியவனாகிய என்மீது விரைவில் ஏறியருளுக என்றான். (381)

அல்லல் = துன்பம், உழி = இடம், செரு = யுத்தம்.

பன்னிரு திருக்கண்களையுடைய ஆறுமுகப் பெருமான் மனவேகம் போல் செல்லும் தேரினின்றும் இறங்கி, இந்திரன் கொண்ட சிறகுகளையுடைய மயில் வாகனத்தின் மீது பராக்கிரமத்துடன் வீற்றிருந்து, பறவை வடிவுகொண்ட சூரபன்மன் ஆகாயத்திற் பறக்கும் இடத்தைப் பார்த்து, மயில் வாகனத்தை நடாத்தியருளினார். (382)

இவுளி = குதிரை, நாட்டம் = கண், படர்தல் = செல்லுதல், செலவு = செல்லுதல்.

ஆறு மாமுகத்து எம்அண்ணல் அசனிபோல் அகவி ஆர்க்கும்
மாறு இலா மயூரம் என்னும் வயப்பரி தனை நடாத்தி
ஈறு சேர் பொழுதிற் சூழும் எரியினை அடுவான் முன்னிச்
சூறை மாருதம் சென்றென்ன அவுணனைத் தொடர்ந்து சூழ்ந்தான். (383)

ஆகிய பொழுது தன்னில் ஆழி அம்புள்ளாய்த் தோன்றி
மாகமது உலவுகின்ற மாற்றலன் அதனை நோக்கிச்
சீகர அளக்கர் என்னத் தெழித்து மேற்சென்று தாக்கக்
கேகய அரசன் தானும் கிடைத்து அமர் புரிதலுற்றான்.

நிறம்கிளர் பசலைத் துண்டம் நீட்டியே யாக்கை முற்றும்
மறங்கொடு கீண்டு செந்நீர் வாய்ப்படக் கவ்வி வாங்கிப்
புறங்கிளர் சிறைகள் தம்மாற் புடைத்து வெம்காலில் தாக்கிப்
பிறங்குபுள் உருவமானோர் இவ்வகை பெரும் போர் செய்தார். (385)

இத்திறம் பொருத காலைப் பிணிமுகத்து ஏந்தல் தன்னைப்
பைத்தலை உடைய தூவி பறித்திடா வதன முற்றுங்
குத்தி வெங்குருதி வீட்டிக் குரு மணிக் கலாபம் ஈர்த்து
மெய்த் துயர் புரிந்தான் நேமிப் புள்ளுருக் கொண்ட வெய்யோன். (386)

அச்செயல் முருகன் காணா ஆர்அழல் என்ன நக்குக்
கைச்சிலை அதனை வாங்கிக் கடும்தொழில் அவுணர் மன்னன்
உச்சியில் முகத்தில் காலில் உரத்தினில் சிறைகள் தம்மில்
வச்சிர நெடும் கண் வாளி வரம்பில தொடுத்து விட்டான்.



ஆறுதிருவதனங்களையுடைய முருகப்பெருமான் ஆடல் செய்து கொண்டு இடியைப்போல ஆரவாரிக்கின்ற வெற்றியையுடைய மயில் வாகனத்தை நடாத்திக் கொண்டு உலகம் அழியும் காலத்தில் எழுகின்ற ஊழித்தீயை அணைக்க எழுந்த சுழல் காற்றுப் போலச் சூரபன்மனை அணுகினார். (383)

அசனி = இடி, அகவல் = ஆடுதல்,
பரி = பரித்தலைச் செய்வது, வாகனம்.

சக்கரவாகப் பறவையின் வடிவம் கொண்டு ஆகாயத்தில் உலவிய சூரபன்மனை அணுகிய பொழுது, திரைகளையுடைய சமுத்திரம் முழங்கினாற் போல ஆரவாரித்துக்கொண்டு அவன் தாக்க, மயில் வடிவம் கொண்ட தேவர்க்கரசனாகிய இந்திரனும் அவனுடன் யுத்தத்தைச் செய்யத் தொடங்கினான். (384)

ஆழிப்புள் = சக்கரவாகப் பறவை, மாகம் = ஆகாயம், சீகரம் = திரை,
தெழித்து = ஆரவாரித்து, கேகயம் = மயில்.

பறவை வடிவம் கொண்ட சூரனும் இந்திரனும் பசலை நிறம் விளங்கும் அலகுகளை நீட்டி வீரத்துடன் ஒவ்வொருவரும் மற்றவருடைய உடல் முழுவதையும் கிழித்தும் சிறகுகளால் அடித்தும் கால்களினால் உதைத்தும் பெரும் போரினைப் புரிந்தார்கள். (385)

பசலை = பசப்பு நிறம், துண்டம் = பறவை அலகு, மறம் = வீரம்
கீண்டு = கிழித்து, புறம் = பக்கம், பிறங்கு = விளங்கிய.

சக்கரவாகப் பறவை வடிவம் கொண்ட சூரபன்மன் இந்திரனாகிய மயிலினது தலையின் கண் உள்ள கொண்டையைப் பிடுங்கியும் முகம் முழுவதையும் கொத்தி இரத்தத்தை வடியச் செய்தும் நீலநிறம் விளங்கும் இறகுகளைக் கொத்தி இழுத்தும் துன்பத்தைச் செய்தான். (386)

குரு = நிறம், மணி = நீலம், கலாபம் = தோகை,
பைத்தலை = பசியதலை, தூவி = கொண்டை.

குமாரக்கடவுள் அதனைக்கண்டு தமது திருக்கரத்தில் இருந்த வில்லினை வளைத்து, அளவற்ற பாணங்களைத் தொடுத்து சூரபன்மன் கொண்ட பறவை வடிவின் தலையிலும், முகத்திலும், கால்களிலும், மார்பிலும், சிறகுகளிலும் செலுத்தியருளினார். (387)

ஆர் = { நிறைகின்ற, சுவாலிக்கின்ற. வச்சிரம் = வயிரம், கண் = நுதி.

விட்டிடுகின்ற வாளி வெய்யவன் அங்கம் எங்கும்
பட்டிடுகின்ற காலைப் பதை பதைத்து உதறிச சிந்தி
எட்டுள திசையும் வானும் இருங்கடல் உலகமெங்கும்
கட்டழல் சிந்திச் சீறிக் கறங்கெனத் திரியா நின்றான்.(388)

திரிந்திடுகின்ற காலைச் செம்சுடர்த் தனிவேல் அண்ணல்
புரந்தரன் உருவாய் நின்ற பொறிமயில் நடாத்தி ஏகி
அரம் தெறு கணைகள் தூண்டி அகிலமும் அவுணன் தனைத்
துரந்து அமர் இழைக்கலுற்றான் விண்ணவர் தொழுது போற்ற. (389)

அத்தகும் எல்லை தன்னின் அவுணர்கள் எவர்க்கும் மேலோன்
எய்த்து உளம் மெலிந்து சால இடர் உழந்து இரக்கம் எய்தி
மெய்த்தழல் என்னச் சீறி வேற்படை கொண்ட செம்மல்
கைத்தலத்து இருந்த வில்லைக் கறிப்பது கருதி வந்தான்.

வருவது நிமலன் காணு மலர்க்கரம் ஒன்றில் வைகும்
ஒருதனி ஒள் வாள் வீசி ஒன்னலன் பறவை யாக்கை
இருதுணி ஆகி வீழ எறிந்தனன் எறிதலோடும்
அரி அயன் முதலாம் தேவர் அனைவரும் ஆடல் கொண்டார். (391)

வேறு

தார் ஆர் வாகை சூடிய வேலோன் தன் கையில்
கூர் ஆர் வாளால் புள் உருவத்தைக் குறைவிக்கச்
சூராம் வெய்யோன் அண்ட முகட்டைத் தொட ஓங்கிப்
பாராய் நின்றான் விண்ணவர் யாரும் பரிவெய்த. (392)



குமாரக்கடவுள் செலுத்திய பாணங்கள் சூரபன்மன் கொண்ட பறவை வடிவத்தின் உறுப்புக்கள் முழுவதிலும் தைத்த பொழுது, அவன் தடிதுடித்து அவற்றை உதறி அகற்றி அட்ட திக்குகளிலும் ஆகாயமும், பூமியும் ஆகிய எவ்விடங்களிலும் காற்றாடியைப் போலத்திரிந்தான். (388)

கறங்கு = காற்றாடி.

ஒப்பற்ற வேற்படையைத் தாங்கிய குமாரக்கடவுள் இந்திரனாகிய மயில் வாகனத்தைச் செலுத்திக்கொண்டு சென்று சூரபன்மனாகிய சக்கரவாகம் பறக்கும் இடங்கள்தோறும் சென்று தேவர்கள் வணங்கித் தோத்திரம் செய்யும்படி அரத்தையும் முரிக்க வல்ல அம்புகளைச் செலுத்திப் போர் செய்தருளினர். (389)

பொறி = மயிற்றோகைக்கண், தெறு = முரிக்கின்ற,
அகிலமும் = எல்லா இடமும்.

அப்பொழுது சூரபன்மன் மனம் நொந்து துன்பத்தை அடைந்து இரக்கம் கொண்டு, அக்கினிபோல் கோபமுற்று, வேற்படையைத் தாங்கிய குமாரக் கடவுளுடைய திருக்கரத்துப் பொருந்திய விற்படையைக் கறித்து விடக் கருதி, இறைவருக்குக் கிட்ட வந்தான். (390)

எய்த்தல் = இளைத்தல், சால = மிகவும், உழந்து = அடைந்து,
கறிப்பது = நறுக்க, துண்டிக்க.

அதனை முருகக் கடவுள் கண்டு சூரபன்மன் கொண்ட சக்கர வாகப்பறவை வடிவம், இரண்டு துண்டாகி விழும்படி மலர் போன்ற திருக்கரத்தில் இருந்த வாளை வீசி வெட்டியருளினர். அதனைக் கண்ட பிரமா விஷ்ணு முதலிய தேவர்களெல்லோரும் ஆனந்தக் கூத்தாடினர்கள். (391)

எறிதல் = வெட்டல்.

வெற்றி மாலையைத் தரித்த வேற்படையையுடைய முருகக் கடவுள், சூரபன்மன் கொண்ட பறவை வடிவத்தை வாட்படையினால் வெட்டிவிடச், சூரபன்மன் தேவர் அனைவரும் கண்டு மனம் வருந்தும்படி பூமி வடிவைக் கொண்டு அண்ட முகட்டை முட்டும் படி உயர்ந்து நின்றான். (392)

தார் = மாலை, ஆர் = அரிய, வாகை = வெற்றி, பார் = பூமி,
பரிவு = துன்பம்.

ஏழு உட்பட்ட ஆழ் திரை நேமி இடை தூர்த்துத்
தாழ்விற் செல்லும் ஆதவர் தேரைத் தடை செய்து
சூழிக் கால்கள் வான் நெறி செல்லும் துறை மாற்றிப்
பாழித் திக்கை மூடினன் நின்றான் படி ஆனோன். (393)

ஆறு ஆர் சென்னிப் பண்ணவன் மைந்தன் அது காணாச்
சீறு நன்றால் சூர் புரி மாயத்திறன் என்னாக்
கூறு அங்கைச் செஞ் சிலை தனனைக் குனிவித்தே
ஊறு ஆர் வெங்கோல் ஏழு தொடுத்தே உரை செய்வான்.

நெடு வானத்தின் காறும் எழுந்தே நிமிர்வு எய்தி
முடிவான் வெய்யோன் பாரகமாய் என்முன் நின்றான்
கடல் ஏழு என்னும் தன்மையின் நீவிர் கடிது ஏகி
அடுவீர் என்றே விட்டனன் யார்க்கும் அறிவு ஒண்ணான்.

ஒற்றைச் செவ் வேலோன் விடு வாளி உலகெல்லாஞ்
சுற்றிக் கொண்டே உண்டிடும் நேமித் தொகை போலாய்ச்
செற்றத் தோடும் ஆர்ப்பொடும் ஏகித் திரைவீசி
மற்றச் சூரன்தன் உருவத்தை வளைவுற்ற. (396)

வளையா வெஞ்சூர் மாயிரு ஞால வடிவத்தைக்
களையா உண்டே இன்மையது ஆக்கிக் கணை ஏழுந்
திளை ஆர் நீத்தத் தொல் உரு நீங்கிச் செருவின் கண்
விளையாடுற்ற எம்பெருமான் பால் மீண்டுற்ற. (397)



பூமி வடிவைக் கொண்ட சூரபன்மன் ஆழமாகிய திரைகளை யுடைய ஏழு சமுத்திரங்களை நிறைத்தும், ஆகாயத்தில் செல்லும் சூரியனுடைய தேரைச் செல்லவொட்டாது தடுத்தும், சுழல் காற்றுகள் செல்லுகின்ற இடங்களை அடைத்துக் கொண்டும் பரந்த திக்குகளை மறைத்துக் கொண்டும் நின்றான். (393)

சூழிக்கால்=சுழல் காற்று, பாழி=பரந்த, படி=பூமி.

கங்காநதி தங்கிய திருமுடியையுடைய சிவபிரானது திருக்குமாரராம் முருகக் கடவுள் கண்டருளித் தமது அழகிய திருக்கரத்தில் இருந்த சிறந்த வில்லை வளைத்து, கொலைத்தன்மை வாய்ந்த ஏழு பாணங்களைத் தொடுத்து அவற்றுக்குக் கூறுவாராயினர். (394)

ஆறு=கங்காசலம், ஊறு=கொலை.

எவர்களாலும் இவ்வியல்பினரென அறிய முடியாதிருக்கும் குமாரக் கடவுள் "இச் சூரபன்மன் அழிந்து போகும் வண்ணம் நமது முன்னிலையில் பூமி வடிவமாகி ஆகாய முகடுவரையும் எழுந்து நிற்கின்றான். நீவிர் ஏழாகிய சமுத்திரங்களின் தன்மையைக் கொண்டு சென்று அழிப்பீர்களாக" என்று கூறிச் செலுத்தியருளினர். (395)

காறும்=அளவும், பாரகம்=பூமி, அடுதல்=அழித்தல்
ஒண்ணாத=இயலாத, முடியாத.

ஒப்பற்ற வேலைத்தாங்கிய முருகக் கடவுள் விடுத்த பாணங்கள் ஏழும், ஏழு சமுத்திரங்களின் வடிவு போலாகி, மூர்க்கத்துடனும், முழக்கத்துடனும் பாய்ந்து திரைகளைப் புரட்டிக் கொண்டு சூரபன்மன் கொண்ட பூமி வடிவத்தை வளைத்தன. (396)

ஒற்றை=ஒப்பற்ற, உண்டிடும்=மறைக்கின்ற, அழிக்கின்ற,
செற்றம்=மூர்க்கம்.

ஏழு அம்புகளும் சூரபன்மன் கொண்ட பூமி வடிவத்தை வளைத்துக் கரைத்து அழித்துச் சமுத்திரங்களாகிய வடிவங்களை விடுத்து யுத்தத் திருவிளையாடலைச் செய்தருளிய எமது முருகக் கடவுள் பக்கத்துத் திரும்பி வந்து சேர்ந்தன. (397)

களைதல்=பிடுங்குதல், அடியோடழித்தல், திளைத்தல்=நெருங்குதல்,
செரு=யுத்தம், உற்ற=வந்தன.

காணு வெய்யோன் பார்உரு நீங்கிக் கடல் எல்லாம்
ஊணு வையம் வானொடும் உண்டற்கு எழுமாபோல்
ஏண் ஆர் நீத்தத்து ஓர் வடிவாகி இறைமுன்னம்
நீள் நாகத்தின் காறும் நிமிர்ந்தே நின்றிட்டான். (398)

நேரான் மாயத் தொல் உருவத்தின் நிலை நோக்கிக்
கூரார் வாளி நூறு தொடுத்தே கொடியோன் பால்
சேரா ஊழித்தீ இயல்பாகிச் செறிவுற்றுப்
பேராது அட்டே வம்மென விட்டான் பெயர்வு இல்லான்.

அவ்வாருக வாளிகள் நூறும் அருள் நீரால்
வெவ்வாய் அங்கிப் பேர் உருவாகி விரவிப் போய்த்
தெவ்வாய் நின்றேன் நீத்தம் அதாகும் செயல் நீங்க
எவ்வாயும் சென்று உண்டன அம்மா இறை தன்னில்.

தண்டாது ஆர்க்கும் நீத்த இயற்கைதனை எல்லாம்
உண்டு ஆலித்தே வாளிகள் மீண்டே உறுகாலைக்
கண்டான் மாயத்தன்மை படைத்தோன் கனல் மேனி
கொண்டான் அண்டம் காறும் நிமிர்ந்தே குலவுற்றான்.

குலவும் காலைக் கண்டு நகைத்தே கூற்று என்ன
நிலவும் செம் கோல் ஆயிரம் வாங்கா நீடூழி
சுலவும் சண்டச் சூறையின் ஏகிச் சூர் மாயம்
புலவும் செற்றே வம்மென உய்த்தான பரம் ஆனேன்.



*சூரபன்மன் தான் கொண்ட பூமி வடிவம் அழிய, ஆகாய உலகங்களையும் பூவுலகையும் மூடி அழித்தற்கு ஊழிக் காலத்தில் கடல்கள் எல்லாம் கொந்தளித்துக் கிளரும் தன்மைபோல, முருகக் கடவுளின் முன்னிலையில் சமுத்திரங்களெல்லாம் சேர்ந்த ஒரு வடிவமாகி உயர்ந்த அண்டத்தின் எல்லை வரையும் கிளர்ந்து நின்றான்.* (398)

ஊணு = ஊணுக, ஏண் = பெருமை, நாகம் = ஆகாயம்.

*முருகக் கடவுள், சூரபன்மன் மாயையால் கொண்ட பெரிதாகிய நீர் வடிவத்தின் நிலைமையைப் பார்த்து, கூர்மை பொருந்திய நூறு அம்புகளைத் தமது வில்லில் தொடுத்து நீவிர் ஊழித் தீயின் இயல்பைப் பொருந்திச் சூரபன்மன் கொண்ட நீர் வடிவத்தை அழித்து வரக் கடவீர் எனக் கூறிச் செலுத்தியருளினர்.* (399)

நேரான் = நேரலன், பகைவன். பேராது = தவறாமல்,
பெயர்வு = மாறுபாடு.

*இறைவன் செலுத்திய நூறு பாணங்களும், திருவருள் வன்மையினால் வெம்மையான ஊழித் தீயின் பெருவடிவமாகிச் சென்று சூரபன்மன் கொண்ட நீர் வடிவத்தை இறையளவு நேரத்தில் அழித்தன.* (400)

வாய் = நுதி, சுவாலை. தெவ் = பகைவன்,
எவ்வாயும் = எப்பக்கங்களிலும்.

*முருகக் கடவுள் ஏவிய பாணங்கள் ஆரவாரித்துக் கொண்டிருந்த சமுத்திர வடிவை அழித்து மீண்டு இறைவனிடத்து வந்த போது, சூரபன்மன் கண்டு அக்கினி வடிவத்தைக் கொண்டு அண்ட முகட்டளவில் உயர்ந்து தோன்றி நின்றான்.* (401)

தண்டாது = நீங்காது, ஆலித்து = களிப்புற்று,
குலவுற்றான் = தோன்றினன்.

*பரம்பொருளாகிய முருகக்கடவுள் அவன் கொண்ட வடிவத்தைப் பார்த்துப் புன்முறுவல் பூத்து, யமனைப் போன்ற ஆயிரம் அம்புகளை வில்லில் தொடுத்து நீவிர் சுழல் காற்றைப் போல வாயு வடிவம் கொண்டு சென்று சூரபன்மன் கொண்ட அக்கினி வடிவத்தை அழித்து வரக்கடவீர் என்று கூறிச் செலுத்தியருளினர்.* (402)

குலவும் = தோன்றிய, பார்த்த. நிலவும் = ஒத்த, ஊழி = யுகமுடிவு.
சுலவும் = சுற்றும்,

உய்க்கும் காலத்து ஒய்யென ஏகி உலகெங்கும்
திக்கும் வானும் சூழும் மருத்தின் திறன் எய்தி
மைக்கும் தூமம் போல்பவன் மெய்த் தீவடிவெல்லாம்
பொய்க்கும் வண்ணம் சாடின ஐயன் புகர் வாளி. (403)

## வேறு

வண்டு உலாவரு வாகை அம் தாரினன்
கொண்டு எழுந்த கொழும் தழல் யாக்கையை
உண்டு வாளிகள் ஒய்யென மீண்டு ஓராய்
அண்டர் நாயகன் பாங்கர் அணைந்தவே. (404)

ஆங்கு அவ் எல்லையில் அவ் வடிவத்தினை
நீங்கும் மாற்றலன் நீள் சினம் மேல் கொளா
ஓங்கும் ஓதை உருவு கொண்டு ஆர்த்தலும்
ஞாங்கர் எந்தை நகையோடு நோக்கினன். (405)

ஆய்ந்து வாளி ஓராயிர நூற்றினை
வாய்ந்த கைக்கொடு மாற்றலன் வன்மையைப்
பாந்தள் ஆகிப் படுத்து வம்மோ என
ஏந்தல் கூறி இமைப்பினில் தூண்டினன். (406)

அவ் அயில் கணை அந்தரத்திற் செலாச்
செவ்விதிற் கிளர் செந்தழல் போல் எழிஇப்
பைவிரித்த பஃறலைப் பன்னக
வெவ் உருக்கொடு சூர்மிசை மேயதே. (407)



*முருகக்கடவுள் செலுத்திய பாணங்கள், உலகங்களிலும், திக்குகளிலும், ஆகாயத்திலும் சூழ்ந்து செல்லும் சுழல் காற்றைப் போலச் சென்று, கருமை நிறம் பொருந்திய சூரபன்மன் கொண்ட அக்கினி வடிவத்தை அழித்தன.* (403)

திறன் = தன்மை. மைக்கும் = கருநிறம் கொள்ளும். தூமம் = புகை. சாடின = அழித்தன. புகர் = நிறம், செந்நிறம்.

*முருகக் கடவுளின் பாணங்கள், வண்டுகள் உலாவுகின்ற வெற்றி மாலையையுடையனும் சூரபன்மன் கொண்ட அக்கினி வடிவத்தை விரைவில் அழித்துத் திரும்பித், தேவசேனாபதியாம் முருகக் கடவுள் பக்கத்து வந்து சேர்ந்தன.* (404)

வாகை = வெற்றி. தார் = மாலை. ஓராய் = நீங்கி.

*அப்பொழுது தான்கொண்ட அக்கினி வடிவம் நீங்கப் பெற்ற சூரபன்மன், பெருங் கோபம் கொண்டு பிரசண்ட வாயுவின் வடிவைப் பொருந்தி நின்று முழங்க, வேற்படையை யுடைய எமது பிதாவாகிய முருகக்கடவுள் புன்சிரிப்புடன் பார்த்தருளினர்.* (405)

எல்லை = பொழுது. ஓதை = வாயு. ஞாங்கர் = வேல்.

*முருகக் கடவுள் ஓர் இலக்கம் பாணங்களைத் தெரிந்தெடுத்துச் சிறந்த தமது வில்லில் தொடுத்து நீவிர் சர்ப்பங்களின் வடிவைப் பொருந்தி, பகைவன் கொண்ட வாயுவடிவத்தை அழித்து வாருங்கள் என்று பணித்து விடுத்தருளினர்.* (406)

ஆய்ந்து = தெரிந்து. வாய்ந்த = சிறந்த. பாந்தள் = பாம்பு. படுத்து = அழித்து.

*இறைவன் ஏவிய கூரிய பாணங்கள் ஆகாய வழியாற் சென்று, படங்களை விரித்துக் காட்டி, பல தலைகளையுடைய கொடிய சர்ப்பங்களின் வடிவங்களைப் பெற்றுச், சூரபன்மன் கொண்ட வாயுவடிவத்தின் மீது பாய்ந்தன.* (407)

அயில் = கூரிய. செவ்விதிற்கிளர் = உக்கிரம் கொண்டு சொலிக்கின்ற. பன்னகம் = பாம்பு.

கூற்றம் அன்ன கொடும் தொழில் மன்னவன்
காற்றின் யாக்கை கரப்ப மிசைந்திடா
ஆற்றல் மேவி அணைந்து உடன் மீண்டன
வேல் தடக்கை விமலன் புடை தனில். (408)

இன்ன தன்மையில் ஈரிரு நாள் வரைத்
துன்னலன் தொலையாது அமர் ஆற்றியே
பின்னும் மாயையின் பெற்றியைப் புந்தியுள்
உன்னியே பல் உருக்கொடு தோன்றினன். (409)

வேறு

ஓவா இயல் புரி மூவரில் ஒருசார் வரும் ஒழியும்
தேவா சுரர் பிறராம் என ஒருசார் வரும் சேண் ஆள்
கோ ஆம் என ஒருசார் வரும ஒருசார் வரும் குறள் போல்
ஆ ஆ எனக் கொடும் கூற்றென ஒருசார் வருமன்றே.

பேயாம் என ஒருபால் வரும் பிறழ் வெம்புகைப் படலைத்
தீயாம் என ஒருபால் வரும் திசை எங்கணும் சுழலும்
ஓயா மருத்தினம் ஆம் என ஒருபால் வரும் அகிலம்
பாயா எழுதிரை ஆழியின் ஒருபால் வரும் பரவி. (411)

ஒருசார் விடம் என வந்திடும் ஒருசார் வரும் பணி போல்
ஒருசார் முகில் என வந்திடும் ஒருசார் வரும் இருள் போல்
ஒருசார் உரும் என வந்திடும் ஒருசார் வரும் வரை போல்
ஒருசார் தனது உருவாய் வரும் ஒருசார் வரும் கதிர்போல்.



பாய்ந்த பாணங்கள் யமனைப்போன்ற கொடுந்தொழிலைச் செய்து வரும் சூரபன்மன் கொண்ட வாயுவடிவத்தை அழித்து, வெற்றியுடன் வேலைத்தாங்கிய பெருமையுற்ற திருக்கரத்தையுடைய சுப்பிரமணியப் பெருமானிடத்து வந்து சேர்ந்தன. (408)

யாக்கை = வடிவம். கரப்ப = மறைய, இல்லையாம்படி.
மிசைந்திடா = அழித்து.

சூரபன்மன் நான்கு தினமளவும் பின் வாங்காது நின்று போரினைச் செய்து மேலும் மாயப் போர் செய்யும் தன்மையை மனதில் நினைத்துப் பலவேறு வடிவங்களைக் கொண்டு தோன்றினன். (409)

துன்னலன் = பகைவன். பெற்றி = தன்மை.

ஒழியாது படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலைச் செய்யும் பிரம, விஷ்ணு, உருத்திரர்களைப் போல வடிவங்களைக் கொண்டு வருவான். இந்திரனைப் போலவும், தேவர்களையும் அசுரர்களையும் போலவும் வருவான். பூதர்களைப் போலவும் வருவான், கொடிய யமனைப் போலவும் வருவான். (410)

ஓவா = ஒழியாத. சார் = பக்கம். சேண் = ஆகாயம்.
கோ = அரசன், இந்திரன்.

ஒரு பக்கத்தில் பிசாசுகளைப் போலவும் வருவான். மற்றொரு பக்கத்தில் வெய்ய புகைப் படலங்களைக் கொண்ட ஊழித் தீயைப் போலவும் வருவான். இன்னொரு பக்கத்தில் ஒழியாத ஊழிக் காற்றுப் போலவும் வருவான் மற்றொரு பக்கத்தில் ஊழிக்காலத்தில் பெருகி வரும் திரைகளையுடைய சமுத்திரங்களைப் போலவும் வருவான். (411)

பால் = பக்கம். பிறழ் = பிரிந்து. மருத்து = வாயு. அகிலம் = பூமி.
ஆழி = கடல்.

ஒரு பக்கத்தில் நஞ்சைப் போலவும் வருவான், மற்றொரு பக்கத்தில் சர்ப்பங்களைப் போலவும் வருவான், மறுபக்கத்தில் மேகங்களைப் போலவும் வருவான். இன்னொரு பக்கத்தில் இடிகளைப் போலவும் வருவான். இருட் படலங்களைப் போலவும் வருவான். இருளை நீக்குகின்ற ஒளிவடிவு போலவும் வருவான். மலைகளைப் போலவும் வருவான். (412)

விடம் = நஞ்சு. பணி = பாம்பு. உரும் = இடியேறு. வரை = மலை.

தொக்கு ஆர் பல படையாம் என ஒரு சார் வரும் சூழும்
திக்கு ஆர் களிற்று இனமாம என ஒருசார் வரும் சினத்தால்
நக்கு ஆர் தரும் அரி ஏறு என ஒரு சார் வரும் நலிவால்
அக்கால் வரு தனிப் புள் என ஒருசார் வரும் அன்றே.

கரியின் முகத்துணைவன் என ஒருசார் வரும் கடுங்கண்
அரியின் முகத்து இளையோன் என ஒருசார் வரும் அளக்கர்ப்
பரியின் முகத்தினில் வந்திடு பாழிக்கனல் படுக்கும்
எரியின் முகத்தனி மைந்தனில் ஒருசார் இடை ஏகும்.

எல்லோன் தனை வெகுண்டோன் என ஒருசார் வரும் ஏனைச்
சொல் ஓங்கிய திறல் மைந்தரில் ஒருசார் வரும் சூழ்ச்சி
வல்லோன் என ஒருசார் வரும் மானப்படை மள்ளர்
பல்லோர்களும் செறிந்தால் என ஒருசார் இடைப் படரும்.

இத்தன்மையில் அவுணர்க்கு இறை யாண்டும் செறிவாகி
அத்தன் தனைப் புடை சூழ்தலும் அவை நோக்கிய இமையோர்
சித்தம் தளர்ந்து இரிகுற்றனர் திரிகுற்றனர் அம்மா
கத்தும் கடற் புவிமாய்ந்திடு காலத்து உயிர் எனவே.

வேறு

அங்கு அதன் நிலைமை நோக்கி ஆயிரகோடி வாளி
செங்கையில் வாங்கி வாங்கும் திரு நெடும் சிலையில் பூட்டி
இங்குள அமரர் தங்கள் இருஞ்சிறை அகற்ற வந்து
பங்கயற் சிறை செய்திட்ட பகவன் மற்றிதனைச் சொல்வான். (417)



*தனது பல சேனைகளைப் போலவும் வருவான். அட்டயானைகளைப் போலவும் வருவான். விஷ்ணுவாகிய நரைசிங்கத்தைப் போலவும் வருவான். அந்நரைசிங்கத்தை அழிக்கும் பொருட்டு அந்நாளில் வந்த ஒப்பற்ற வீரபத்திரராகிய சரவப் பறவையைப் போலவும் வருவான்.* (413)

தொக்கு = கூட்டமாகி. நலிதல் = வருத்தல். அழித்தல் கால் = காலம்.

*தாரகாசூரனாகிய தனது இளைய சகோதரனைப் போலவும் வருவான். சிங்கமுகாசுரனாகிய சகோதரனைப் போலவும் வருவான், பெரிய வடவாமுகாக்கினியையும் அழிக்கவல்ல வெப்பமான முகமுடைய அக்கினிமுகாசுரன் எனப்படும் தன் புத்திரனைப் போலவும் வருவான்.* (414)

கடுங்கண்மை = தறுகண்மை. அளக்கர் = சமுத்திரம்.
பரியின் முகம் = வடவா முகாக்கினி (வடவை = பெண் குதிரை).
பாழி = பரந்த. படுக்கும் = அழிக்கும்.

*பானுகோபனாகிய தனது மகனைப் போலவும் வருவான். புகழ் பொருந்திய ஏனைய புத்திரர்களைப் போலவும் வருவான், தன் மந்திரியாகிய தருமகோபனைப் போலவும் வருவான, அபிமானத்தையுடைய சேனைவீரர் பலரும் திரண்டு வந்தாற் போலவும் வருவான்.* (415)

எல் = சூரியன். சோல் = புகழ். சூழ்ச்சி வல்லோன் = மந்திரி.
மானம் = அபிமானம். மள்ளர் = வீரர்.

*சூரபன்மன் இவ்வாறு எமது பிதாவாகிய முருகக்கடவுளை எம்மருங்குமாய்ச் சுற்றிக்கொள்ள, அதனைக் கண்ட தேவர்கள், உலகம் அழிகின்ற ஊழிக்காலத்துள்ள உயிர்கள் போல மனத்தளர்ச்சியோடு உலைந்து திரிந்தார்கள்.* (416)

யாண்டும் = எவ்விடங்களிலும். இரிகுற்றனர் = பின்வாங்கினர்.
கத்தும் = ஒலிக்கும். புவி = நிலவுலகம்.

*தேவர்களுடைய நீடித்த சிறையை நீக்குதற் பொருட்டுத் திருவவதாரஞ் செய்து, பிரம தேவரைச் சிறையில் வைத்தருளிய முருகக் கடவுள், சூரபன்மன் மாயாவடிவங்களைக் கொண்டு சூழ்ந்ததனைப் பார்த்து, தமது திருக்கரத்தில் ஆயிரகோடி அம்புகளை எடுத்து, அழகிய வில்லில் தொடுத்துப் பின்வருமாறு அருளிச் செய்வாராயினர்.* (417)

இருஞ்சிறை — நீடித்தசிறை. பங்கயன் = பிரமா.

தெவ் அடு பகழி என்னும் தேவிர்காள் நீவிர் ஏகி
மெய் வலி படைத்து நின்ற மேவலன் ஒருவன் கொண்ட
அவ் உரு அனைத்தும் எய்தி ஆங்கவன் மாயம் முற்றும்
இவ் விடை அட்டுநீக்கி ஏகுதிர் என்று விட்டான். (418)

விட்டிடு சிலீமுகங்கள் விரைந்து போய் வெகுளி வீங்கி
ஓட்டலன் கொண்ட ஒவ்வொன்று உருவினுக்கு
எழுமை ஆகி
எட்டுள புலமும் வானும் இருநில வரைப்பும் ஈண்டி
அட்டு அடல் பெற்ற அம்மா அனையவன் மாயம் தன்னை.

உடல் சினமோடு சூரன் ஒருவனாய் அங்கண் நின்றான்
அடல் வலிகொண்ட வாளி அந்தர நெறியால் மீண்டு
புடை உறு சரங்களோடு பொள் எனத் தூணி புக்க
சுடர் நெடும் தனிவேல் அண்ணல் அவன்
முகம் நோக்கிச் சொல்வான். (420)

## முருகப் பெருமானின் திருப்பெருவடிவம்

வெம்புயல் இடையில் தோன்றி விளிந்திடு மின்னு என்ன
இம்பரில் எமது முன்னம் எல்லை இல் உருவம் கொண்டாய்
அம்பினில் அவற்றை எல்லாம் அட்டனம் அழிவிலாத
நம்பெரு வடிவம் கொள்வம் நன்று கண்டிடுதி என்றான்.

கூறி மற்றினைய தன்மை குரை கடல் உலகம் திக்கு
மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்
ஆறு மாமுகத்து வள்ளல் மேனியில் அமைந்ததன்றி
வேறிலை என்ன ஆங்கோர் வியன் பெருவடிவம்
கொண்டான். (422)



பகைவர்களை அழிக்கின்ற அம்புகளாகிய தெய்வங்காள்! சூரபன்மன் எடுத்துக் கொண்ட வடிவங்களனைத்தையும் நீவிரும் எடுத்து, அவன் கொண்ட மாயா வடிவங்களை யெல்லாம் அழித்துவிட்டு நம்மிடத்துக்குத் திரும்பிவரக் கடவீர் என்று கூறி விடுத்தருளினார். (418)

தெவ்=பகைவன். அடுதல்=அழித்தல். மேவலன்=பகைவன்.

விடப்பட்ட அம்புகள் விரைந்து சென்று கோபம் கொண்டு, சூரபன்மன் கொண்ட வடிவம் ஒவ்வொன்றினுக்கும், எழு மடங்கு வடிவங்களை யெடுத்து, அட்ட திக்குகளிலும் ஆகாயத்திலும் பூமியிலும் பரந்து அவன் கொண்ட மாயா வடிவங்களை எல்லாம் அழித்து வெற்றி பெற்றன. (419)

சிலீமுகம்=அம்பு. வெகுளி=கோபம். வீங்கி=மிகுந்து.
புலம்=திக்கு. வரைப்பு=இடம். அடல்=வெற்றி.

சூரபன்மன் பெரும் கோபத்துடன் தானொருவனாகவே தனித்து அவ்விடத்து நின்றான். வெற்றியைப் பெற்ற அம்புகள் ஆகாய மார்க்கமாய்த் திரும்பிவந்து இறைவனுடைய அம்புக் கூட்டினுள் இருந்தன. ஒளிபொருந்திய ஒப்பற்ற வேற்படையையுடைய சுப்பிரமணியப் பெருமான் சூரபன்மனது முகத்தைப் பார்த்து அருளிச் செய்வாராயினர். (420)

புடை=பக்கம். தூணி=அம்புக் கூடு. சுடர்=ஒளி.

மேகத்திலிருந்து மின்னல்கள் தோன்றித் தோன்றி அழிதல் போல, நமது முன்னிலையில் அளவற்ற மாயா வடிவங்களை எடுத்து நமக்குக் காட்டினாய். அவைகளையெல்லாம் நமது அம்புகளாலே அழித்து விட்டோம். நமது அழிவற்ற பெரிய திருமேனியைக் கொள்கின்றோம். நன்கு தரிசித்துக் கொள்வாயாக என்று அருளிச் செய்தார். (421)

வெம்மை புயல்=வெம் புயல். விளிந்திடும்=அழிந்துவிடும்.
பெரு=அழிவற்ற.

முருகக்கடவுள் இவ்வாறு கூறியருளி, ஒலிக்கின்ற சமுத்திரங்களும், உலகங்களும், திக்குகளும், அண்டங்களும், தேவர்களும், உயிர்களும் ஏனைய பொருள்களும் ஆறு திருமுகங்களை யுடைய முருகப் பெருமானது திருமேனியின்கண் அமைந்து கிடப்பனவாமன்றி, அவற்றுள் புறம்பாக இருக்கவில்லை, என்று கூறத்தக்கனதான மிகப்பெரிய ஒரு வடிவத்தைக் கொண்டருளினார், (422)

குரை=ஒலிக்கின்ற. வியன்=மிக.

உள் அடி வரைகள் யாவும் ஒண் புறம் அடியில் நீத்தம்
வள் உகிர் விரல்கள் முற்றும் வான் உடுமேறு நாள் கோள்
எள் அரும் பரடு தன்னில் இரும் புனற்கு இறைவன்
சோமன்
நள் இருள் அனைய மேனி நிருதியோடு அரக்கர் நண்ண.

ஒண் = ஒள், சிறந்த. வள் = செறிந்த. உகிர் = நகம். நாள் = நட்சத்திரம். கோள் = கிரகம். எள் = இகழ. அரும் = அரிய. இரும் = பெரிய. புனல் = நீர். இரும் புனற்கு இறைவன் = சூரியன். சோமன் = சந்திரன். நள் = மிகுதி, தடித்த.

அடி திரள் கணைக்கால் தன்னில் ஆரிடர் மணிகள் சானு
வடிவு அமை முழந்தாள் விஞ்சை வானவர் ஆதியானோர்
தொடைதனில் மகவான் மைந்தன் தொடைமுதல் நடுவன்
காலன்
கடி தடத்து அசுரர் பக்கம் கடவுளர் யாரும் நிற்ப. (424)

ஆரிடர் = முனிவர் விஞ்சையர் = வித்தியாதரர். கடிதடத்து = அரையின் முற்பக்கத்தில். பக்கம் = விலாப்புறம்.

இருப்பினில் நாகர் கோச எல்லையில் மருந்தே உந்திக்
கருப்படும் உயிர்கள் மார்பில் கலைகள் முன்னூலில் போதம்
அருப்பு அயில் உரோமத்து அண்டம் அங்கையில்
அகில போகம்
திருப் பெரும் தடந்தோள் வைப்பில் செங்கண் மால்
விரிஞ்சன் மேவ. (425)

இருப்பு = மூலாதாரம். நாகர் = சர்ப்ப சாதியார். கோசம் = இலிங்கம். மருந்து = அமிர்தம். உந்தி = நாபி. போதம் = ஞானம். அரும்பு = அருப்பு. அயில் = நுண்ணிய. வைப்பு = இடம்.

மெல் இதழ் அனைய செங்கை விரல் மிசை அணங்கின்
நல்லார்
ஒல் ஒலி அங்கி கண்டம் ஒப்பிலா மணி வாய் வேதம்
பல் இடை எழுத்து நாவில் பரம ஆகமத்தின் பேதம்
நல் இதழ் மனுவின் விஞ்சை நாசியில் பவனன் மன்ன.

அணங்கின் நல்லார் = தேவமகளிர். ஒல் ஒலி = ஒலிவகைகள். இதழ் = அதரம். விஞ்சை = மந்திரம். பவனன் = வாயு.

(2)



பாதங்களின் மத்திகளில் மலைகளும் மண்ணுலகம் முதற் கீழுள்ளவுலகங்களும் அமையவும், பாதங்களின் முற்பாகங்களில் நீர் நிலைகளெல்லாம் அடங்கவும், பாத விரல்களெல்லாவற்றிலும் இடியேறுகளும் நட்சத்திரங்களும் கிரகங்களும் பொருந்தவும், புகழத்தகுந்த பரடு என்னும் உறுப்புகளில் பூத சூரியனும் பூத சந்திரனும் தடித்த இருளை நிகர்த்த வடிவுடைய நிருதி என்பவனும் மற்றைய அரக்கர்களும் அமையவும், (423)

திரண்ட வடிவுடைய கணைக்கால்களில் முனிவர்களும் சிந்தாமணி முதலிய மணிவகைகளும் அமையவும், சானு என்னும் பெயரையுடைய அழகிய முழந்தாள்களில் வித்தியாதரர் முதலிய தேவகணத்தவர் நிற்கவும், தொடைகளின் நடுவில் இந்திரனும் சயந்தனும் தங்கியிருக்கவும், தொடைகளின் அடிப்பக்கத்தில் யமனும் காலனும் நிற்கவும், அரையின் முற்பக்கத்தில் அசுரர்கள் அமைந்து நிற்கவும், விலாப்புறங்களில் தேவர்கள் எல்லோரும் அடங்கி நிற்கவும். (424)

மூலாதாரத்தில் சர்ப்பங்கள் அமையவும், இலிங்கம் என்னும் உறுப்பில் அமிர்தம் அமையவும், நாபியில் மற்றைய சீவராசிகள் பொருந்தவும், மார்பினிடத்துச் சகல சாஸ்திரங்களும் அடங்கியிருக்கவும், முன்னூலில் ஞானம் அமைந்திருக்கவும், ரோமங்களில் அண்டங்கள் தங்கியிருக்கவும், அகங்கையில் உலக போகங்கள் அடங்கியிருக்கவும், அழகிய பெருமை வாய்ந்த தோள்களில் திருமாலும் பிரமதேவரும் பொருந்தி நிற்கவும். (425)

செங்காந்தள் பூவிதழைப் போன்ற விரல்களில் சகல போகங்களையும் பொருந்திய தேவமகளிர் இருக்கவும், கழுத்தில் எல்லா ஒலிவகைகளும் அக்கினியும் அமையவும், அழகிய வாயில் நான்கு வேதங்களும் பொருந்தவும், பற்களில் எழுத்துக்கள் பொருந்தவும், நாவினிடத்து சிவாகம பேதங்கள் இருபத்தெட்டும் அமையவும், சிறந்த அதரங்களில் மகா மந்திரங்கள் தங்கியிருக்கவும், மூக்கில் வாயு அடங்கவும். (426)

கருணைகொள் விழியில் சோமன் கதிரவன் செவியில் திக்குத்
திருநுதல் குடிலை வைப்புச் சென்னியில் பரம ஆன்மா
மரபினில் மேவித் தோன்ற மாறிலாது இருக்கும் தொல்லை
ஒரு தனது உருவம் காட்டி நிற்றலும் உம்பர் கண்டார்.

செஞ்சுடர் அநந்த கோடி செறிந்தொருங்கு உதித்த தென்ன
விஞ்சிய கதிர் கான்றுள்ள வியன் பெருவடிவை நோக்கி
நெஞ்சகம் துளங்கி விண்ணோர் நின்றனர் நிமலமூர்த்தி
அஞ்சன்மின் அஞ்சன்மின் என்றருளினன் அமைத்த கையான். (428)

அண்டர்கள் யாரும் எந்தை அருள்முறை வினவி உள்ளம்
உண்டிடு விதிர்ப்பு நீங்கி உவகையால் தொழுது நின்றார்
தண்துளி வரையதென்னத் தணப்பறச் சிதறும் ஊழிக்
கொண்டலின் தோற்றம் நோக்கிக் குலவுறும் மஞ்ஞையே போல். (429)

## முருகப் பெருமான் சூரபன்மனுக்கு ஞான உணர்ச்சி நல்கல்

இறுதியும் முதலும் இல்லா இப்பெரு வடிவம் தன்னைக்
கறைவிடம் உறழும் சூரன் கண்டு விம்மிதத்தில் நிற்ப
அறிவரும் உணர்தல் தேற்றா ஆறுமாமுகத்து வள்ளல்
சிறிது நல்லுணர்ச்சி நல்க இனையன செப்பலுற்றான்.



*கருணை பொழிகின்ற கண்களுள் சந்திரனும் சூரியனும் அமைந்து விளங்கவும், செவிகளிலே திக்குகள் அடங்கவும், நெற்றியில் பிரணவம் நிலை பெற்றிருக்கவும், சிரசில் பரமான்மாவாகிய பரமசிவம் அமைந்து திகழவும், தமது அழியும் தன்மையற்றதாய் விளங்கும் விசுவரூபத்தைக் காட்டிக் கொண்டு நிற்கத் தேவர்கள் கண்டு தரிசித்தார்கள்.* (427)

சோமன் = சந்திரன். கதிரவன் = சூரியன். நுதல் = நெற்றி. குடிலை = பிரணவம். வைப்பு = இடம். மன்ன = நிலைபெற. மரபு = நெறி. மாறு = அழிவு.

*அநந்தகோடி ஆதித்தர்கள் ஒன்றாய்க்கூடி உதயஞ் செய்து தமது பேரொளியைப் பரப்பினால் போன்ற ஒளியையுடைய மிகப் பெரிய பரமேசுவர வடிவத்தைத் தேவர்கள் கண்டு அச்சத்தால் மனநடுக்கங் கொண்டு நின்றார்கள். முருகப் பெருமான் அபய கரம் தந்து அஞ்சாதீர் என்று அனுக்கிரகம் செய்தருளினார்.* (428)

செஞ்சுடர் = சூரியன். விஞ்சிய = மிகுந்த. வியன் = அகலம், சர்வவியாபகம். துளங்கி = நடுங்கி.

*குளிர்ந்த நீரைச் சொரிகின்ற மேகத்தின் வரவைக்கண்டு மகிழ்ச்சியால் கூத்தாடும் மயிற் பறவைகளின் இயல்புபோல, எமது பிதாவாகிய முருகக்கடவுள் அருளிச் செய்த திருவாக்கைத் தேவரனைவரும் கேட்டுத் தம் உள்ளங்களில் கொண்ட நடுக்கம் நீங்கப் பெற்று மகிழ்ச்சியோடு வணக்கம் செய்துகொண்டு நின்றார்கள்.* (429)

விதிர்ப்பு = நடுக்கம். தணப்புஅற = இடையீடின்றி. கொண்டல் = மேகம். குலவுறும் = களிப்புறும்.

*அடியும் முடியும் தெரியாமல் விளங்கிய முருகப்பெருமானுடைய வடிவத்தைக் கரிய நஞ்சையொத்த சூரபன்மன் பார்த்து ஆச்சரியத்தில் அமிழ்ந்தி நின்றான். மெய்ஞ்ஞானிகளும் உணரமுடியாத இயல்புடைய ஆறுமுகப்பெருமான் அவனுக்குச் சிறிது திருவருள் பாலித்தருளினார். அவ்வருட் பேற்றினால் சூரபன்மன் மெய்ப் பொருளை அறிந்து கூறலானான்.* (430)

கறை = கரிய. உறழ்தல் = நிகர்த்தல். விம்மிதம் = அச்சம், ஆச்சரியம். தேற்றா = பாலித்து.

எண் இலா அவுணர் தானை யாவையும் இமைப்பில் செற்று
விண் உலா அண்டம் தோறும் வியன் சமர் ஆற்றி
என் பால்
நண்ணினர் தம்மை எல்லாம் நாம் அறத் தடிந்து வீட்டி
வண்ண மான் தேரும் மீண்டு வராநெறி தடுத்தான்
மன்னே. (431)

திண் திறல் உடையேன் தூண்டும் திறல் படையாவும்
நீக்கி
கொண்ட என் மாயம் முற்றும் கொடும் சரம் அதனால்
மாற்றி
அண்டமும் புவனம் யாவும் அமரரும் பிறவும் தன்பால்
கண்டிடும் வடிவம் ஒன்று காட்டி என கண்முன் நின்றான்.

கோல மா மஞ்ஞை தன்னில் குலவிய குமரன் தன்னைப்
பாலன் என்று இருந்தேன் அந்நாள் பரிசு இவை
உணர்ந்திலேன்யான்
மால் அயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்
மூல காரணமாய் நின்ற மூர்த்தி இம்மூர்த்தி அன்றே.

ஒற்றென முன்னம் வந்தோன் ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிகல் இன்றி நின்ற பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற எல்லாம் துணிபு எனக்
கொண்டிலேனால்
இற்றை இப்பொழுதில் ஈசன் இவன் எனும் தன்மை
கண்டேன். (434)



எண்ணில் அடங்காத எனது சேனைகள் முழுவதையும் ஓர் நொடி நேரத்துள் அழித்து விட்டு, எனது சகோதரர், புத்திரர் ஆகியோரையும் பெயருமில்லாதொழியும்படி அழித்து, அண்டங்கள் தோறும் தொடர்ந்து வந்து என்னுடன் பெரும் போரினைச் செய்து, எனது அழகிய இந்திர மாஞாலத் தேரையும் என்னிடத்துத் திரும்பி வரா வண்ணம் தடுத்து வைத்துக்கொண்டான். (431)

செற்று = அழித்து. வியன் = பெரும். நண்ணினர் = உறவினர். வராநெறி = திரும்பிவரா வண்ணம்.

பேராற்றலையுடைய மகாவீரனாகிய யான் செலுத்திய வெற்றியைத் தரவல்ல படைக்கலங்கள் முழுவதையும் அகற்றி, எனது மயாவடிவங்கள் செயல்கள் அனைத்தையும் கொடுமையைச் செய்யும் அம்புகளாலே அழித்துவிட்டு எல்லா அண்டங்களும் புவனங்களும், தேவர்களும் ஏனைய பொருள்களும் தன்னிடத்துக் காணப்படுகின்ற ஒரு பெரிய வடிவத்தைக் காட்டிக்கொண்டு எனது கண்களுக்குமுன்னாக நிற்கின்றனரே. (432)

மாற்றி = அழித்து.

அழகிய மயில்வாகனத்தின் மீது எழுந்தருளிய முழுமுதல்வராகிய குமாரசுவாமியை அந்நாளில் ஒரு பாலன் என்று எண்ணினேன். இத்தன்மைகளை அறிந்திலேன். பிரமாவுக்கும் திருமாலுக்கும் ஏனைய தேவர்களுக்கும் மற்றும் யாவருக்கும் மூலகாரணமாய் நின்ற மூர்த்தி இம்மூர்த்தி அல்லவா. (433)

கோலம் = நிறம், அழகு. குலவிய = விளங்கிய. பரிசு = தன்மை.

சில தினங்கட்கு முன்னர் என்னிடத்துத் தூதுவனாக வந்த வீரவாகு தேவர் ஒப்பற்ற வேற்படையைக் கையில் கொண்டெழுந்தருளிய வேலாயுதராகிய இவரை "விருப்பு வெறுப்பற்ற பராபர முதல்வர்" என்று கூறினான். அவன் சொன்னவற்றை எல்லாம் உண்மையெனக் கொண்டிலேன். இப்பொழுது இவரே ஈசன் என்னும் தன்மையைக் கண்டேன். (434)

ஒற்று = தூது. பற்று = விருப்பு. இகல் = வெறுப்பு. துணிபு = உண்மை.

மீ உயர் வடிவம் கொண்டு மேவிய தூதன் சொற்ற
வாய்மைகள் சரதம் அம்மா மற்றுயான் பெற்ற அண்டம்
ஆயவை முழுதும் மற்றும் அறுமுகம் படைத்த செம்மல்
தூய பொற்பத ரோமத்தில் தோன்றியே நிற்குமன்றே.

அண்டர்கள் முனிவர் ஏனோர் அகிலமும் காட்டி அண்ணல்
கொண்டிடு படிவம் முற்றும் குறித்து யார் தெரிதற்பாலார்
எண்தரு விழிகள் யாக்கை எங்கணும் படைத்தோர்க்கேனும்
கண்டிட அநந்தகோடி கற்பமும் கடக்குமன்றே. (436)

சீர்க் குமரேசன் கொண்ட திருப் பெரு வடிவம் தன்னில்
ஏர்க் குறும் ஒளியும் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்
ஆர்க் குள உலகில் அம்மா அற்புதத் தோடும் பல்கால்
பார்க் கினும் தெவிட்டிற்றில்லை இன்னும் என் பார்வை
தானும். (437)

நேர் இலன் ஆகி ஈண்டே நின்றிடும் முதல்வன் நீடும்
பேர் உரு அதனை நோக்கிப் பெரிதும் அச்சுறுவதல்லால்
ஆர் இது நின்று காண்பார் அமரரில் அழிவிலாத
சீரிய வரங் கொண்டுள்ளேன் ஆதலில் தெரிகின்றேனால்.

ஆயிரகோடி காமர் அழகெலாம் திரண்டொன்றாகி
மேயின எனினும் செவ்வேள் விமலமாம் சரணம் தன்னில்
தூய நல் எழிலுக்கு ஆற்றாது என்றிடில் இனைய
தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமை யார் வகுக்க வல்லார்.



மிக உயர்ந்த வடிவத்தைக் கொண்டு நம்மிடத்துக்கு வந்த அத் தூதுவன் சொன்னவை எல்லாம் உண்மை. யான் பெற்ற ஆயிரத் தெட்டு அண்டங்களும் பிறவும் பெருமையிற் சிறந்த ஆறுமுகப் பெருமானுடைய பாத தாமரையிலுள்ள ஓர் உரோமத்திலே தோன்றி நிற்கின்றன. (435)

மீ = மேல், மிக. சரதம் = உண்மை.

தேவர்களையும் முனிவர்களையும் மற்றையோரையும், ஏனைய பொருள்களையும் தம்மிடத்துக் காட்டிக் கொண்டு எம்பெருமான் தாங்கி நிற்கும் திருமேனியின் அழகுகள் அனைத்தையும் பார்த்து முடிக்க வல்லவர் யாவர். உடம்பு முழுவதும் அளவற்ற கண்களைப் பெற்றவர்களுக்குத் தாமும் பார்த்து முடிக்க அநந்த கோடிக் கணக்கான கற்பகாலங்கள் வேண்டும். (436)

அகிலமும் = எல்லாம். படிவம் = திருமேனி. எண்தரு = அளவற்ற. யாக்கை = உடம்பு.

சிறப்புகள் பொருந்திய குமாரக்கடவுள் தாங்கி நிற்கும் தெய்வத்தன்மை அமைந்த பெரிய இத்திருமேனியின்கண் உள்ள ஒளியும், சிறப்பும், இளமையும், அழகும் ஆகிய அனைத்தும் இவ்வுலகத்தில் எவருடைய வடிவத்தில் அமைந்து கிடக்கின்றன. ஆச்சரியம் கொண்டு பலமுறை நான் பார்த்தபோதும் என் கண்கள் இனிப் போதும் என்ற திருப்தியைப் பெறவில்லை. (437)

சீர் = பதித்துவச் சிறப்பு. ஏர் = அழகு. தெவிட்டுதல் = அனுபவித்து வெறுத்தல். பார்வை = கண்.

இவ்விடத்தில் ஒப்பற்றவராகி நிற்கின்ற முருகப்பெருமான் கொண்டருளிய பெரியதாகிய இவ்வடிவத்தைப் பார்த்து, தேவர்களாயினும் அச்சமுற்று அல்லவேயன்றி அஞ்சாது நின்று பார்க்க வல்லவர் யாவர் இருக்கின்றார். நான் சிறந்த அழியா வரத்தைப் பெற்றிருந்தேன். ஆதலின் நின்று பார்க்கப் பெறுகின்றேன். (438)

நேர் இலன் = ஒப்பற்றவர். அச்சு = அச்சம். சீரிய = சிறந்த.

ஆயிரகோடி மன்மதர்களுடைய அழகெல்லாம் ஒருங்கு திரண்டு ஒன்றாயினவாயினும், அது இந்தக் கடவுளுடைய நிருமலமாகிய திருவடியின் அழகுக்கு ஒப்பாகாது என்றால், இவருடைய திருப் பெரு வடிவத்துக்கெலாம் உவமை யாவர் விரித்துச் சொல்ல வல்லவர். (439)

மேயின = சேர்ந்தன. விமலம் = மலமின்மை. சரணம் = திருவடி. எழில் = அழகு மாயிரு = மிகப் பெரிய.

இங்கெனது உயிர்போலுற்ற இளவலும் இளைய சேயும்
செங்கையில் வேலோன் தன்னைச் சிறுவனென்று
எண்ணல் கண்டாய்
பங்கயன் முதலோர் காணாப் பரமனேயாகும் என்றார்
அங்கவர் மொழிந்தவாறும் சரதமே ஆனதன்றே. (440)

பங்கயன் = பிரமா. சரதம் = உண்மை.

அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடியின் காறும்
எண்ணிலா ஊழிகாலம் எத்திறம் நோக்கினாலும்
கண்ணினால் அடங்காது உன்னில் கருத்தினால்
அடங்காது என்பால்
நண்ணினன் அமருக்கு என்கை அருளென நாட்டலாமே.

அண்ணல் = பதித்துவப் பெருமை. திறம் = உபாயம். நண்ணினன் = எழுந்தருளினன். என்கை = என்ற செயல். நாட்டலாம் = துணியலாம்.

திருகிய வெகுளிமுற்றும் தீர்ந்தன செருவின் ஊக்கம்
அருகியது உரோமம் புள்ளியாயின விழியில் தூநீர்
பெருகியது இவன்பால் அன்பு பிறந்தன தமியேற்கு
உள்ளம்
உருகியது என்புதானும் உலைமெழுகாகும் அன்றே. (442)

திருகிய = மாறுபட்ட. செரு = யுத்தம். அருகுதல் = சோர்தல்.

போயின அகந்தை போதம் புகுந்தன வலத்ததான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவனம் எங்கும்
மேயின பொருள்கள் முற்றும வெளிப்படுகின்ற விண்ணோர்
நாயகன் வடிவம் கண்டேன் நற்றவப் பயன் ஈதன்றோ.

போதம் = ஞானம். புவனம் = அண்டம். மேயின = பொருந்திய.

சூழுதல் வேண்டும் தாள்கள் தொழுதிடல் வேண்டும்
அம்கை
தாழுதல் வேண்டும் சென்னி துதித்திடல் வேண்டும் தாலு
வாழுதல் வேண்டும் தீமை அகன்று நான் இவற்கு ஆளாகி
ஆழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

தாலு = நாக்கு. ஆழுதல் = ஒழிதல். மானம் = அபிமானம்.



எனது உயிர் போல எனக்குத் துணையாயிருந்த தம்பியாகிய சிங்கமுகனும், மகனாகிய இரணியனும் வேற்படையையுடைய சிவகுமாரரை ஒரு சிறுபாலன் என்று நினைந்து அமைதியாதீர், பிரமா முதலிய தேவர்களாலும் இவ்வியல்பினரென அறிந்துகொள்ள முடியாத பரமசிவனேயாவர் என்று புகட்டினார்கள். அவ்விருவரும் புகட்டிய பொருளும் உண்மையானதேயாகும். (440)

குமாரக்கடவுள் கொண்ட பெரிய திருமேனியின் அழகை அடிமுதல் முடிவரை அளவற்ற யுகமுடிவுகாலம் வரையும் நின்று கண்களால் பார்ப்பேனாகிலும் என் கண்களால் பார்க்கப்பட்டு முடியாவாம். மனத்தினால் நினைத்துப் பார்க்க முயன்றாலும் முடியாவாம். அத்தகைய பெருமையையுடைய இறைவன் என்மீது போருக்கு எழுந்தருளினர் என்று சொல்லப்படும் செயலை என்னிடத்துக் கொண்ட கருணை பற்றி எழுந்த செயல் என்றே கூறலாம். (441)

என்னுடைய மாறுபாடாகிய சினம் முழுவதும் தீர்ந்தன. போரில் ஊக்கம் குறைந்தது. உரோமங்கள் பொடித்தன. கண்களில் ஆனந்தக் கண்ணீர் உண்டாயிற்று. எனக்கு இவரிடத்தே அன்பு உண்டாயிற்று. மனம் உருகியது. எலும்புகளும் உலை முகத்தக்கினியில் வைக்கப்பட்ட மெழுகு உருகுதல் போல உருகுகின்றன. (442)

எனது அகந்தை போயிற்று. ஞானம் உண்டாயிற்று. வலப்புயமும் வலக்கண்ணும் துடித்தன. எல்லா அண்டங்களும் அவற்றில் உள்ள பொருள்களும் வெளிப்படுதற்கிடமாகிய இத் தேவதேவருடைய பரமேசுர வடிவத்தைத் தரிசித்தேன். இது நான் முன்பு செய்த தவத்தின் பயனன்றோ. (443)

என் கால்கள் இக்கடவுளை வலம் வருதல் வேண்டும், கைகள் தொழுதல் வேண்டும், தலை வணங்குதல் வேண்டும், நாக்குத் துதித்தல் வேண்டும். நான், நீக்கக் கடவனவாகிய தீமை செய்தலை விடுத்து இவருக்கு அடிமையாய் வாழுதல் வேண்டும் என்று என் மனம் விரும்புகின்றது. அபிமானமாகிய எனது துர்க்குணம் ஒன்றே என்னைத் தடுத்து நிற்கின்றது. (444)

ஒன்னலர் பொருட்டால் ஏகி உறுசமர் இழைத்த செம்மல்
தன் உரு அதனைக் காண்கில் முனிவதே தகுதியாகும்
வன்னிகொள் வெண்ணெயே போல் வலி அழிந்து
உருகிற்று என்றால்
என்னுடை வயத்த அன்றோ உணர்ச்சியும் யாக்கை முற்றும்.

ஒன்னலர் = பகைவர். உறு = பெரிய. முனிவு = சீற்றம்.
வன்னி = நெருப்பு.

ஏடவிழ் அலங்கல் மார்பன் என்உடன் இந்நாள் காறும்
நீடிய இகல் போர் ஆற்றி நீங்கலான் நின்றதெல்லாம்
ஆடலின் இயற்கை என்றே அறிந்தனன் அஃதான்று
அன்னான்
சாடிய வேண்டும் என்னின் யார் அது தாங்கற்பாலார்.

ஏடு = இதழ். அலங்கல் = மாலை. இகல் = வலிய. நீங்கலான் = நீங்காது. அஃதான்று = அதுவன்றி. சாடிய = கொல்ல.

ஏதமில் அமரர் தம்மை யான் சிறை செய்ததெல்லாம்
தீதென உரைத்தார் பல்லோர் அன்னதன் செயற்கையாலே
வேதமும் அயனும் ஏனை விண்ணவர் பலரும் காணா
நாதன் இங்கு அணுகப் பெற்றேன் நன்றதே ஆனதன்றே.

ஏதம் = குற்றம்.

## சூரபன்மனின் மனமாற்றம்

ஒன்றொரு முதல்வன் ஆகி உறைதரு மூர்த்தி முன்னம்
நின்றமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினித்தளரேன்
அம்மா
நன்றிது ஓர் பெருமை பெற்றேன் வீரனும் நானேயானேன்
என்றுமிப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்பதுண்டோ.

ஒன்று = ஒப்பற்ற.

வான் உளோர் சிறையை நீக்கி வள்ளலை வணங்கி இந்த
ஊன் உலாம் உயிரைப் போற்றி அளியர்போல்
உறுவன் என்னில்
ஆனதோ எனக்கிது அம்மா ஆயிரகோடி அண்டம்
போனதோர் புகழும் வீரத்தன்மையும் பொன்றிடாவோ.

அளியர் = சிறியோர். உறுவன் = வாழ்வேன் ஆனது = தகுந்தது.
போன = பரந்த. பொன்றிடாவோ = அழிவுறாதோ.



தேவர்களாகிய என்பகைவர்க்கு உதவிசெய்யும் நிமித்தமாக வந்து என்னுடன் பெரும் போரைச் செய்த முருகப்பெருமான் கொண்ட பெருவடிவத்தைக் கண்டவுடன், நான் கோபம் கொள்வதே தகுதியாகும். அங்ஙனமன்றி அழல் இடைப்பட்ட வெண்ணெய் போல என் மனமும் உடலும் உருகுகின்றன. இம்மனமும் உடலும் இவர் வயத்தனவே அன்றி என் வயப்பட்டனவாய் இல்லை. (445)

இதழ் விரிந்த கடப்பமலர் மாலையணிந்த சிவகுமாரர் சிறியேனுடன் இன்றுவரையும் போர் செய்துகொண்டு நீங்காது நின்ற செயல்கள் அனைத்தும் என்னையாட்கொள்ளும் பொருட்டுக் கொண்ட திருவிளையாடல் என்றே அறிந்தேன். இவர் என்னைக் கொன்று வெற்றிபெற விரும்பியிருப்பாராயின் அதனைத் தடுக்கக் கூடியவர் யாவர். (446)

எனக்கு ஒரு குற்றமும் செய்யாத தேவர்களை யான் சிறை செய்தது தவறு என்று பலரும் சொன்னார்கள். அத் தேவர்களைச் சிறை செய்தமையாற்றான், வேதங்களும், பிரமாவும், மற்றைய தேவர்களும் பலரும் காணப்பெறாத இக் கடவுள் இங்கு எழுந்தருளப் பெற்றேன். ஆதலால் நான் தேவர்களைச் சிறை செய்தது நன்மையாயிற்று. (447)

ஒப்புயர்வற்ற முழுமுதற் கடவுளாகிய முருகக்கடவுளுடைய முன்னிலையில் இந்நாள் வரையும் எதிர்ந்து நின்று போராடிவிட்டேன். இனிமேல் நான் மனஞ் சோரமாட்டேன். முருகப் பெருமானுடன் போராடிய பெருமையையும் பெற்றுக் கொண்டேன். வீரனும் நானேயாயினேன். இப்புகழுடம்புமாத்திரமே எஞ்ஞான்றும் நிலைத்திருக்கும். இப் பூதவுடம்பு எப்பொழுதாவது அழியும். (448)

தேவர்களுடைய சிறையை நீக்கிவிட்டு அருள் வள்ளலாகிய முருகக்கடவுளை வணங்கிக் கீழ்ப்படிந்து உடல் உயிர் வாழ்க்கையைப் பொருட்படுத்தி வாழ்கின்ற சிறியர்போல வாழப்பெறுவேனானால், எனக்கு இச்செயல் தகுந்ததாகுமா? எனது வீரமும் ஆயிரகோடி அண்டங்களிலும் பரவிநிற்கும் எனது பெரும் புகழும் அழியும். (449)

## முருகப் பெருமானின் செயல்

என்ன இத்தகைய பன்னி நிற்றலும் எவர்க்கும் மேலோன்
உன்ன அரும் தகைத்தாய் நின்ற ஒருபெரும் தோற்றம் நீத்து
மின் இவர் கலாபம் ஊர்ந்த வியன் உருக்கொண்டு நண்ணித்
துன்னலன் போதம் மாற்றித் தொன்மை போலாகச் செய்தான். (450)

காரணன் ஆகித் தானே கருணையால் எவையும் நல்கி
ஆர் உயிர் முழுதும் மேவி அனைத்தையும் இயற்றி நிற்கும்
பூரண முதல்வன் மைந்தன் போதகம் அளித்து மாற்றிச்
சூரனை மயக்கஞ் செய்யும் சூழ்ச்சியோ அரியதன்றே. (451)

அத்தகு காலை தானே அவுணர் கோன் உணர்ச்சி நீங்கிச்
சித்தமது இடையே தொல்லைச் சீற்றமும் இகலும் உற்ற
மெய்த்தகு குழவித் திங்கள் விண்ணெறி செல்லச் செல்லும்
எத்திசை இருளும் அன்னது அகன்றுழி எழுந்ததே போல்.

பிணிமுகம் உயர்ந்து நின்ற பெருந்தகை தோற்றம் காணாஉத்
தணிவரும் சினம் மேற்கொண்டு சமரின்மேல் ஊக்கம் சேர்த்தி
அணியது என் திண்மை என்னு அங்கையோடு அங்கை தாக்கி
மணிமுடி துளக்கி நக்கு மற்றிவை புகலல் உற்றான். (453)

## சூரபன்மனின் அஞ்ஞான நிலை

சேய் உரு அமைந்த கள்வன் செருவினை இழைக்கல் ஆற்றான்
மாயையின் ஒன்று காட்டி எனை இவண் மையல் செய்தான்
ஆயது துடைத்தேன் என்றால் ஆர் எனக்கு ஒப்புண்டு என்றும்
காயமது அழிவிலாதேன் கருத்து அழிகின்றதுண்டோ.



*சூரபன்மன் இவ்வாறு நினைத்துக்கொண்டு முருகன் சந்நிதியில் நிற்க, முதல்வராகிய முருகக்கடவுள் நினைத்தற்கரிய ஒப்பற்ற பரமேசுவர வடிவத்தை மறைத்து, ஒளி விளங்குகின்ற மயில்மேல் அழகராய் குழந்தை வடிவைத்தாங்கி நின்று, பகைவனாகிய சூரபன்மனிடத்து விளக்கமுற்றிருந்த மெய்ஞ்ஞானத்தை மறைத்து முன்போலச் செய்தருளினார்.* (450)

பன்னி = சொல்லி. நீத்து = மறைத்து. இவர்தல் = ஏறுதல், பொருந்துதல். கலாபம் = ஆண்மயில்.

*தாமே நிமித்த காரணமாய் நின்று ஆன்மாக்கள் மீது கொண்ட பெருங் கருணையினால் தனு கரண புவன போகங்கள் அனைத்தையும் படைத்து, சிறந்த உயிர்கள் தோறும் கலந்து நின்று எவற்றையும் இயற்றியியற்றிக்கொண்டு நிற்கும், பரிபூரண முதல்வராகிய சிவபிரானுடைய திருக்குமாரராகிய முருகக் கடவுள் சூரபன்மனுக்கு மெய்யறிவைச் சிறிது பாலித்து, பின்னர் அவ்வறிவை மறைத்து, அவனை மயங்கச் செய்த உபாயம் அவருக்கு அரியதன்று.* (451)

ஆர் = சிறந்த. போதகம் = ஞானம்.

*பிறைச்சந்திரன் ஆகாய வழியிற் சென்றுகொண்டிருந்தபோது, மறைந்திருந்த இருள் முழுவதும், அச்சந்திரன் மறைந்தவுடன் தோன்றுதல்போல, சூரபன்மனுடைய உள்ளத்தில் விளக்கமுற்றிருந்த மெய்யறிவு மறைந்து முன்னர் உள்ள மயக்கம் மீதூர்ந்து கோபமும் பகையும் உண்டாயின.* (452)

சீற்றம் = கோபம். இகல் = பகை. குழவி = பாலன், பிறை.

*மயிலின் மேல் விளங்கிய முருகக் கடவுளின் திருக்கோலத்தைப் பார்த்து, கோபம் அதிகரிக்கப்பெற்று, போர் செய்தலில் ஊக்கம் கொண்டு எனது வலிமையின் நிலைமை அழகாய் இருந்ததென்று கூறிக் கைகளைத் தட்டித் தனது இரத்தின முடியை அசைத்துச் சிரித்துப் பின்வருமாறு கூறுவானாயினன்.* (453)

பிணிமுகம் = மயில். காணாஉ = கண்டு. அணியது = அழகியது. அங்கை = அகங்கை. துளக்கி = அசைத்து.

*குழந்தை வடிவத்தையுடைய கள்வனாகிய கந்தன் என்னுடன் போராடுதற்குச் சக்தியற்றவனாய் மாயாசக்தியினால் ஒரு பெரு வடிவத்தை எனக்குக் காட்டி என்னை மயக்கித் தன் வசமாக்கி விட்டான். அந்தப் பெருமயக்கத்தை நீக்கி விட்டேனானால் எனக்கு யாவர் ஒப்பாகத்தக்கவர். உடம்பு ஒருகாலத்தும் அழியப் பெறாதவனாகிய யான் மனநிலை அழியலாகுமோ.* (454)

செரு = யுத்தம். துடைத்தல் = அகற்றுதல். கருத்து = மனம்.

குன்றினை எறிந்த வேல்கைக் குமரனோடு அமரது ஆற்றி
வென்றிடுகின்றேன் மெல்ல மேல் அதுநிற்க இந்த
வன்திறல் சமரை மூட்டி நின்ற வானவரை எல்லாம்
தின்று உயிர் குடித்து முன் என்சினம் சிறிது
அகல்வன் என்றான். (455)

ஆயது துணிவாக் கொண்ட அவுணர்கள் மன்னன் பின்னும்
தீயதோர் தொல்லை மாயச் சீர்கொள் மந்திரத்தைப் பன்னி
ஞாயிறும் மருட்கை கொள்ள ஞாலமும் ககனம் முற்றும்
மாஇருள் உருவங்கொண்டு மறைந்து நின்று
ஆர்க்கலுற்றான். (456)

தெண் திரை நேமி தன்னில் தீவிடம் எழுந்த தென்ன
எண் திசை எல்லை முற்றும் இருநில வரைப்பும் எல்லா
அண்டமும் ஆகி ஈண்டும் ஆர்இருள் வடிவை வானோர்
கண்டனர் அவுணன் மாயம் ஈதெனக் கலக்கமுற்றார்.

அத்துணை அவுணர் மன்னன் அவ் இருளிடையே பாய்ந்து
பத்திகொள் சிகரம் அன்ன பல்தலை அளவை தீர்ந்த
கைத்தலம் உளதோர் யாக்கை கதுமெனக் கொண்டு விண்ணோர்
மெய்த்தொகை நுகர்வான் உன்னி விண்ணிடைக் கிளர்ந்து சென்றான். (458)

ஆடு இயல் கொண்ட சூரன் அந்தரத்து எழலும் வானோர்
கூடிய ஓதி தன்னால் குறிப்பினால் தெரிந்து நம்மைச்
சாடிய வருவன் என்னாத் தலைத்தலை சிதறி நில்லாது
ஓடினர் கூற்றை நேர்ந்த உயிரென இரங்கலுற்றார். (459)



கிரவுஞ்ச மலையைப் பிளந்த வேலைக் கொண்ட கையினையுடைய முருகனுடன் பின்னர் போரினைப் புரிந்து வெல்லுவேன். இந்த வலிய போரை மூட்டிவிட்டுக் கொண்டிருக்கின்ற தேவர்களையெல்லாம் முதலிற் கொன்று, அவர்களுடைய உயிரைப் பருகி எனது கோபத்திற் சிறிதளவை நீக்கிக் கொள்வேன் என்று கூறினான். (455)

எறிந்த = பிளந்த.

தேவரைக் கொல்ல எண்ணிய சூரபன்மன் தீமையை விளைக்க வல்ல ஒரு மாய மந்திரத்தை உச்சரித்துச் சூரியனும் மயக்கமுறும்படி பூமியிலும் ஆகாயம் முழுவதிலும் பரவும்படி தடித்த இருள் வடிவத்தைக்கொண்டு மறைந்துநின்று ஆரவாரிக்கத் தொடங்கினான். (456)

பன்னி = உச்சரித்து. ஞாயிறு = சூரியன். மருட்கை = மயக்கம். ஞாலம் = பூமி. ககனம் = ஆகாயம்.

தெள்ளிய திரைகளையுடைய பாற் சமுத்திரத்தினின்றும் ஆலகாலம் எழுந்தபோது, அதன் இருள் எவ்விடத்தும் மூடிக்கொண்டது போல, எட்டுத் திக்குகளிலும் பெரிய நிலவுலகம் முழுவதிலும் எல்லா அண்டங்களிலும் பொருந்தி நிறைந்த மாய இருளைத் தேவர்கள் கண்டு, இது சூரபன்மனுடைய மாயத்தால் விளைந்ததாகும் என்று மனக் கலக்கம் கொண்டார்கள். (457)

தெண் = தெள். தெள்ளல் = கொழித்தல். நேமி = சமுத்திரம்.

அப்பொழுது சூரபன்மன் தான்கொண்ட இருள் வடிவத்துள் நின்று தேவர்களை விழுங்கக் கருதி, வரிசையாய் அமைந்த மலைச் சிகரங்களைப் போல, பல தலைகளையும் கைகளையும் உடைய ஒரு பெரிய வடிவத்தைக் கொண்டு ஆகாயத்தில் உயர்ந்து போனான். (458)

பத்தி = வரிசை. சிகரம் = மலைச் சிகரம். நுகர்வான் = நுகரும்படி.

விழுங்கும் செயலை மேற்கொண்ட சூரபன்மன் ஆகாயத்தில் எழுந்து பாய, தேவர்கள் தமது ஞானத்தாலும் குறிப்பினாலும் அறிந்து நம்மைக் கொல்லும்பொருட்டே வருகின்றான் என்று சொல்லிக் கொண்டு ஓடி யமனை எதிர்ந்த உயிர்கள்போல மனம் வருந்தினார்கள். (459)

ஓதி = ஞானம். சாடிய = கொல்ல. நேர்ந்த = எதிர்ந்த.

## தேவர்கள் முருகப் பெருமானை வேண்டுதல்

நண்ணினர்க்கு இனியாய் ஓலம் ஞானநாயகனே ஓலம்
பண்ணவர்க்கு இறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற்கு அரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமான் நல்கும் கடவுளே ஓலம் ஓலம்.

தேவர்கள் தேவே ஓலம் சிறந்த சிற்பரனே ஓலம்
மேவலர்க்கு இடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க்கு எளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரும் ஆகிநின்ற மூர்த்தியே ஓலம் ஓலம். (461)

கங்குலின் எழுந்த கார்போல் கனைஇருள் மறைவின் ஏகி
நுங்கிய செல்வான் சூரன் ஓடவும் நோன்மை இல்லேம்
எங்கினி உய்வம் ஐய இறையும் நீ தாழ்க்கல் கண்டாய்
அங்கவன் உயிரை உண்டு எம் ஆவியை அருளுக என்றார்.

தேற்றலை போலும் ஈது சிறிது நீ பாணிப்பாயேல்
ஆற்றலின் மறைந்து நின்றே அகிலமும் தானே உண்ணும்
மாற்றலன் ஆவிதன்னை வாங்குதி வல்லை என்னப்
போற்றினன் முதல்வன் தன்னை மயூரமாய்க் கொண்ட புத்தேள்.

அங்கவர் மொழியும் வெய்யோன் ஆற்றலும் தெரிந்து செவ்வேள்
செம்கை அதொன்றில் வைகும் திருநெடு வேலை நோக்கி
இங்கிவன் ஆகம் போழ்ந்தே ஏகுதி இமைப்பின் என்னத்
துங்கமது உடைய சீர்த்திச் சூரன்மேல் செல்லத் தொட்டான். (464)



தஞ்சம் என வந்த அன்பர்களுக்கு இனியவரே அடைக்கலம், ஞான முதல்வரே அடைக்கலம், முனிவர்க்குத் தலைவரே அடைக்கலம், பரஞ்சோதி வடிவாயுள்ள முதற் பொருளே அடைக்கலம், தியானிப்பதற்கு அதீதமானவரே அடைக்கலம், எல்லாவற்றையும் படைத்தவரே அடைக்கலம், நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் தந்தருளிய கடவுளே அடைக்கலம், அடைக்கலம். (460)

நண்ணினர்க்கு = அடைந்தவர்க்கு. பண்ணவர் = முனிவர்.

தேவாதி தேவரே அடைக்கலம், சூக்குமசித்தாயுள்ள கடவுளே அடைக்கலம், பகைவர்களாகிய பாம்புகளுக்கு இடியேறு போல்பவரே அடைக்கலம், வேற்படையையுடைய நிருமலரே அடைக்கலம், பொய்யடிமையில்லாத புலவர்களுக்கு எளியவரே அடைக்கலம், பன்னிரு திருப்புயங்கள் உடையவரே அடைக்கலம், மும்மூர்த்திகளுமாய் நின்ற முதல்வரே அடைக்கலம், அடைக்கலம். (461)

சித் = ஞானம். மேவலர் = பகைவர். பாவலர் = புலவர்.

சுவாமி! இராக் காலத்தில் எழுந்த மேகத்தைப் போலச் சூரபன்மன் மாய இருளின் மறைவில் நின்று எங்களை விழுங்கும் பொருட்டு வருகின்றான். தப்பி ஓடுதற்கும் வலிமையற்றவராயிருக்கின்றோம். இனிமேல் எவ்வாறு உயிர் பிழைப்போம். இறையளவு நேரமும் தேவரீர் தாமதம் செய்யாதீர். சூரபன்மனுடைய உயிரைக் கவர்ந்து எங்களுயிர்களைக் காத்தருளுக என்று வணங்கினார்கள் (462)

கங்குல் = இராக்காலம் கனை = தடித்த. நுங்கிய = விழுங்கும் பொருட்டு. நோன்மை = வலிமை இறையும் = இறையளவு.

மயில் வடிவு கொண்டு முருகப்பெருமானைச் சுமந்து நின்ற இந்திரனும், தேவரீர் சிறிது காலதாமதஞ் செய்வீராயின் இவன் இருளில் மறைந்து நின்று சர்வ உலகங்களையும் விழுங்கி அழித்து விடுவான். இதனைத் தேவரீர் திருவுள்ளம் பொருட்படுத்தவில்லைப் போலும். இப்பகைவன் உயிரை விரைவில் கிரகித்தருளுக என்று வேண்டினான்.(463)

தேற்றலை = பொருட்படுத்திலீர். பாணித்தல் = காலதாமதம் செய்தல். புத்தேள் = இந்திரன்.

சுப்பிரமணிப் பெருமான் தேவர்கள் கூறிய பிரார்த்தனை மொழிகளையும் சூரபன்மன் கொண்ட மாயா வல்லபத்தையும் அறிந்து, தமது திருக்கரத்தில் இருந்த வேலாயுதத்தைப் பார்த்துச், சூரபன்மனுடைய மார்பைப் பிளந்து மீள்வாய் என்றருளி விடுத்தார். (464)

ஆகம் = மார்பு. போழ்ந்து = பிழந்து. துங்கம் = பெருமை.

ஏ என முருகன் தொட்ட இருதலை படைத்த ஞாங்கர்
ஆயிரகோடி என்னும் அருக்கரில் திகழ்ந்து தோன்றித்
தீ அழல் சிகழி கான்று சென்றிட அவுணன் கொண்ட
மாயிருள் உருவம் முற்றும் வல்விரைந்து அகன்ற தன்றே.

தொட்ட = செலுத்திய. தலை = அலகு. ஞாங்கர் = வேல்.
அருக்கர் = சூரியர். திகழ்ந்து = பிரகாசித்து. சிகழிகை = அக்கினிச் சுவாலை.

அன்னவன் தனது மாயம் அழிந்ததும் ஐயன் வைவேல்
முன்னுறு மாறு நோக்கி முடிவிலா வரத்தினேனை
என் இவண் செய்யும் அம்மா இவன்விடும் எஃகம் என்று
உன்னினன் முறுவல்எய்தி உருகெழு சீற்றங்
கொண்டான். (466)

வை = கூர்மை. ஆறு = தன்மை. எஃகம் = வேல். உரு = மிகுதி. பெரிய.

வாரிதி வளாகம் தன்னை மாதிர வரைப்பை மீக்கீழ்ச்
சேருறு நிலயம் தன்னைத் திசைமுகன் முதாலா உள்ள
ஆர் உயிரோடும் வீட்டி அடுவன் மேல் இதனை என்னுச்
சூர் எனும் அவுணன் மற்றைத் தொடுகடல் நடுவணுற்றான்.

வாரிதி = சமுத்திரம். வளாகம் = பூமி. மாதிரம் = திக்கு.
வரைப்பு = இடம். மீ = மேல். நிலயம் = இடம், உலகம்.
ஆர் = நிறைவு. தொடு = தோண்டிய. நடுவண் = நடுவிடம்.

## சூரபன்மன் மாமர வடிவம் கொள்ளல்

வன்னியின் அலங்கல் கான்று வான்தழை புகையின் நல்கி
பொன்என இணர்கள் ஈன்று மரகதம் புரையக் காய்த்துச்
செந்நிற மணிகள் என்னத் தீம்பழம் கொண்டு கார்போல்
துன்னு பல்கவடு போக்கிச் சூதமாய் அவுணன் நின்றான்.

வன்னி = அக்கினி. அலங்கல் = இளந்தளிர். தழை = இலை.
இணர் = பூங்கொத்து. புரைய = போல. கவடு = கொம்பர்.
சூதம் = மாமரம்.



முருகக் கடவுள் செலுத்திய வேற்படை ஆயிரகோடி அளவான சூரியர்களைப் போலப் பிரகாசித்து எரிக்கும் இயல்புடைய அக்கினிச் சுவாலைகளைக் கக்கிக் கொண்டு விரைந்து செல்லச், சூரபன்மன் உண்டாக்கிய பெரிய இருள் வடிவு முழுவதும் விரைவில் அழிந்துபோனது. (465)

சூரபன்மன் தான்கொண்ட மாயவிருளும் உடம்பும் அழிந்த தன்மையையும், முருகப்பெருமான் செலுத்திய வேற்படை தனக்கு முன்பாக வந்த தன்மையையும் கண்டு, இந்தப் பாலகன் செலுத்திய வேற்படை அழியா வரத்தைப் பெற்றவனாகிய என்னை என்ன செய்யக் கூடும் என்று கருதி இகழ்ச்சியாகச் சிரித்துப் பெருங் கோபம் கொண்டான். (466)

அவன் கடலால் சூழப்பட்ட பூவுலகத்தையும், திக்கின் இடங்களையும், பூமிக்கு மேலும் கீழும் உள்ள உலகங்களையும், பிரமா முதலாக வாழும் எல்லா உயிர்களையும் ஒருசேர அழித்து, இவ்வேற் படையைப் பின்னர் அழிப்பேன் என்று கூறிக் கொண்டு சமுத்திரத்தின் மத்தியில் சென்றான். (467)

சமுத்திர மத்தியில் சென்ற சூரபன்மன் அக்கினியின் நிறம் போலச் சிவந்த இளந்தளிர்களைக் கான்று கொண்டும், புகையின் நிறம் போலக் கரிய இலைகளை விட்டுக் கொண்டும், பொன்னிறம் போலச் செந்நிறம் வாய்ந்த பூங்கொத்துக்களை அலர்த்திக் கொண்டும், மரகத மணியின் நிறம் போலப் பச்சை நிறம் பொருந்திய காய்களைக் காய்த்தும் கொண்டும், மாணிக்க மணிகளின் நிறம் போலச் செந்நிறம் விளங்கும் தித்திப்பான பழங்களைப் பழுத்துக் கொண்டும், மேகத்தின் நிறத்தைப் போல நீல நிறம் கொண்ட பல கொம்பர்களைப் பக்கத்தில் நீட்டிக் கொண்டும் உள்ள ஒரு மாமரத்தின் வடிவு கொண்டு நின்றான். (468)

மாசறு ககனகூட வரம்பு அதனளவு மேல் போய்
ஆசையின் எல்லை காறும் அளவைதீர் உலவை ஓச்சிக்
காசினி அகலம் தாங்கும் கச்சபத் துணைத்தூர் ஓட்டிப்
பாசடை பொதுளி வெஞ்சூர் பராரைமால் வரையில்
நின்றான். (469)

ககன கூடம் = அண்டமுகடு. ஆசை = திக்கு அளவைதீர் = எண்ணற்ற உலவை = கோம்பர் சச்சபம் = ஆமை துணை = அளவு தூர் = வேர். பாசடை = பசிய இலை. பொதுளி = நிறைந்து பராரை = பருமையான அரை வரை = மலை.

ஓராயிரம் நூறதென்னும் ஓசனை அளவை ஆன்ற
பராரை மா உருவமாகிப் பலவுடைச் சினைமாண் கொம்பர்
விராவிய சூழ்ச்சி தன்னால் வேலைகள் முழுதும் விண்ணும்
தராதல வரைப்பும் எல்லாம் தண் நிழல் பரப்பி நின்றான்.

ஓசனை அளவை = யோசனை அளவு ஆன்ற = விசாலித்த. சினை = கிளை. மாண் = பெரிய. விராவிய = செறிந்த. தராதலம் = பூமி வரைப்பு = இடம்.

நெடும்கலை முயல்மான் கொண்டு நிலவும் அம்புலியும்
நீத்தம்
அடும்கதிர் படைத்த கோவும் அளகையை ஆளி தானும்
கடம்கலுழ் கின்ற ஆசைக் கரிகளும் கடாவிற் செல்லும்
மடங்கலும் வெருவச் சூரன் மாஉருக் கொண்டு நின்றான்.

நெடும் = நிறைந்த. கலை = சந்திரனுடைய கூறு முயல்மான் = சந்திரகளங்கம். அம்புலி = சந்திரன். அடும் = அழிக்கின்ற. கதிர் படைத்தகோ = சூரியன். அளகை = அளகாபுரி ஆளி = ஆள்பவன். கடம் = மதம். கலுழ்தல் = சோரிதல் ஆசை = திக்கு கடாவிற் செல்லும் மடங்கல் = யமன். வெருவ = அஞ்சும்படி.

மிக்குயர் உவணம் அன்னம் மிசைப்படும் எகினப்புள்ளும்
மைக்குயில் சேவலாகி மயூரமாம் வலியன் தானும்
புக்குஅமர் தெரிக்கும் ஆடற் பூவையும் கொடி அதான
குக்குட முதலும் அஞ்சக் கொக்குரு ஆகிநின்றான். (472)

உவணம் = கருடன் எகினம் = அன்னம். மைக்குயில் = கரிய குயில். ஆடற்பூவை = வீரதுர்க்கை. குக்குடம் = கோழி. கொக்கு = மாமரம்.



மாமரமாய் நின்ற கொடிய சூரன், குற்றமற்ற அண்டமுகட்டினெல்லையளவுயர்ந்தும், எட்டுத்திசைகளிலும் அளவற்ற கொம்பர்களை நீட்டிக் கொண்டும், பூமியைச் சுமந்து கொண்டிருக்கும் ஆதி கூர்மம் தங்கும் பாதள உலகளவும் வேர்களைப் பாய்ச்சிக் கொண்டும், பசிய இலைகளை நெருங்கப்பெற்றும் நின்ற தன்மையினால், பருத்த அரையினையுடைய ஒரு பெரிய மலைபோலாக நின்றான். (469)

ஓரிலக்கம் யோசனை தூரமளவாக விரிந்த பருத்த அரையினையுடைய ஒரு மாமர வடிவு கொண்டு, அதனிடத்துள்ள அநேக கிளைகளையுடைய பெரிய கொம்பர்கள் எவ்விடத்தும் செறிந்த தன்மையினால், சமுத்திரங்கள் ஆகாயம் பூமியாகிய எல்லா இடங்களிலும் குளிர்ந்த நிழலைப் பரப்பிக் கொண்டு நின்றான். (470)

நிறைந்த கலைகளையும் முயற் களங்கத்தையும் பொருந்தி விளங்கும் சந்திரனும், நீரை வற்றச் செய்யும் சூரியனும், அளகாபுரியை அரசாளும் குபேரனும், மதத்தைச் சொரியும் திக்கு யானைகளும், எருமைக் கடாவூர்தியில் செல்லும் யமனும், அஞ்சும்படி சூரபன்மன் மாமர வடிவு கொண்டு நின்றான். (471)

மேம்பட்ட கருடப்பறவையை ஊர்ந்து செல்லும் அன்னப்புள் வடிவுகொண்ட திருமாலும், அன்னப்பறவையை ஊர்ந்து செல்லும் அன்னப்புள் வடிவு கொண்ட பிரமாவும், முன்னர் குயில் கோழி வடிவங்களைக்கொண்டவனும் இப்பொழுது மயில் வடிவத்தைக் கொண்டு நின்ற இந்திரனும், யுத்தத்தைப் பார்த்துக்கொண்டு நின்ற வீர துர்க்கையும், கொடியாயமைந்து நின்ற கோழியரசும் அச்சமுறும்படி சூரபன்மன் மாமர வடிவு கொண்டு நின்றான். (472)

கால்எனும் மொய்ம்பன் உட்கக் கட்செவி கவிழ்ந்து சோர
வாலிய வசுக்கள் ஏங்கி மலர்க்கரம் மறிக்க வெய்யோன்
பாலர் மெய்வியரா நிற்பப் பணைமுலை அரிவை மார்கள்
சேல் எனும் விழிகள் பொத்தச் சேகரமாகி நின்றான்.(473)

கால் = வாயு. மொய்ம்பன் = வீரன். உட்க = அஞ்ச. கட்செவி = பாம்பு. வாலிய = சிறந்த. வசுக்கள் = அட்டவசுக்கள். மறிக்க = உதற. வெய்யோன்பாலர் = பரிமருத்துவர்கள். வியரா = வியர்வை கொள்ள. பணை = பருத்த. சேல் = கயல் மச்சம். சேகரம் = மாமரம்.

அத்தியின் அரசு பேர ஆலமும் தெரிக்கில் ஏங்க
மெய்த்திறல் வாகை வன்னி மெலிவுற வீரையாவும்
தத்தமது இருப்பை நீங்கத் தாது அவிழ் நீபத் தாரோன்
உய்த்திடு தனிவேல் முன்னர் ஒருதனி மாவாய் நின்றான்.

அத்தி = சமுத்திரம். ஆலம் = விடம். தெரிக்கில் = மாறுபட்டு எழுந்தால். வன்னி = அக்கினி. வீரை = சமுத்திரம். தாது = பூவிதழ். நீபம் = கடம்பு. தனி = ஒப்பற்ற

நிலமிசை இனையவாறு ஓர் நெடும் பெரும் சூதமாகி
உலவையின் செறிவு தன்னால் உம்பரும் திசையும் எற்றித்
தலைமுதல் அடியின் காறும் சாலவும் தளர்ந்து தள்ளுற்று
அலமருவாரில் தானே அசைந்தனன் அசைவிலாதான்.

நிலம் = சமுத்திரம் (ஆகுபெயர்). உலவை = கோம்பர். எற்றி = மோதிக்கொண்டு. அலமருதல் = சுழலுதல்.

பைவிரி பாந்தட் புத்தேள் பரம் பொருது அழுங்கப் பாரில்
மைவிரி படிவச்சூறை மாருதம் எறிய மாழை
மெய்விரி குடுமிக் கோட்டு மேரு வெற்பு அசைந்தாலென்ன
மொய்விரி அவுணன் யாக்கை அலைத்தனன் முடிவது ஓரான். (476)

பை = படம். பாந்தள் = பாம்பு. பாந்தட்புத்தேள் = ஆதிசேடன். பரம் = பாரம். அழுங்க = வருந்த. மை = கருமை. படிவம் = வடிவம். மாருதம் = காற்று. மாழை = போன். குடுமி = உச்சி. கோடு = சிகரம். மொய் = வலிமை. ஓரான் = அறியாதவன்.



வாயு எனப்படும் வீரன் அஞ்சும்படியும், ஆதிசேடன் புரண்டு வீழ்ந்து தளரும்படியும், சிறந்த அட்ட வசுக்களும் ஏக்கமுற்று மலர் போன்ற காங்களை உதறும்படியும், சூரியனுடைய குமாரராகிய பரிமருத்துவர்கள் உடல் வியர்வை கொள்ளும்படியும், பருத்த தனங்களையுடைய தெய்வப் பெண்கள் கயல் மச்சங்களையொத்த கண்களைக் கைகளால் மூடிக்கொள்ளும்படியும், சூரபன்மன் மாமர வடிவு கொண்டு நின்றான். (473)

சமுத்திரங்கட் கிறைவனாகிய வருணன் நிலைபெயரும்படியும், ஆலகாலமும் அச்சமுறும்படியும், அக்கினி தேவன் தளரும்படியும், சமுத்திரங்கள் தமது இருப்பிடத்தை விட்டு நிலைபெயரும்படியும், கடப்ப மலர் மாலையணிந்த முருகக்கடவுள் தூண்டிய ஒப்பற்ற வேற்படைக்கு எதிரில் சூரபன்மன் ஒப்பற்ற ஒரு மாமர வடிவாய் நின்றான். (474)

தமது நிலை பெயராப் பெருந்தவனாகிய சூரபன்மன், சமுத்திர மத்தியில் ஒரு பெரிய மாமர வடிவாகி, கொம்பர்களின் மிகுதியினால் ஆகாயமும் திக்கு ஆகிய இடங்களை மோதிக் கொண்டும், வேர் முதல் நுனி வரையுமுள்ள வடிவம் முழுவதும் அசையும்படி, தலை கீழாய்ச் சுழல்பவரைப் போலத், தானே தன்னியல்பில் தலைகீழாய்ச் சுழன்றான். (475)

பொன்னொழி பரந்த சிகரங்களைக் கொண்ட மேருமலை தானே யசைந்தாற் போலச், தேகவலிமை மிக்கவனாகிய சூரபன்மன், ஆயிரமளவான படங்களையுடைய ஆதிசேடன் பாரம் பொறுக்க முடியாமல் வருந்தும் படியும், கருமை பரந்த வடிவத்தையுடைய சுழல் காற்று வீசும்படியும், தான் அழிந்து போகும் தருணத்தில் இருப்பதனை அறியாதவனாய் மாமர வடிவை அசையச் செய்தான். (476)

இடிந்தன சரிந்த ஞாலம் ஏழ்வகைப் பிலங்கள் முற்றும்
பொடிந்தன கமட நாகம் புரண்டன புழைக்கை மாக்கள்
முடிந்தன மறிந்தவேலை முழுவதும் ஒன்று ஆகுற்ற
மடிந்தன உயிரின் பொம்மல் வரைக்குலம் மறிந்த அன்றே.

தாரகை உதிர்ந்த கோளும் தலைபனித்து இரிந்த வெய்யோன்
தேரொடு மாவும் தானும் தியங்கினன் திங்கட் புத்தேள்
பேருறு மானம் நீங்கிப் பெயர்ந்தனன் ஏனைவானோர்
மேருவும் கயிலை வெற்பும் புக்கனர் வெருவும் நீரார். (478)

ஏற்றம் இல் சுவர்க்கம் முற்றும் இற்றன அதற்கும் அப்பால்
மேல்திகழ் முனிவர் வைகும் உலகமும் பகிர்ந்து வீழ்ந்த
நால் திசை முகத்தன் மாயோன் நண்ணிய உலகும் அற்றே
சாற்றுவது என்கொல் அண்டச் சூழலும் தகர்ந்தது அன்றே. (479)

## முருகப்பெருமானின் வேலின் செயல்

தெண்திரை நடுவண் நின்ற தீயவன் செயலும் அன்னான்
கொண்டிடும் உருவும் உள்ளக் கொள்கையும் வலியும் சீரும்
அண்டர்கள் எவர்க்கும் மேலாம் ஆதிஅம் பகவன் தொட்ட
விண்தொடர் தனிவேல் காணு வெம்சினம் விளைத்தது அன்றே. (480)



சூரபன்மன் கொண்ட மாமா வடிவ அசைவினால் பூமியின் இடங்கள் இடிந்து சரிந்தன. ஏழுவகையான பாதாள உலகங்களெல்லாம் துகளாய் அழிந்தன. ஆதிகூர்மமும் ஆதிசேடனும் நிலைபெயர்ந்தன. துதிக்கைகளையுடைய அட்ட யானைகளும் இறந்தன. சமுத்திரங்களெல்லாம் கரைபுரண்டெழுந்து ஒன்றாய்க் கலந்தன. உயிர்களெல்லாம் அழிந்தன. மலைகளும் பெயர்ந்து வீழ்ந்தன. (477)

ஞாலம் = பூமி. பிலம் = கீழுலகம். பொடிதல் = துகளாதல். கமடம் = ஆமை. மறிந்த = தடைப்பட்டு நின்ற. பொம்மல் = கூட்டம்.

நட்சத்திரங்கள் விழுந்தன. கிரகங்களும் நடுங்கி அஞ்சி ஓடின. சூரியன் தனது தேருடனும் குதிரையுடனும் திகைப்புற்று நின்றான். சந்திரன் தனது விமானத்தை விட்டுத் தனித்துப் போயினான். தேவர்கள் அச்சத்துடன் மேருவும் கயிலையும் என்று சொல்லப்படும் இருமலைகளிலும் தங்கினார்கள். (478)

தாரகை = நட்சத்திரம். கோள் = கிரகம். பனித்து = நடுங்கி. இரிந்த = ஓடின. வெய்யோன் = சூரியன். மா = குதிரை. மானம் = விமானம். வெருவும் = அச்சமுறும். நீரார் = தன்மையார்.

பெருமை குன்றிய சுவர்க்கவுலகமும் அழிந்து போனது. மேலாக விளங்கிய முனிவர்கள் வசிக்கும் தவவுலகமும் பிளந்து வீழ்ந்தது. பிரமதேவரும் திருமாலும் வசிக்கும் சத்திய வைகுந்தவுலகங்களும் அழிந்தன. சொலலவும் வேண்டுமோ. அண்டமுகடும் தகர்ந்து போனது. (479)

ஏற்றம் = பெருமை. இற்றன = அழிந்துபோயது. பகிர்ந்து = பிளந்து. அற்றே = அவ்வாறே. அண்டச் சூழல் = அண்ட முகடு.

தெள்ளிய திரைகளையுடைய சமுத்திர மத்தியில் நின்ற சூரபன்மன் செய்த செயல்களையும் அவன் கொண்ட வடிவத்தையும், கொள்கையையும், வலிமையையும், நிலைமையையும், தேவர்கள் அனைவர்க்கும் மேலாகிய முதற் கடவுளாய் விளங்கும் முருகக் கடவுளால் செலுத்தப்பட்ட ஒப்பற்ற வேலாயுதம் பார்த்துக் கொடிய சீற்றம் கொண்டது. (480)

சீர் = நிலைமை.

தேயுவின் எடுத்த அண்டத் திறங்களுர் பிறங்கு ஞாலத்து
ஆயிர கோடி அண்டத்து அங்கியும் ஒன்றிற்று என்ன
மீஉயர்ந்து ஒழுகி ஆன்றோர் வெருவரும் தோற்றம் கொண்டு
நாயகன் தனது தெய்வப் படைக்கலம் நடந்தது அன்றே.

வயிர்த்திடு நிலைமை சான்ற வன்கணன் உயிரை வௌவச்
செயிர்த்திடுந் தெய்வச் செவ்வேல் திணிநில வரைப்பின் அண்டம்
அயிர்த் தொகையாக ஏனைப்பூதமும் அழிய அங்கண்
உயிர்த் தொகை முருக்கத் தோன்றும் ஒருவனில் சென்றதன்றே. (482)

மாறு அமர் உழந்து பன்னாள் வரம்பறு பிரமம் ஆவார்
வேறு இலையாமே என்ற இருவரும் வெருவி நீங்க
ஈறொடு முதலும் இன்றி எழுகிரி விலக்கி விண்மேல்
சேறலின் நிலைமை காட்டிப் படர்ந்தது கடவுட் செவ்வேல்.

வேதனை அகத்தர் ஆகும் விண்ணவர் படைகள் தம்முள்
யாதனை இதற்கு நேரா இயம்புவது எரியில் தோன்றிப்
பூதனை உயிர்உண் கள்வன் புண்டரீகத்தன் வன்மை
சோதனை புரிந்த மேலோன் சூலமே என்பதல்லால். (484)



தேயு பூதத்தால் கொள்ளப்பட்ட ஆயிரகோடி என்னும் அண்டங்களிலும், பிருதுவி தத்துவத்தால் கொள்ளப்பட்ட ஆயிரகோடி அண்டங்களிலும், விளக்கமுறும் அக்கினிப் பகுப்புகள் சேர்ந்து பிரகாசித்தாற் போல, முருகக் கடவுளின் வேற்படை பிரகாசித்துக் கொண்டு பெரியோர்களும் அஞ்சத்தக்க வடிவு கொண்டு மேலே உயர்ந்து சென்றது. (481)

பிறங்கு = விளக்கமுறும். ஞாலம் = பிருதுவி. வெரு = அச்சம்.

வயிரித்த மனத்தையுடைய தறுகண்ணனாகிய சூரபன்மனது உயிரைக் கவரத் தெய்வத்தன்மையமைந்த வேலாயுதமானது, நிலப் பரப்பிலுள்ள அண்டங்கள் அழியும்படியும், அங்கே வாழும் உயிர்களெல்லாம் சங்காரம் செய்யச் சங்கார காலத்தில் வரும் மகாவுருத்திரமூர்த்தியைப் போலச் சென்றது. (482)

வயிர்த்திடு = வயிரத்தன்மை. சான்ற = பொருந்திய.
வன்கண்மை = தறுகண்மை. செயிர்த்தல் = கோபித்தல்.
திணி = செறிந்த. அயிர் = துகள். முருக்க = அழிக்க.

எல்லையில்லாத பரம்பொருள் நாமேயாவோம் என்று நெடுங்காலம் வரையும் தம்முள் மாறுபாடு கொண்டு போரினைச் செய்து நின்ற பிரமா விஷ்ணுக்களாகிய இருவரும் கண்டு அஞ்சி அகலும்படி, முடியும் அடியும் இல்லாததாய் எழுந்த சோதி சொரூபமாகிய அருணாசலம் ஆகாயத்தில் முடிவின்றிச் சென்றுகொண்டிருப்பது போலத், தன் பேரொளியை விளக்கிக்கொண்டு தெய்வத் தன்மை படைத்த வேலாயுதம் சென்றது. (483)

உழந்து = செய்து. வெருவி = அஞ்சி. சேறல் = செல்லுதல்.

இவ் வேலாயுதத்திற்கு ஒப்பாவதோர் படையாக, அக்கினி போலச் செந்நிறத் திருமேனியுடையாராய்ச் சிவபிரானிடத்துதித்துப் பூதனையென்னும் பிசாசப் பெண்ணினுயிரை முலைப்பாலுண்டு கவர்ந்த வஞ்சகத் தன்மையுடைய திருமாலிடத்தும், பிரமதேவரிடத்தும் இருந்த, வலியின்மையைப் பரீட்சித்து விளக்கிய வைரவக் கடவுள் கொண்ட சூலப்படையொன்றேயுளது என்று சொல்வதன்றி, தேவர்களுடைய படைகளுள் எதனை நாம் ஒப்பாகச் சொல்லலாம். (484)

வேதனை = துன்பம். யாதனை = எதனை. எரி = அக்கினி.

மண்டல நிலத்தின் வைப்பும் வாரிதிஏழும் மற்றைத்
தெண் திரைக்கடலும் வானும் சேண்உயர் பிறங்கல்
முற்றும்
எண் திசைப்புறமும் அண்டத்து ஏணியின் பரப்பும் ஈண்ட
ஒண் தழற்சிகையின் கற்றை உமிழ்ந்ததால் ஒருங்கு
ஞாங்கர். (485)

பற்றிய ஞெகிழி பாரிற் படர்ந்தன பௌவம் யாவும்
சுற்றிய திசையும் வானும் சூழ்ந்தன சோதிவைகும்
பொற்றை அதுஒன்றே அல்லாப் பொருப்பெலாம்
செறிந்த பொன்தோய்
கற்றை அம்கதிரின் அண்டச் சூழலும் கதுவல் உற்ற.

## செவ்வேல் மாமர வடிவத்தை அழித்தல்

விடம் பிடித்து அமலன் செங்கண் வெங்கனல் உறுத்திப்
பாணி
இடம் பிடித்திட்ட தீயில் தோய்த்து முன்இயற்றி அன்ன
உடம் பிடித்தெய்வம் இவ்வாறு உருகெழு செலவின் ஏகி
மடம் பிடித்திட்ட வெஞ்சூர் மாமுதல் தடிந்ததன்றே. (487)

ஆடல்வேல் எறிதலோடும் ஆமிரவடிவாய் அண்ட
கூடமும் அலைத்த கள்வன் அரற்றொடு குறைந்து வீழ்ந்தும்
வீடிலன் என்ப மன்னோ மேலைநாள் வரத்தின் என்றால்
பீடுறு தவமேயன்றி வலியது பிறிது ஒன்றுண்டோ. (488)



வேலாயுதம், பூமியினிடங்களிலும், சமுத்திரங்களிலும், மற்றைய தெள்ளிய திரைகளையுடைய புறவாழியிலும், ஆகாயததிலும், ஆகாயத்தில் ஓங்கிய மலைகளெல்லாவற்றிலும், அட்ட திக்குகளிலும், அண்ட அடுக்குகளின் இடங்களிலும், ஒளி பொருந்திய அக்கினிச் சுவாலையைப் பரப்பியது. (485)

வைப்பு = இடம். வாரிதி = சமுத்திரம். சேண் = ஓங்கிய. பிறங்கல் = மலை. ஏணி = அடுக்கு. சிகை = சுவாலை. ஞாங்கர் = வேல்.

அக்கினிச் சுவாலைகள் பூமியிற் பரவின. சமுத்திரங்கள் எல்லாவற்றிலும் சூழ்ந்து பரவின. திக்குகளிலும் ஆகாயத்திலும் சூழ்ந்தன. சோதி சொரூபமாய் விளங்கும் சிவபெருமான் கோயில் கொண்டெழுந்தருளிய கைலாயமலை ஒன்றே தவிர மற்றைய மலைகளெல்லாவற்றிலும் நிறைந்தன. பொன்னொளியையுடைய அண்டச் சுவரிலும் பற்றின. (486)

ஞெகிழி = தீப்பொறி. பௌவம் = சமுத்திரம். பொற்றை = மலை. பொருப்பு = மலை. சூழல் = சுற்றிடம், சுவர். கதுவல் = பற்றல்.

சிவபெருமான், தமது திருமிடற்றில் இருந்த ஆலகாலம் என்னும் இளகச் செய்யும் மருந்தைப் பூசி, நெற்றிக் கண்ணக்கினியாகிய பெரிய உலைமுகத்தில் வைததுப் பழுக்கக் காய்ச்சி, திருக்கரததில் தாங்கிய அக்கினியாகிய உலைமுகத்தில் வைததுக் கூராக்கி மென்மையுறச் செய்து, முருகக் கடவுளிடம் கொடுத்தது போன்ற வேலாயுதமாகிய கடவுள், உக்கிரமாகச் சென்று மடைமைக் குணத்தையே உறுதியாகப்பற்றிய சூரபன்மன் கொண்டு நின்ற மாமரத்தை அறுத்தது. (487)

பாணி = கரம். இயற்றி = செய்து. உடம்பிடி = வேல். உரு = கோபம். உருகெழு செலவு = உக்கிரப் போக்கு. மடம் = அறியாமை. முதல் = அடி. தடிதல் = வெட்டுதல், அறுத்தல்.

மாமரத்தையே தன் வடிவமாகக் கொண்டு முழுவிடங்களையும் அலையச் செய்த சூரபன்மன் அறுக்கப்பட்டுக் கதறி வீழ்ந்தும், முன்னாளில் செய்த தவவிசேடததால் இறந்திலனாயின், மக்களாகிய நாங்கள், பெருமை மிக்க தவம் ஒன்றே வலிமையுடையதன்றி வேறில்லை என்பதை உணரந் தருகின்றது. (488)

ஆடல் = விளையாட்டு. ஆமிரம் = மாமரம். அரற்று = அரற்றல். வீடுதல் = இறத்தல். பீடு = பெருமை.

கிள்ளையின் வதனம் அன்ன கேழ்கிளர் பசுங்காய் தூங்கித்
தள் அரு நிலைத்தாய் நின்ற மாவுருச் சாய்தலோடும்
உள் உறு சினம் மீக்கொள்ள ஒல்லை தொல் உருவம் எய்தி
வள் உறை உடைவாள் வாங்கி மலைவது கருதி ஆர்த்தான்.

செங்கதிர் அயில் வாள்கொண்டு செருமுயன்று உருமின் ஆர்த்துத்
துங்கமொடு எதிர்ந்து சீறும் சூர்உரம் கிழித்துப் பின்னும்
அங்கமது இருகூறாக்கி அலைகடல் வரைப்பில் வீட்டி
எங்கணும் மறைகள் ஆர்ப்ப எஃகம் வான் போயிற்றம்மா.

புங்கவர் வழுத்திச் சிந்தும் பூமழை இடையின் ஏகி
அங்கியின் வடிவம் நீங்கி அருள் உருக்கொண்டு வான்தோய்
கங்கையில் படிந்து மீண்டு கடவுளர் இடுக்கண் தீர்த்த
எங்கள் தம் பெருமான் செம்கை எய்தி வீற்றிருந்தது அவ்வேல். *(491)*

## சூரபன்மன் சேவலும் மயிலுமாதல்

தாவடி நெடுவேல் மீளத் தற்பரன் வரத்தால் வீடா
மேவலன் எழுந்து மீட்டும் மெய்பகிர் இரண்டு கூறும்
சேவலும் மயிலுமாகிச் சினம்கொடு தேவர் சேனை
காவலன் தன்னை நாடி அமர்த்தொழில் கருதி வந்தான்.



கிளியின் அலகுபோன்ற நுனியையுடைய பசிய காய்கள் தூங்கப்பெற்ற மாமர வடிவம் அறுக்கப்பட்டு வீழ்ந்து போகச், சூரபன்மன் கோபம் மூண்டெழத், தனது சுயரூபத்தைக் கொண்டு உடைவாளை எடுத்துப் போராடும்படி நினைந்து ஆரவாரித்துக் கொண்டெதிர்த்தான். (489)

கிள்ளை = கிளிப்பறவை. வதனம் = முகம், நாசி. கேழ் = நிறம். தள் = அழிக்க. உள் = உள்ளம். தொல்லுருவம் = நிசரூபம். வள் = செறிவு.

சூரிய வாட்படையைக் கொண்டு யுத்தத்தை விரும்பி இடிபோல ஆரவாரித்து இறுமாப்புடன் வந்தெதிர்ந்த சூரபன்மனுடைய மார்பை, வேலாயுதமானது பிளந்து உடம்பை இரு கூறுகளாக்கித் திரைகளையுடைய கடலில் எறிந்துவிட்டு, வேதங்கள் எவ்விடங்களிலும் ஒலிக்க ஆகாயத்தில் சென்றது. (490)

கதிர் = ஒளி. அயில் = கூர்மை. உரும் = இடியேறு. துங்கம் = இறுமாப்பு. உரம் = மார்பு. அங்கம் = உடல். எஃகம் = வேல்.

தேவர்கள் துதிசெய்து சொரிகின்ற பூமழைக்கு நடுவே சென்று, அனல் வடிவத்தை மாற்றி, அருளுருவம் கொண்டு, ஆகாய கங்கையில் முழுகி, அமரர்களது அல்லலை அகற்றிய ஆறுமுகப் பெருமான் திருக்கரத்தில் வந்து வேலாயுதம் வீற்றிருந்தது. (491)

புங்கவர் = தேவர். வழுத்தி = துதிசெய்து. அருள் = அனுக்கிரகம். படிந்து = தோய்ந்து, முழுகி. இடுக்கண் = துன்பம்.

போர்க்குச் சென்ற வேகமுடைய வேலாயுதம் மீண்டபின், சிவபெருமான் தந்த வரத்தின்படி அழியாத தன்மையுடைய சூரபன்மனது பிளக்கப்பட்ட இரு உடற்கூறுகளும், மயிலும் சேவலுமாகி எம்பெருமானுடன் போர்புரியக் கருதி எதிர்ந்து வந்தான். (492)

தாவடி = போர். வீடாத = அழியாத. தற்பரன் = சிவன். மெய் = உடம்பு. பகிர் = பிளக்கப்பட்ட.

மணி கிளர் வரையது ஒன்று மரகதப் பிறங்கல் ஒன்றும்
துணை அடி சிறகர் பெற்றுச் சூல் புயல் அழிய ஆர்த்துத்
திணி நில விசும்பின் மாட்டே சென்றெனச் சேவலோடு
பிணி முக உருவாய் வந்து பெருந்தகை முன்னம் புக்கான்.

ஆட்படு நெறியில் சேர்த்தும் ஆதியின் ஊழ்தந்து உய்க்க
தாட்படை மயூரம் ஆகித் தன்நிகர் இல்லாச் சூரன்
காட்பு அடை உளத்தனுகிக் கடவுளர் இரியல்போக
ஞாட்பு இயல் செருக்கில் வந்தான் ஞான நாயகன்
தன்முன்னம் (494)

## முருகப்பெருமான் திருவருள் பாலித்தல்

மருள் கெழு புள்ளேபோல வந்திடு சூரன் எந்தை
அருள் கெழு நாட்டம் சேர்த்த ஆங்கவன் இகலை நீக்கித்
தெருள் கெழு மனத்தனுகி நின்றனன் சிறந்தார் நோக்கால்
இருள் கெழு கரும்பொன் செம்பொன் ஆகிய
இயற்கையே போல் (495)

தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் உற்றுல்
தூயவர் ஆகி மேலைத் தொல்கதி அடைவர் என்கை
ஆயவும் வேண்டும் கொல்லோ அடுசமர் இந்நாள் செய்த
மாயையின் மகனும் அன்றே வரம்பிலா அருள்
பெற்றுய்ந்தான். (496)



மாணிக்கரத்தினத்தால் அமைந்த ஒரு மலையும், மரகத இரத்தினத்தால் அமைந்த ஒரு மலையும், இரண்டு கால்களையும் சிறகர்களையும் பெற்றுக்கொண்டு கருக்கொண்ட மேகங்கள் உடைந்து அழியும்படி ஆரவாரித்துக் கொண்டு, ஆகாயவழியாகப் பறந்தும், பூமிவழியாக நடந்தும் வந்தாற்போலச், சூரபன்மன் மயில் வடிவத்தையும் சேவற்கோழி வடிவத்தையும் பொருந்திவந்து முருகப் பெருமானது சந்நிதானத்தை அடைந்தான். (493)

மணி = இரத்தினம். பிறங்கல் = மலை. துணை = இரண்டு. சூல் = கரு. திணி = கடினமான. விசும்பு = ஆகாயம். பிணிமுகம் = மயில்.

அடிமைபூண்டு சேவை செய்யத்தக்க நன்னெறியில் செலுத்தி விடவல்ல முன்செய் தவமாகிய ஆகூழ் கொண்டு வந்து செலுத்தி விட, சேவற் கோழியும், ஆண் மயிலுமாகிய வடிவங்களைக் கொண்ட ஒப்பற்ற சூரபன்மன், வயிரித்த உள்ளத்தினையுடையவனுகித் தேவர்கள் கண்டு அஞ்சி, அகலும்படி போராட வேண்டுமென்ற இறுமாப்புடன் முருகப் பெருமான் முன்னிலையில் வந்தான். (494)

ஊழ் = பிராரத்த கன்மம். உய்க்க = செலுத்த. தாட்படை = கோழி. காட்பு = வயிரம். இரியல் = அஞ்சல். ஞாட்பு = போர். செருக்கு = இறுமாப்பு.

மயக்கமுடைய பட்சிகள் வடிவுகொண்டு மரகதமலை போலவும், மாணிக்க மலை போலவும் வந்த சூரபன்மன், எம்பெருமான் திருக்கண்ணோக்கஞ் செய்ய, அவன் பகைமை நீங்கித் தெளிந்த மனத்தையடையப் பெற்று, சிவஞானிகள் பார்வையால் இரும்பு பொன்னுகும் தன்மை போல் அமைதியுற்று நின்ருன். (495)

மருள் = மயக்கம். கெழு = பொருந்திய. இகல் = பகை. தெருள் = ஞானம். கரும்பொன் = இரும்பு.

தீவினைகளைச் செய்தவராயினும் முருகப் பெருமானுடைய திருமுன் வந்தார்களானுல், அவர்கள் தூயவர்களாகி மேலான பரகதியை அடைவார்கள். இதனை ஆராய்தல் வேண்டுமோ? அப் பெருமானுடன் இன்றுவரை போர் புரிந்த மாயவள் குமாரனுகிய சூரபன்மனுமன்றே எல்லையில்லாத திருவருள் பெற்றுய்ந்தான். (496)

என்கை = என்று சொல்லும் தன்மையை. ஆயவும் = ஆராயவும்.

## சூரபன்மன் எடுத்த சேவல் வடிவம் முருகப்பெருமானின் கொடியாதல்

அக்கணம் எம்பிரான் தன் அருளினுல் உணர்வு சான்ற
குக்குட உருவை நோக்கிக் கடிதில்நீ கொடியேயாகி
மிக்கு உயர் நமது தேரில் மேவினை ஆர்த்தி என்னத்
தக்கதே பணி இதென்னு எழுந்தது தமித்து விண்மேல்.

செந்நிறம் கெழீஇய சூட்டுச் சேவல் அம்கொடி ஒன்ருகி
முன்உறு மனத்தில் செல்லும் முரண்தகு தடந்தேர் மீப்போய்
இந்நில வரைப்பின் அண்டம் இடிபட உருமேறு உட்க
வன்னியும் வெருவ ஆர்த்து மற்று அவண் உற்றதன்றே.

## சூரபன்மன் எடுத்த மயில் வடிவம் முருகப் பெருமானின் வாகனமாதல்

சீர்திகழ் குமரமூர்த்தி செறிவிழி கொண்ட தொல்லை
ஊர்தியின் இருக்கை நீங்கி உணர்வு கொண்டு ஒழுகி நின்ற
சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னுப்
பார்திசை வானம் முற்றும் பரிஎன நடாத்தலுற்ருன். (499)

தடக்கடல் உடைய மேருத் தடவரை இடிய மற்றைப்
படித்தலம் வெடிப்பச் செம்தீ பதைபதைத்து ஒடுங்கச் சூறை
துடித்திட அண்டகூடம் துளக்குறக் கலாபம் வீசி
இடித்தொகை புரள ஆர்த்திட்டு ஏகிற்றுத் தோகை மஞ்ஞை. (500)



எங்கள் இறைவராகிய முருகக் கடவுள் மெய்யறிவு பெற்றுநின்ற கோழி வடிவைப் பார்த்து, நீ விரைவில் நமக்குரிய கொடியாய் அமைந்து நமது தேரின்மேற் சென்றிருந்து கூவக்கடவை என்று பணித்தருளக் கோழி இப்பணி அடியேனுக்கு இயைந்ததேயாம் என்று கூறிக்கொண்டு தனித்ததாகி ஆகாயத்தில் பறந்தது. (497)

சான்ற=பொருந்திய. குக்குடம்=கோழி ஆர்த்தி=கூவக்கடவை. தமித்து=தனித்து.

சிவப்பு நிறமான உச்சிக் கொண்டையையுடைய சேவற் கோழி அழகிய ஒரு கொடியாய் அமைந்து மனத்தின் வேகத்தையொத்த வேகமுடையதாய்ச் செல்லும் வலிய பெரிய தேரின்மீது சென்றிருந்து இந்நிலவுலகம் இடியத்தக்கதாகவும், இடியேறும் அக்கினி தேவனும் அஞ்சத்தக்கதாகவும் கூவிக்கொண்டு அத்தேரில் இருந்தது. (498)

கெழீஇய=அமைந்த. சூடு=உச்சிக் கோண்டை. அம்=அழகிய உட்க=அஞ்சும்படி. வன்னி=அக்கினி தேவன்.

சிறப்பு விளங்கும் குமாரக் கடவுள் உடலெங்கும் கண்களையுடைய இந்திரனுகிய மயில்வாகனத்தில் இருந்து நீங்கி, மெய்யுணர்ச்சி பெற்றுநின்ற சூரனுகிய சிறந்த மயில்மீது வீற்றிருந்து, நம்மைச் சுமந்து கொண்டு உலாவக் கடவை என்று பணித்துப், பூமி, திக்குகள், ஆகாயம் ஆகிய எல்லாவிடங்களிலும் செலுத்திக்கொண்டு செல்வாராயினர். (499)

இருக்கை=இருத்தல். பரி=வாகனம்.

முருகக் கடவுள் செலுத்திய சூரனுகிய ஆண்மயில் விசாலித்த சமுத்திரங்கள் கரைகளுடைந்து ஒன்ருய்க் கலக்கும் படியும், பெரிய மேரு மலை இடியும்படியும், பூமி வெடிக்கும்படியும், அக்கினி பதை பதைப்புற்று அடங்கும்படியும், சுழல் காற்றுப் பதறும் படியும், சிறகுகளை அடித்துக் கொண்டும் அண்டமுகடு அதிரும்படியும், இடிக்தொகுதிகள் தடிப்புறும்படியும் சப்தித்துக் கொண்டும் உலாவித் திரிந்தது. (500)

ஒடுங்க=அடங்க. துடித்திட=பதற. துளக்குற=அதிர.

படத்தினில் உலகம் போற்றும் பணிக்கு இறை பதைப்பப் பாங்கர்
அடுத்திடு புயங்கம் முற்றும் அலமர அவனி கேள்வன்
இடத்து அமர்கின்ற பாம்பும் ஏங்குற விசும்பில் செல்லும்
உடற்குறை அரவும் உட்க உலாயது கலாப மஞ்ஞை.

பார் ஒடு விரிஞ்சன் தன்னைப் படைத்திடப் பல்நாள் மாயன்
கார் என வந்து முக்கட் கடவுளைப் பரித்ததே போல்
வீரர் உள் வீரன் ஆகும் வேல் உடைக் குமரன் தன்னைச்
சூர் உரு ஆகிநின்ற தோகை மேல் கொண்டது அம்மா.

## முருகப்பெருமானின் மயில்வாகனக் காட்சி

வெயில்விடும் அநந்தகோடி வெய்யவர் திரண்டு ஒன்றாகிப்
புயல் தவழ் கடவுள் வானில் போந்திடு தன்மையேபோல்
அயிலினையுடைய செவ்வேள் மரகதத்து அழகுசான்ற
மயில்இடை வைகி ஊர்ந்தான் மாகமும் திசைகள் முற்றும்.

நேமிகள் ஏழும் ஒன்றாய் நிமிர்ந்து எழும் வடவை முற்றும்
தாம் ஒருவடிவாய் அங்கண் சார்ந்திடு நிலைமை என்ன
மாமயில் உயர்த்துச் செறற வாகைவேல் வீரன் மீண்டு
தீமைகொள் அவுணன் மூதூர்ச் செருநிலத்து எல்லை பக்கான். (504)



தோகையையுடைய மயில், தனது படத்தின்கண் பூவுலக பாரத்தைச் சுமந்து கொண்டிருக்கும் ஆதிசேடன் வருந்தவும், அதன் பக்கங்களில் சூழ்ந்திருக்கும் அட்ட சர்ப்பங்களும் வருந்தவும், பூமி தேவிக்கு நாயகராகிய திருமாலுக்குச் சயனமாயமைந்த அனந்தன் என்னும் சர்ப்பம் ஏங்கவும், ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இராகு கேது என்னும் சர்ப்பங்களும் மனம் நடுங்கவும் உலாவித் திரிந்தது. (501)

போற்றும் = சுமக்கும். புயங்கம் = பாம்பு. கேள்வன் = நாயகன். உட்க = நடுங்க.

திருமால், பூவுலகத்தையும் பிரமதேவரையும் தாம் படைத்தற் பொருட்டு, காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதரை மேகத்தின் வடிவு கொண்டு பல நாட்களாகச் சமந்து நின்ற தன்மையைப்போலச், சூரனுடைய வடிவமாய் நின்ற ஆண்மயில், வீரருள் வீரராகிய வேலாயுதத்தையுடைய குமாரக் கடவுளைச் சுமந்தது. (502)

விரிஞ்சன் = பிரமா. பரித்தல் = தாங்குதல்.

ஒளியை வீசுகின்ற அநந்தகோடி சூரியர்கள் ஒன்றாய்ச் சேர்ந்து ஒருவடிவு கொண்டு, மேகங்கள் சஞ்சரிக்கும் சிறந்த வானத்தின்மேல் உதயம் செய்த தன்மையே போல, வேற்படையைத் தாங்கிய முருகக் கடவுள், மரகத இரத்தினம் போன்ற அழகிய மயில் வாகனத்தில் வீற்றிருந்து ஆகாயத்திலும் திக்குகளிலும் செலுத்தியருளினர். (503)

வெயில் = ஒளி. புயல் = மேகம். அயில் = வேல். சான்ற = பொருந்திய. வைகி = வீற்றிருந்து. மாகம் = ஆகாயம்.

ஏழு சமுத்திரங்களும் சேர்ந்து ஏக சமுத்திரமாகியும், அவற்றில் உள்ள சுவாலிக்கின்ற வடவாமுகாக்கினிகள் எல்லாம் சேர்ந்து ஒரே திரளாகியும், யுத்த பூமியில் வருகின்ற காட்சியைப் போல, சூரனாகிய நீலமயிலின் மீதிவர்ந்து, வெற்றி வேல் வீராகிய சுப்பிரமணியக் கடவுள், சூரபன்மனது இராசதானியாகிய மகேந்திரத்தில் உள்ள யுத்த களத்தில் வந்து சேர்ந்தருளினர். (504)

வடவை = ஊழித்தீ. மா = நீல நிறம். செரு = யுத்தம்.

## முருகப்பெருமான் அக்கினி தேவனுக்கும் இந்திரனுக்கும் பழைய உரு நல்குதல்

புக்குள குமரமூர்த்தி பொறிமயில் உருவமாயும்
குக்குடமாயும் நின்ற அமரரைக் குறித்து நோக்கி
மிக்க நும் இயற்கையாகி மேவுதிர் விரைவில் என்ன
அக்கணம் அவரும் தொல்லைவடிவு கொண்டு அடியில்
வீழ்ந்தார். (505)

வள்ளலை வணங்கிப் பல்கால் வழுத்தியே தொழுது தத்தம்
உள்ளமும் புறத்தில் என்பும் உருகிட விழியில் தூநீர்
தள்ளுற உரைகள் முற்றும் தவறிடப் பொடிப்ப யாக்கை
கள் உணவுற்ற வண்டில் களிமகிழ் சிறந்து நின்றார்.

வீசுறு சுடர்வேல் ஐயன் வெய்யசூர் முதலைச் சாடித்
தேசுறு மஞ்ஞை ஊர்ந்து வந்தது தெரிந்து போர்செய்
காசினி இடையே நின்ற கணங்களும் வீரர் யாரும்
ஆசுறும் இளவலும் சென்று அடிதொழுது ஆர்த்துச்
சூழ்ந்தார். (507)



குமாரக் கடவுள் மயில் வடிவமாகியும் கோழி வடிவமாகியும் நின்ற இந்திரனும் அக்கினியும் ஆகிய இரு தேவர்களையும் விதந்து பார்த்தருளி, சிறந்த உங்கள் இயற்கை வடிவங்களைப் பெறக்கடவீர் என்ன, உடனே அவ்விருவரும் தமக்குரிய இயற்கை வடிவங்களைப் பெற்று, குமாரக் கடவுளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர்கள். (505)

பொறி = புள்ளி. குக்குடம் = கோழி. மிக்க = சிறந்த.

அருள் வள்ளலாகிய ஆறுமுகப் பெருமானைப் பலதரம் விழுந்து வணங்கி, மனமும் எலும்புகளும் நெக்குருகவும், ஆனந்தக் கண்ணீர் கண்களினின்றும் சொரியவும், சொற்கள் எல்லாம் தடுமாறுதல் அடையவும், உடம்பு உரோமாஞ்சிதம் கொள்ளவும், தேனுகிய உணவை உண்ட வண்டுகள் போலப் பெருமகிழ்ச்சியுடன் நின்றார்கள். (506)

வழுத்தி = தோத்தரித்து. பொடிப்ப = ரோமஞ் சிலிர்க்க.
உற்ற = உட்கொண்ட. களி = களிப்பு.

ஒளியை வீசுகின்ற வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியப் பெருமான், கொடியவனுகிய சூரபன்மனைச் சங்கரித்து, ஒளி மிகுந்த மயில் வாகனமாக்கி, அதன் மீது இவர்ந்து வந்த தன்மையை யுத்தகளத்தில் நின்ற பூதர்களும், வீரவாகு தேவரும், வீரர்களும் கண்டு பெருமானுடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, ஆனந்த மிகுதியினுல் ஆரவாரஞ் செய்து கொண்டு சூழ்ந்து நின்றார்கள். (507)

சாடி = கொன்று. காசினி = பூமி. ஆசு = குற்றம்.

சூரபன்மன் வதைப் படலம் முற்றுப்பெற்றது.
முருகக் கடவுள் திருவடி வாழ்க.
திருச்சிற்றம்பலம்.

# தேவர்கள் போற்று படலம்

நேர் ஒருசிறிதும் இல்லா நின்மலன் தனது வேலால்
சூர் உடல் பிளந்து யாணர் மஞ்ஞையில் தோன்று காலைப்
பார் உலகு அயின்ற கண்ணன் பங்கயன் அமரர்கட்கோர்
ஆர் அமிர்து எய்திற்று என்ன அன்னது கண்டே
ஆர்த்தார். (1)

ஆர்த்தனர் எழுந்து துள்ளியாடினர் பாடா நின்றார்
போர்த்தனர் பொடிப்பின் போர்வை பொலங்கெழு பூவின்
மாரி
தூர்த்தனர் அருளை முன்னித் தொழுதனர் சுடர்வேல்
கொண்ட
தீர்த்தனை எய்திச் சூழ்ந்து சிறந்து வாழ்த்து எடுக்கல்
உற்றார் (2)

வேறு

கார் தடிந்து உய்க்கும் கனை கடலில் நீர்வறப்பப்
போர் தடிந்து செல்லும் புகர்வேல் தனை விடுத்துச்
சூர் தடிந்தாய் அன்றே தொழும் அடியேம் வல்வினையின்
வேர் தடிந்தாய் மற்று எமக்கு வேறோர் குறை உண்டோ.

மாறு முகம் கொண்டு பொரு வல்அவுணர் மாளாமல்
நூறு முகம் எட்டும் நோதக்கன புரியத்
தேறு முகம் இன்றித் திரிந்தேமை ஆள அன்றோ
ஆறு முகம் கொண்டே அவதரித்தாய் எம்பெருமான். (4)

நீதி முறை அதனில் நில்லா அசுரர் புரி
தீது பல உளவும் தீர்ந்தோம் பழி அகன்றோம்
வேத நெறி தொல்லை வெறுக்கை யொடு பெற்றனமால்
ஏதும் இலையால் எமக்கோர் குறை எந்தாய். (5)



மன் தவ அவுணர் வருத்திட இந்நாள் வரையும்
பொன்றினவர் என்னப் புலம்பித் திரிந்தன மால்
இன்று பகை மாற்றி எமக்கு அருள் நீ செய்கையினால்
சென்ற உயிர் மீண்ட திறம் பெற்றனம் ஐயா. (6)

செய்யும் அவனும் புலனும் செய்வித்து நிற்போனும்
எய்த வரும் பொருளும் யாவையும் நீயே என்கை
ஐய அடியேங்கள் அறிந்தனமால் அன்னதனால்
வெய்ய பவம் அகன்று வீடும் இனிக் கூடுதுமால். (7)

ஈண்டே எமருக்கிடர் செய் அவுணர் எலாம்
மாண்டே விளியும் வகை புரிந்து காத்தனையால்
வேண்டேம் இனியாதும் மேலாய நின் கழற்கே
பூண்டேம் தொழும்பு புகழேம் பிறர்தமையே. (8)

என்று இயம்பி எவரும் இனிது ஏத்துதலும்
கொன்னார் அயில் வேற்குமரன் அது கேளா
அந் நாரணன் விரிஞ்சன் ஆதியாம் வானோர்க்குத்
தன் ஆர் அருளின் தலைமை புரிந்தனனே. (9)

தேவர்கள் போற்று படலம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

## பிழையும் திருத்தமும்

| பக்கம் | உரை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 31 | 74 | நோகத்தினுல் | நோக்கத்தினுல் |
| 31 | 74 | ஆற்றிலின் | ஆற்றலின் |
| 29 | 93 | கிழித்துத்கொண்டு | கிழித்துக்கொண்டு |
| 53 | 130 | துணிபு | துணிவு |
| 63 | 152 | சூழல் | சுழல் |
| 75 | 181 | ஒளிந்திருக்கத்தக்கதோர் | ஒளித்திருக்கத்தக்கதோர் |
| 107 | 267 | திரக்காரத்தை | திருக்காரத்தை |
| 109 | 272 | பொற்ரேருடன் | பொற்றேருடன் |
| 127 | 316 | திருப்பிப் | திரும்பிப் |

---

| | | கருத்து |
|---|---|---|
| 25 | 56 | சூமி = முகபடாகம் |

---